# فرق دخيلة في الإسلام

جمع وإعداد : محمد رضوان محمد جنيد

(( خريج كلية الحديث الشريف والدراسات الإسلامية بالمدينة المنورة ))

# இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய பிரிவுகள்

அஷ்ஷைக்: எம். ஜே. எம் . ரிஸ்வான் (மதனி)

Π

**إن الحمد لله، نحمده ونستعينه ونستغفره، ونعوذ بالله من شرور أنفسنا، وسيئات أعمالنا، من يهد الله فلا مضل له، ومن يضلل فلا هادي له. وأشهد أن لا إله إلا الله، وحده لا شريك له، وأشهد أن محمدًا عبده ورسوله.**

((**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ حَقَّ تُقَاتِهِ وَلا تَمُوتُنَّ إِلَّا وَأَنْتُمْ مُسْلِمُونَ**)) **[آل عمران:102]**.

((**يَا أَيُّهَا النَّاسُ اتَّقُوا رَبَّكُمُ الَّذِي خَلَقَكُمْ مِنْ نَفْسٍ وَاحِدَةٍ وَخَلَقَ مِنْهَا زَوْجَهَا وَبَثَّ مِنْهُمَا رِجَالًا كَثِيرًا وَنِسَاءً وَاتَّقُوا اللَّهَ الَّذِي تَسَاءَلُونَ بِهِ وَالأَرْحَامَ إِنَّ اللَّهَ كَانَ عَلَيْكُمْ رَقِيبًا**)) **[النساء:1]**.

((**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَقُولُوا قَوْلًا سَدِيدًا يُصْلِحْ لَكُمْ أَعْمَالَكُمْ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَمَنْ يُطِعِ اللَّهَ وَرَسُولَهُ فَقَدْ فَازَ فَوْزًا عَظِيمًا**)) **[الأحزاب:70]**.

## நுழைவாயில்.......

புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தமானது. அவனது அருளும், சாந்தியும் நமது தூதரும், வழிகாட்டியுமான முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் தோழர்கள், மற்றும் நல்லடியார் அனைவர் மீதும் உண்டாகட்டுமாக!

## வழிகெட்ட பிரிவுகளின் வருகை

இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளையும், சித்தாந்தங்களையும் சீர்குலைக்கும் அனைத்து வழிகெட்ட பிரிவுகளின் தோற்றம், வருகை பற்றி ஆய்வு செய்தால் அவை ஒவ்வொன்றும் குர்ஆனின் வசனங்களையும், நபிமொழிகளையும் தமது சித்தாந்தங்களுக்கும், கோட்பாடுகளுக்கும் ஆதாரங்களாக சித்தரித்துக் கொண்டு முளைத்திருப்பதையும், பிரச்சாரம் செய்திருப்பதையும் பார்க்கின்றோம். இவற்றின் பின்னணியில் யூதக்கும்பலின் மறைமுகமான சதி இருந்தே வந்திருக்கின்றது என்பது வெள்ளிடை மலை.

**‘இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய பிரிவுகள்’** என்ற தலைப்பில் முன்வைக்கப்படும் இந்த ஆய்வில் அல்லாஹ்வின் திருநாமங்கள், பண்புகளில் ‘அஸ்மா, வஸ்ஸிபாத்தை’ திரித்தும், பொருள் மாற்றம் செய்தும், மறுத்தும் கூறும் ‘ஜஹ்மிய்யா’ சிந்தனைத் தாக்கம் பெற்ற அஷ்அரிய்யா என்ற பிரிவினர், கப்ரு வணங்கிகள், ஹவாரிஜ்கள், ஷீஆக்கள், காதியானிகள், போராக்கள், ஆகிய பிரிவுகள் பற்றியும், இஸ்லாமியக் கொள்கையில் அவை ஏற்படுத்தியுள்ள தாக்கம் பற்றியும் கூற இருக்கின்றோம்.

இஸ்லாமிய வரலாற்றின் வழிகெட்ட பிரிவுகளின் தரப்படுத்தல் வரிசையில் ‘முதலாவதாக ஹவாரிஜ்கள், அதன் பின்னர் ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்கள், பின்னர் அலி (ரழி) அவர்களைக் குறைகாணும் ‘நவாஸிப்கள்’, அதன் பின்னர் ‘கத்ரிய்யா’, ஜப்ரிய்யா, முஃதஸிலா, ஜஹ்மிய்யா, ஆகிய பிரிவுகள் இஸ்லாமிய ஆய்வாளர்கள் மூலம் தரப்படுத்துவதைப் பார்க்க முடிகின்றது. நாம் மேற் சொன்ன இந்தப்பிரிவுகளுடன் கப்று வணங்கிகளை நமது நூலின் முதல் பிரிவாக இனம் காட்டியுள்ளோம்.

இவர்களை காரசாரமாக விமர்சனம் செய்த அறிஞர் பெருமக்கள், நபி (ஸல்) அவர்களின் இறுதிக் காலத்தில் நபித்துவத்தை வாதாடிய பொய்யன் முஸைலமாவின் நபித்துவ வாதம் பற்றி பேசாமல் விட்டுவைத்துள்ளனர் என்பதை அறிவீர்கள்.

மாவீரர் அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களால் முளையிலேயே அவர்கள் கிள்ளி எறியப்பட்டு, அவர்களின் கொட்டம் அடக்கப்பட்டதால் பொய் நபித்துவம் பற்றி அக்கால அறிஞர்கள் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை என்றே தெரிகின்றது. குப்பையை மீண்டும் கிளறுவதா? என்ற பாணியில் விட்டுவைத்துள்ளார்கள் போலும். (அல்லாஹ்வே மிக அறிந்தவன்).

எனினும், காதியானிகள் என்ற நவீன முஸைலமாக்களது வாரசுகளின் ஊடுருவல் நமது நாட்டில் பரவலாகக் காணப்படுவதாலும், மார்க்க அடிப்படை தெரியாத, படித்த மக்கள் பலர் அவர்களின் வலையில் சிக்கிக் கொள்வதாலும் காதியானிகளைப் பற்றிய ஆய்வும் நமது இந்த நூலில் இடம் பெறுகின்றது.

இந்த நூலைப்படிக்கும் நீங்கள் இதைத் தொகுத்து எழுதிய எனக்காகவும், எனது குடும்பத்திற்காகவும், சர்வதேச முஸ்லிம்களுக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள். அல்லாஹ் நமது பணியை அங்கீகரித்து அருள் செய்வானாக!

**இவன்:**

**எம். ஜே. எம். ரிஸ்வான் (மதனி)**

E-mail: rizwanmadani71@yahoo.com

# வழிகெட்ட பிரிவுகள் பற்றி

இஸ்லாத்தின் பெயரால் பல நூறு பிரிவுகள் தோன்றி இஸ்லாமிய மார்க்கத்தைச் சீரழித்திருக்கின்றன என்பதை அவற்றின் வரலாறுகளைப் பற்றிப்படிக்கின்ற போது அறிய முடிகின்றது.

அவற்றில் சில மார்க்கத்தில் புதிய, புதிய திக்ர்கள், தொழுகைகள், அவ்ராதுகள், வாளாயிப்கள் எனப்படும் மார்க்க அம்சங்களை தோற்றுவித்து மக்களை வழிகெடுத்திருக்கின்றன.

திஜானிய்யா, சூபிய்யா, கப்றுவணங்கிகள், ஷீஆ, பஹாயிய்யா, போரா, பாபிய்யா போன்ற பிரிவுகள் இதில் குறிப்பிட முடியும். இவற்றில் மற்றும் சில பிரிவுகள் சிந்தனை ரீதியாக மக்களைத் தூண்டி வழி கெடுத்திருக்கின்றன. ஹவாரிஜ், மு∴தஸிலா, கத்ரிய்யா, ஜப்ரிய்யா, ஜஹ்மிய்யா போன்ற பிரிவுகளை இதில் குறிப்பிட்டுக்காட்ட முடியும்.

இந்தப் பிரிவுகளில் சிலது பலவீனமான, ஆதாரமற்ற, இட்டுக்கட்டப்பட்ட செய்திகளை ஆதாரமாகக் கொண்டு தமது வழியை தேர்வு செய்திருக்கின்றன. மற்றும சிலது குர்ஆனுக்கும், ஹதீஸு க்கும் மாற்றமான விளக்கங்களைக் கூறி மக்களை வழி கெடுத்திருக்கின்றன.

இவை பற்றிய தகவல்கவளை அந்தந்த காலத்து அறிஞர்கள் எதிர்த்துப் போர்க் கொடி தொடுத்துள்ளனர். இந்தப்பிரிவுகளின் வழிகேட்டின் வகைகள் பற்றிய விபரங்களை தமது நூல்களிலும் பதிவு செய்துள்ளனர். ஒரு சில அறிஞர் பெருமக்கள் தனித்தொகுப்பாக நூல்கள் எழுதியுள்ளனர்.

ஹதீஸ் கலை அறிஞர்களின் கூற்றுக்கள் அறிவிப்பாளர் பற்றிய தகவல்களைத் தரும் நூல்களிலும், ஹதீஸ்களுக்கு விளக்கமளிக்கின்ற அறிஞர்களின் நூல்களிலும் மடைதிறந்த வெள்ளம் போல் காணப்படுகின்றன.

இமாம்களான இப்னு கஸீர் அவர்களின் அல்பிதாயா வந்நிஹாயா, இமாம் ஸஹபி அவர்களின் ஸியர் அ∴லாமின்னுபலா, இப்னு ஹஜர் அல்அஸ்கலானி அவர்களின் பத்ஹு ல்பாரி, இமாம் நவவி அவர்களின் ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் போன்ற நூல்களை இதற்கு ஆதாரமாகக் கூற முடியும். தவறான கொள்கைகளை இனம் காட்டிய நூற்றுக்கணக்கான நூல்களில் முக்கிய சில நூல்கள் உங்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. அவற்றை நீங்கள் பார்த்துப் பயன் பெறலாம்.

இமாம் அப்துல் காதிர் அல்பக்தாதி (ரஹ்) அவர்கள் **'அல்பிரக் பைனல் பிரக்** என்ற நூலையும், ஷஹ்ருஸ்தானி என்பவர் 'அல்மிலல் வன்னிஹல்' என்ற தனியான நூலையும் ஆரம்ப காலத்தில் எழுதி இவ்வாறான பிரிவுகள் பற்றித் தெளிவாக அடையாளம் காட்டி இருக்கின்றனர்.

அதே போன்று மற்றும் இப்னு தைமிய்யா அவர்கள் 'மின்ஹாஜு ஸ்ஸு ன்னா' 'ஷரஹ்அகீதத்தில் அஸ்∴பஹானிய்யா' 'ரிஸாலா அத்ததம்முரிய்யா' போன்ற பல தொகுப்புக்களை எழுதி இருக்கின்றார்கள். 'இஜ்திமாவுல் ஜு யூஷில் இஸ்லாமிய்யா' என்ற தலைப்பில் அவரது மாணவரான இப்னுல் கைய்யூம் அவர்கள் பெறுமதிமிக்கதோர் தொகுப்பை வெளியிட்டிருக்கின்றார்கள்.

இதுபோன்ற அறிஞர்களின் நூற்களையும், மற்றும் பல அறிஞர்களின் ஆய்வுகளில் இருந்து வழி தவறிய பிரிவுகளில் மிக முக்கியமானது என நாம் தெரிவு செய்தவற்றின் பெயர்களை மாத்திரம் இங்கு தரப்படுகின்றோம்.

அவற்றில் சில அழிந்து விட்டன, மற்றும் சில வேறு பிரிவுகளுடன் இணைந்து கொண்டன. மற்றும் சிலவற்றின் சிந்தனைப்பரிநாமம் தற்போதும் முஸ்லிம்கள் மத்தியில் ஊடுருவிக்காணப்படுகின்றன. அவற்றையும் நாம் அடையாளம் காட்டி விபரித்துள்ளோம்.

வழி கெட்ட பிரிவுகள் தோன்றிய போதெல்லாம் நபித்தோழர்களினதும், தாபியீன்களினது நிலைப்பாடு பற்றியும், இமாம்களின் பங்களிப்புக்கள் பற்றியும்,

அவர்களின் நூல்கள் பற்றியும் நாம் பின் வரும் தொடர்களில் சுருக்கமாகவும், தெளிவாகவும் சுட்டிக்காட்டி இருக்கின்றோம்.

## முக்கிய பிரிவுகளின் பெயர்கள்.

பொய் நபித்துவத்தை வாதிட்ட (முஸைலமாக்கள்) தற்போதைய காதியானிகள், ஹவாரிஜ், முர்ஜிய்யா, கத்ரிய்யா, ஷீஆ (ராபிழா), முஃதஸிலா, ஜஹ்மிய்யா, அஷாயிரா (அஷ்அரிய்யா), மாத்ரூதிய்யா, கர்ராமிய்யா, முஷப்பிஹா, முஅத்திலா, புகைரிய்யா, ளராவிய்யா, ஹர்பிய்யா, அத்திஜானிய்யா, அல்குர்ஆனுக்கும், நபிமொழிகளுக்கும் உள், மற்றும் வெளி அர்த்தங்கள் உண்டு என வாதிடும் **பாதினிய்யா.**

இவற்றில் **ஜஹ்மிய்யா, கத்ரிய்யா, ஹவாரிஜ், முஃதஸிலா** ஆகிய பிரிவுகள் இவை அனைத்துக்கும் தலையான பிரிவுகள் என இமாம் இப்னு (ரஹ்) அவர்களால் வர்ணிக்கட்டுள்ளது.

பாதினிய்யாக்கள் ஷீஆக்களில் இருந்து பிரிந்த ஒரு பிரிவாகும். இஸ்லாமிய அடிப்படைக்கு மாற்றமான பல சித்தாந்தங்களை தோற்றுவிக்க அது வழிகோலியது.

இமாமத்தைப் பிரதிபலித்தே இவர்களின் செயற்பாடுகள் அமைந்தன. இவர்கள் இஸ்மாயீலிய்யா, கராமித்தா, இஹ்வானுஸ்ஸஃபா, ஹஷ்ஷாஷுன், சுலைஹிய்யூன், பாதிமிய்யா, அல்லது பாதிமிய்யூன், நுஸைரிய்யா, துரூஸ் போன்ற பெயர்களில் அழைக்கப்படுகின்றனர்.

இஸ்லாமிய உலகில் தமெக்கென உறுப்பினர்ளைக் கொண்ட இந்தப்பிரிவுகள் முஸ்லிம் உலகை திகில் கொள்ளச் செய்கின்ற நகிழ்வுகளை உண்டு பண்ணியுள்ளனர்.

இந்தப் பிரிவில் இருந்தே பாபிய்யா, பஹாயிய்யா, காதியானி, போரா போன்ற பிரிவுகள் உண்டாகின. இவர்கள் இன்தோனேஸியா, இந்தியா, இலங்கை, பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், ஈரான் போன்ற நாடுகளில் காணப்படுகின்றனர். இந்தப்பிரிவினர் ஒவ்வொரு பிரதேசத்திலும் ஒரு பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றனர் என்பதைக் கவனத்தில் கொள்ளவும். ஆனால் பாதினிய்யா என்பது இந்தப் பிரிவுகளின் மொத்தமான பெயராகும்.

இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய பிரிவுகளில் ஷீஆக்களில் விபரமற்றவர்கள் அதிகம் காணப்படுவதால் ஷீஆ இஸலாத்தில் உள்ள இமாமத்தைக் காரணம் காட்டியே இவ்வளவு பல பிரிவுகள் அதற்குள்ளிருந்தே தோன்றியுள்ளதாக இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

இவை ஒவ்வொரு பிரிவும் பல பிரிவுகளாயின. எனினும் இவைகள் அனைத்தும் இப்போது இல்லை. என்றாலும் இவற்றின் கோட்பாடுகள் ஏனைய பிரிவுகள் மத்தியில் ஊடுருவிக் காணப்படுவதைப் பார்க்கின்றோம்.

உதாரணமாக ஒரு மனிதன் முக்தி நிலையை அடைகின்ற போது கடமைகள் கடமையற்றவனாக மாறுவான் என்ற கற்பனைக் கோட்பாட்டை உருவாக்கிய பாதினிய்யாக்களுக்கும், சூபிகள், அல்லது தப்லீக் இயக்கத்தினர் ஆகிய பிரிவுகளுக்கும் மத்தியில் காணப்படும் நெருங்கிய உறவுகளையும், ஷீஆக்களுக்கும், கப்று வணங்கிகளுக்கும் இடையில் காணப்படும் கருத்தொற்றுமைகளையும், முஃதஸிலா, ஹவாரிஜ் ஆகியோருக்கும், இரு எழுத்து அழைப்பாளரைப் பின்பற்றும் தவ்ஹீத்வாதிகளுக்கும் இடையில் காணப்படும் உறவையும் பொய்யன் பின் முஸைலமாவுக்கு வால்பிடித்தவர்ளுக்கும், காதியானிகளுக்கும் இடையில் காணப்படும் உடன்பாட்டையும் குறிப்பிடலாம்.

இவற்றில் இஸ்லாத்தை சீர் குலைக்கின்ற முக்கிய பிரிவுகளாக நாம் கருதியவைகளை மாத்திரம் இனம் கண்டு இங்கு எடுத்தெழுகின்றோம். சுன்னத் ஜமாத் பெயரில் வழிகெட்ட கப்று வணங்கிகள், காதியானிகள், ஷீஆக்கள், ஹவாரிஜ்,

மு:.தஸிலா, அஷ்அரிய்யா, ஜஹ்மிய்யா, போரா ஆகிய முக்கிய சில பிரிவுகள் பற்றி மாத்திரம் இங்கு எடுத்தெழுதப்படுகின்றன.

நமது நாட்டு அரசாங்கப்பாடசாலைகளில் கல்வி கற்கும் கல்விப் பொதுத்தராதர உயர் தர முஸ்லிம் மாணவர்களையும், முஸ்லிம் சமூகத்தினையும் இணைத்த ஒரு நூலாக இருக்க வேண்டும் என்ற எண்ணமே இவ்வாறு செய்யக்காரணமாகும். அல்லாஹ் அந்த எண்ணத்தை நிறைவேற்றி வைப்பானாக!

நமது இந்த தொடரில் பைஅத் (உமர் அலி) ஜமாத், அஹ்லுல் குர்ஆன், வஹ்ததுல் உஜூ த், அஹ்லுல் ஹுலூல், வல் இத்திஹாத், சூபிய்யா, தரீக்காக்கள் போன்ற வழிகெட்ட பிரிவுகள் பற்றிய எவ்வித பேச்சும் இன்றி அவை சுதந்திரமாக விட்டு வைக்கப்பட்டுள்ளன. இவற்றுடன் தப்லீக் ஜமாத்தும் இணைக்கப்பட்டு இன்ஷா அல்லாஹ் இரண்டாவது பகுதியில் வெளிவர இருக்கின்றன. அதில் நீங்கள் விரிவாகத் தெரிந்து கொள்ளலாம். இன்ஷா அல்லாஹ்

## பெயர்கள் வரக்காரணம்:

இந்தப் பிரிவுகளுக்கான பெயர்கள் அந்த சிந்தனையை முதல் முதலில் பிரதிபலித்தவர், அல்லது அவரது கருத்தைப்பிரதி பலித்த பிரபல்யமிக்க மாணவர், அல்லது அந்தக்கருத்தின் அடிப்படையில் பெயர்கள் சூடப்பட்டிருக்கின்றன என்பதை அறிந்து கொள்ளவேண்டும். உதாரணமாக கத்ரிய்யா என்ற பிரிவனர் **‘விதி’** கத்ரை மறுத்ததனால் வந்ததாகும். அந்த சிந்தனையை முதன் முதல் முதலில் கைலான் அத்திமஷ்கி என்பவனே முன்வைத்தவன். அவனது பெயரில் அந்தப் பிரிவின் பெயர் இடம் பெறவில்லை.

அவ்வாறே, இமாமிய்யாவிப் பிரிவான ஷீஆக்களை எடுத்துக் கொண்டால் நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் அலி (ரழி) அவர்களே ஆட்சிக்குத் தகுதியானவர் என்ற கருத்தை முன்வைக்கின்ற காரணத்தால் **‘இமாமிய்யா’** என்ற பெயரில் அழைக்கப்படுகின்றனர். ஹவாரிஜ்களின் பெயருக்கான காரணமும் அதே போன்றுதான். இவ்வாறு ஒவ்வொரு பிரிவும் ஒரு காரணப் பெயர் அல்லது அதை தோற்றுவிதடதவரின் பெயரில் அழைக்கப்படும். இதன் விளக்கம் பற்றி அதன் தொடர்களில் காண்க.

### சரியான வழியைப் பின்பற்றுவதன் அவசியம்.

மனிதன் சிந்தனையுடையவனாக படைக்கப்பட்டிருக்கின்றான். ஆனால் அது குறுகியதாகவே உள்ளது. அதனால் அவனால் இயற்றப்படும் சட்டங்களும், ஒழுங்குகளும் குறைவுள்ளதாகவே காணப்படும். ஆகவே அவன் எவ்வித குறைவுமற்ற, சகலதையும் அறிந்த ஒரு வழிகாட்டல் பக்கம் தேவையுடையவனாக இருக்கின்றான்.

அந்த அடிப்படையில் இந்த உலகை சீராக நிர்வகிக்கும் அல்லாஹ்வின் வழிகாட்டலைத்தவிர வேறு எந்த வழிகாட்டலாலும் இக்குறையை நிவர்த்தி செய்ய முடியாது.

**‘நீங்கள் இருவரும் ஒன்றாக இங்கிருந்து இறங்குங்கள், என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வரும். எனவே எவர் எனது நேர்வழியைப் பின்பற்றுகின்றார்களோ அவர்கள் மீது எவ்வித பயமும் இல்லை, அவர்கள் கவலைப்படவும்மாட்டார்கள்’** (அத்: அல்பகரா: வச: 38), (தாஹா வசனம்.123)

எனது நேர்வழியைப் பின்பற்றுபவர் வழிதவறிவிடவோ, துர்ப்பாக்கியவானாகவோ ஆகிவிடமாட்டார். (ஆலு இம்ரான் 202-ல் **‘எவர் அல்லாஹ்வைப் பற்றிக் கொள்கின்றாரோ நிச்சயமாக அவர் நேரான வழியில் செலுத்தப்பட்டுவிட்டார்’** என்றும் கூறப்பட்டுள்ளதை அவதானித்தால் மனித வாழ்வில் அல்லாஹ்வின் நேர்வழியின் அவசியத்தை புரிந்து கொள்ள முடியும்.

## வழிகேடுகளை வரவழைப்பவை.

### மனோ இச்சை.

நேர்வழிக்கு பிரதான தடைக்கல்லாக உள்ளதும், உலகில் வழி கெட்ட கொள்கைகள் விரிவடைவதற்கும் மனோ இச்சைகளும் ஒரு காரணமாகும். வழிகேடுகளும், சீரழிவுகளும் நிகழ பெரிதும் பங்காற்றும் இந்த 'மனோ இச்சை' பற்றிய தெளிவும், எச்சரிக்கையும் ஒரு முஸ்லிமிடம் இருக்க வேண்டும்.

நபியே நீர் அவர்களது மனோ இச்சைகளைப்பின்பற்ற வேண்டாம். நாம் உங்கள் ஒவ்வொருவருக்கும் மார்க்கத்தையும், வழிமுறையையும் ஏற்படுத்தியுள்ளோம்.

**(அல்மாயிதா. வச: 48)**

**உமக்கு அறிவு ஞானம் வந்த பின்னரும் நீர் அவர்களது மனோ இச்சைகளைப்பின்பற்றினால் அல்லாஹ்விடமிருந்து எந்த உதவியாளனோ, பாதுகாவலனோ உமக்கில்லை.**

**(அத்: அர்ரஃத். வச: 37).**

**சத்தியம் அவர்களது மனோ இச்சைகளைப் பின்பற்றினால் வானங்களும், பூமியும், அவற்றில் இருப்பவையும் கெட்டிருக்கும்.**

**(அத்: அல்முஃமினூன். வச: 71)**

அவை நீங்களும், உங்கள் மூதாதையரும் சூட்டிக் கொண்ட பெயர்களே அன்றி வேறில்லை. அல்லாஹ் இதற்கு எந்த ஒரு ஆதாரத்தையும் இறக்கி வைக்கவுமில்லை. அவர்கள் வெறும் யூகங்களையும், மனம் விரும்புவதையுமே பின்பற்றுகின்றனர். (எனினும்) இவர்களது இரட்சகனிடமிருந்து நேர்வழி இவர்களுக்கு வந்தேயுள்ளது. (அத்: அந்நஜ்ம். வச:23)

மனோ இச்சையில் இருந்து தூர விலகி இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் இது போன்ற பொருளில் அமைந்த பல வசனங்கள் அல்குர்ஆனில் இடம் பெறுவதைப்பார்க்கின்றோம்.

இஸ்லாத்தில் தோன்றிய குழுக்களை எடுத்துக் கொண்டால் மனோ இச்சை முதன்மைக்காரணிகளில் ஒன்றாக இருப்பதை அவதானிக்கலாம். மனோ இச்சை காரணமாகவே ஹவாரிஜ்கள், ராபிழாக்கள், (ஷீஆக்கள்) தோன்றினர். ஜஹ்மிய்யாக்கள் முளைத்தனர், முஃதஸிலாக்கள் வெளிப்பட்டனர். முர்ஜியாக்கள், (ஈமான் மட்டும் போதும் என்போர்) கத்ரிய்யாக்கள், (கத்ரை மறுப்போர்) பரவினர். ஜப்ரிய்யாக்கள் (அடியானுக்கு சுய தெரிவு இல்லை என்போர்) வழிகெட்டனர். சமுதாயம் பல்வேறு பிரிவுகளாகவும், குழுக்களாகவும் மாறியது. ஒவ்வொரு குழுவும் தான் கொண்டதைக் கொண்டு மகிழ்ச்சியுறுகின்றனர். மனோ இச்சையினால் எத்தனை மார்க்கங்கள்தான் திரிபுபடுத்தப்பட்டும், மாற்றப்பட்டும், மனிதனை வழிகேட்டில் தள்ளியும் விட்டன!

### ∃ அல்குர்ஆனைத் தவறாகப் புரிதல்.

இந்தப்பிரிகள் அல்குர்ஆனையும், ஹதீஸையும் தவறாகப்புரிந்தோ, அல்லது வியாக்கியானம் செய்தோ, அல்லது தமது வழிகேட்டுக்கு ஏதுவாக அவற்றை வளைத்துக் கூறியோ வழிகெட்ட தோற்றம் பெற்றிருக்கின்றன.

**இது இஸ்லாமிய அடிப்படை நம்பிக்கை கோட்பாட்டை தகர்க்கக் கூடியதாக இஸ்லாமிய வட்டத்தை விட்டும் வெளியேற்றக் கூடியதாக கொள்ளப்படும்.**

மிர்ஸா குலாம் அஹ்மத் காதியானி என்ற பொய்யன் ஒரு நபி, உறுதி வரும் வரை வணங்கினால் போதும் எனக் கூறி இஸ்லாமிய சட்டங்களை பாழடித்தல்,

அல்லாஹ் எங்கும் உள்ளான், எல்லாமாக உள்ளான், அனைத்தும் அவனே, அவன் சுத்த சூனியம், அல்குர்ஆனில் குறைவு இருக்கின்றது, அது அவனது யதார்த்தபூர்வமான பேச்சல்ல, அவன் மனிதன் போன்றவன் போன்ற சித்தாந்தங்களைக் குறிப்பிட முடியும்.

**அவர்களின் பொருட்களில் இருந்து ஸதகாவை (ஸகாத்தை) எடுப்பீராக! அது அவர்களைப் பரிசுத்தப்படுத்தி, தூய்மைப்படுத்தும். இன்னும் அவர்களுக்காக 'ஸலவாத்' பிரார்த்தனை செய்வீராக! நிச்சயமாக உமது பிரார்த்தனை அவர்களுக்கு அமைதியாகும். அல்லாஹ் நன்கு செவியேற்பவன். யாவற்றையும் அறிந்தவன். (அத்தவ்பா. வச: 103)** என்ற வசனத்தில் இடம் பெறும் வசனத்தில் நபியின் பிரார்த்தனைதான் அமைதியைக் கொண்டுவரும். அதனால் அவர்கள் மரணித்த பின் ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை. என்ற ஒரு தலைப்பட்சமான முடிவிற்கு ஸகாத் கொடுக்க மறுத்தமை,

ஈஸாவே நிச்சயமாக நான் உன்னைக் கைப்பற்றி, உன்னை என்னளவில் உயர்த்திக் கொள்வேன், நிராகரித்தோரை விட்டும் உன்னை தூய்மைப்படுத்தி, மறுமை நாளில் உன்னைப் பின்பற்றியோரை நிராகரித்தோரை விட உன்னை உயர்வாக்குவேன். (3: 55) என்ற வசனத்தில் இடம் பெறும் ' தவப்பா' என்ற மரணிக்கச் செய்தல் என்ற பொருள் பொருத்த மற்றதாக இருந்தும் மரணிக்கச் செய்வேன். எனப் பொருள் கொடுப்பதுடன் தமது கூற்றுக்கு ஆதாரமாக பின்வரும் வசனத்தை முன்வைத்தல்.

**'எனது இரட்சகனும், உங்கள் இரட்சகனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள் என்று நீ எனக்கு எனது கட்டளையிட்டதையே நான் அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். என்னைக் கைப்பற்றிய போது நீயே அவர்களை கண்காணிப்பவனாக இருந்தாய். நீ யாவற்றையும் பார்ப்பவன். (அல்மாயிதா. வச:117) என்ற வசனத்தில் ஈஸா நபி உலகுக்கு மீண்டும் வந்து உயிர்வாழ்ந்த பின் மரணிப்பதை எடுத்துக் கூறும் வசனத்தை ஈஸா நபி 'மரணித்து விட்டார்கள்' எனப் பிரச்சாரம் செய்தல்** போன்ற அம்சங்களைக் குறிப்பிட முடியும்.

### ∃ தனது அறிவுக்கு முக்கியத்துவம் வழங்குதல்.

ஆதம் (அலை) அவர்களுக்கு சுஜூத் செய்யுமாறு அகிலங்களின் அதிபதியாகிய அல்லாஹ்வால் பணிக்கப்பட்ட சைத்தான் சுஜூத் செய்ய மறுத்ததான். அவனிடம் அதன் காரணம் பற்றி கேட்கப்பட்டது, நீ என்னை நெருப்பினால் படைத்துள்ளாய், ஆதமை களிமண்ணால் படைத்துள்ளாய். களிமண்ணால் படைக்கப்பட்ட ஒருவனுக்கு நான் சுஜூத் செய்வதா என்ன! என அல்லாஹ்விடம் சைத்தான் கூறியதைக் கவனித்தால் தனதறிவிற்கு முக்கியத்துவம் அளித்து, நரகத்திற்கு இடத்தை அவனே தேடிக்கொண்டதைப் பார்க்கின்றோம்.

### பிடிவாதமும், பரம்பரை வாதமும்.

பிடிவாதம் ஒரு பயங்கரவாதம் போன்ற நோயாகும். பிர்அவ்ன் மூஸா (அலை) அவர்களை நம்ப மறுத்தற்கும், காரூன் இஸ்லாத்தின் இணைய மறுத்ததற்கும், அபூஜஹ்ல் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளாதிருக்கவும், யூதர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளாதிருக்கவும், மக்காவாழ் காபிர்கள் இஸ்லாத்தில் இணைய மறுத்ததற்கும் இவைதானம் காரணமான இருந்தன என்பதை அல்குர்ஆனை படிக்கின்ற போது அறிந்து கொள்ள முடிகின்றது.

### ஒருவரை கண்மூடித்தனமாக பின்பற்றல்.

இது காபிர்களிடம் அடிப்படையில் காணப்பட்டதால்தான் நபிமார்களை அவர்கள் எதிர்த்தார்கள். இஸ்லாத்தில் இணைய மறுத்தார்கள். அல்லாஹ்வின் அழிவை சந்தித்தார்கள்.

இந்தப்பண்பு அவர்களிடம் காணப்படுவது ஆச்சரியமான ஒன்றல்ல. ஆனால் இஸ்லாமியப் பெயரை வைத்துக் கொண்டு ஊர்வழமை, பரம்பரைப் பழக்கம், சாக்குப் போக்கு, மதிப்பை இழக்க நேரிடும் போன்ற அற்ப காணங்களைக் கூறிக் கொண்டு நேர்வழியை

விட்டும் விலகி வாழும் ஒரு சாராரைப் பார்க்கின்றோம். குர்ஆன், ஹதீஸ் பேசும் ஒரு கூட்டத்திடம் கூட இந்த நிலை காணப்படுவதுதான் ஆச்சரியத்திலும், ஆச்சரியம்.

## முன்னோர்களின் (ஸலபுக்களின்) அடிப்படைக் கோட்பாட்டிலிருந்து விலகுதல்.

அல்குர்ஆனையும், அல்ஹதீஸையும் அதிமதிகம் அறிந்தவர்கள் ஸஹாபாக்களும், அவர்களின் வழி வந்தவர்களுமே! அவர்களின் விளக்கத்துடன் குறிப்பாக அகீதாவுடன் தொடர்புடைய விளக்கத்தோடு நமது விளக்கம் முரண்படுகின்ற போது நாம் அவர்களின் விளக்கத்தையே முன்னிலைப்படுத்த வேண்டும்.

உதாரணமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்ற ஹதீஸ், அல்லாஹ் அடிவானத்திற்கு இறங்குகின்றான் என ஸஹாபாக்களால் அறிவிக்கப்படும் ஹதீஸ்கள் போன்றவைகளைக் குறிப்பிடாலம்.

வஹியின் காலத்தில் வாழ்ந்த சிறந்த மக்களால் அறிவிக்கப்படும் இது போன்ற ஹதீஸ்கள் அவர்களின் வட்டத்தில் விமர்சனம் செய்யப்பட்டு, ஒதுக்கப்பட்டால் மாத்திரம் நாமும் ஒதுக்க வேண்டும். இல்லை என்றால் நமது அறிவில் குறைவு இருப்பதாக நம்பி அவர்கள் போன்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.

## மத்ஹபைப் புனிதப்படுத்த முயற்சித்தல்.

இஸ்லாமிய சமுதாயத்தில் வழிகேட்டை இறக்குமதி செய்ய தனித்த ஒரு இமாமைப் முக்கியத்துவப்படுத்தியதும் ஒரு காரணமாகும். இதில் ஹனபி மத்ஹப் பெரும் பங்காற்றியுள்ளதை மறுக்க முடியாது. **'அல்ஹிதாயா'** என்ற முன்னுரையில் இடம் பெறும் ஒரு கருத்தைப்பாருங்கள்.

**قال الشامي: وأما سلمان الفارسي، فهو وإن كان أفضل من أبي حنيفة من حيث الصحبة، لكنه لم يكن في العلم، والاجتهاد، ونشر الدين، وتدوين أحكامه كأبي حنيفة. وقد يوجد في المفضول ما لا يوجد في الفاضل.**

**(مقدمة الهداية : ص6)**

ஸல்மான் பாரிஸி (ரழி) அவர்கள் நபித்தோழமையைக் கொண்டு அபூஹனீபாவை விட சிறந்து விளங்கினாலும், அறிவு, சட்டத்தை அகழ்ந்தெடுத்தல் (இஜ்திஹாத்), மார்க்கத்தைப் பரப்புதல், சட்டங்களைப் ஆணவப்படுத்துதல் போன்ற விஷயத்தில் அபூஹனீபாவைப் போன்றில்லை. சிலவேளை, சிறப்புக்குரியவரிடம் காணப்படாதது, சிறப்புக் குறைந்தவரிடம் காணப்படலாம். (பாக்க: ஹிதாயாவின் முன்னுரை. பக்கம். 6) இது ஒரு மத்ஹபு நூலின் முன்னுரையில் பதியப்பட்டுள்ள வாசகங்களாகும். மற்றொரு வாசகத்தைக் கவனியுங்கள்.

لا يجوز تقليد ما عدا المذاهب الأربعة ولو وافق قول الصحابة والحديث الصحيح ، والآية. فالخارج عن المذاهب الأربعة ضال مضل. ربما أداه ذلك إلى الكفر. لأن الأخذ بظواهر الكتاب ، والسنة من أصول الكفر .
(حاشية الصاوي على تفسير الجلالين .10/3 ط. إحياء التراث العربي.

'நான்கு மத்ஹப் அல்லாத எந்த ஒருவழிமுறையையும் கண்மூடித்தனமாக பின்பற்றக் கூடாது. அது ஸஹபாக்களின் தீர்ப்பையும், ஸஹீஹான நபிவழியையும், குர்ஆன் வசனத்தையும் ஒத்ததாக இருந்தாலும் சரியே! **(மத்ஹபையே பற்றிக் கொள்ள வேண்டும்).** ஏனெனில் நான்கு மத்ஹபுகளுக்கும் அப்பாற்பட்டவன் வழிகெட்டவனும், வழிகெடுப்பவனுமாவான். அது சிலவேளை இறை மறுப்பின் பக்கம் இட்டுச்செல்லலாம். குர்ஆன், மற்றும் ஹதீஸில் வெளிப்படையாக தெரிவதை எடுப்பது (அமுல் செய்வது) குஃப்ரின் அடிப்படைகளில் ஒன்றாக இருக்கிறது. (ஆதார நூல்: ஹாஷியத்துஸ்ஸாவி அலல்ஜலாலைன். பாக: 3- பக்கம். 10).

குர்ஆனையும், நபிவழியையும், நபித்தோழர்களின் தீர்ப்பையும் அவமதிக்குமாறு போதனை செய்யும் மத்ஹபுகளின் சித்தாந்தங்களுக்கு வக்காலத்து வாங்குபவர்களிடம் இன்றும் இந்த தீர்ப்பே மேலோங்கி இருப்பதைக் காணுகிறோம் .

## மார்க்கத்தைப் புரிந்து கொள்ள சில அடிப்படைகள்.

**∃ மார்க்கத்தில் மனித விருப்பு வெறுப்பிற்கு இடமில்லை**

இஸ்லாம் பரிபூரணமான வாழ்க்கை நெறியாகும். மலசலம் கழிப்பது முதல் அரசியல் விவகாரம் வரையுள்ள சகலவிதமான அம்சங்களையும் அது தெளிவுபடுத்தி விட்டது. அதில் கூடுதல், குறைவு செய்யவோ, அல்லது அதை மூதாதையர் மயமாக்கல் செய்யவோ எவருக்கும் அதிகாரம் கிடையாது. இதை அல்லாஹ்வின் திருமறை வசனங்களும், அவனது இறுதித்தூதரின் போதனைகளும் உறுதி செய்கின்றன.

**وَلَوْ تَقَوَّلَ عَلَيْنَا بَعْضَ الْأَقَاوِيلِ لَأَخَذْنَا مِنْهُ بِالْيَمِينِ ثُمَّ لَقَطَعْنَا مِنْهُ الْوَتِينَ [الحاقة : 44 – 46]**

**(நபியாகிய) இவர் நம்மீது சில வார்த்தைகளையேனும் இட்டுக்கட்டிக் கூறுவாரானால் அவரை நாம் வலக்கரத்தினால் பிடிப்போம், பின்னர் அவரது நாடி நரம்பை தறிப்போம். (அத்: 69. வசனங்கள் : 44 - 46)**

يا أَيُّهَا النَّبِيُّ لِمَ تُحَرِّمُ مَا أَحَلَّ اللَّهُ لَكَ تَبْتَغِي مَرْضَاتَ أَزْوَاجِكَ وَاللَّهُ غَفُورٌ رَّحِيمٌ [التحريم : 1]

**நபியே அல்லாஹ் உமக்கு ஆகுமாக்கியதை நீர் ஏன் விலக்கிக் கொள்கின்றீர்? உமது மனைவியரின் பொருத்தங்களை விரும்புகின்றீரோ? அல்லாஹ் மிக்க மன்னிப்போனும், நிகரற்ற அன்புடையோனமாவான். (66: வச: 01).**

நபி (ஸல்) அவர்களுக்குக்கூட அல்லாஹ்வின் அனுமதியின்றி அவர்களின் விருப்பத்தின் அடிப்படையில் மார்க்கத்தில் இல்லாததைக் கூறவோ, ஒரு ஹராத்தை ஹலாலாக்கவோ உரிமை தரப்படவில்லை என்றால் நமது நிலை எப்படி! என்பதை சிந்திக்க வேண்டும். மேற்படி வசனங்களின் கருத்தில் அமைந்த பல வசனங்கள் இதை இன்னும் உறுதி செய்கின்றன.

## மரணித்தவர்களும், மார்க்கமும்.

மனிதனாக படைக்கப்பட்ட அனைவரும் ஒருநாள் மரணத்தை சுவைத்தே தீரவேண்டும். அகிலங்களின் அதிபதியும், அர்ஷின் இரட்சகனுமாகிய அல்லாஹ் மாத்திரமே என்றும் நிலையானவன், நித்தியஜீவன்.

இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் ஒரு முஸ்லிமின் ஜனாஸாவிற்கு என்ன கடமைகள் செய்யப்பட வேண்டும் என கட்டளையிட்டார்களோ, அது விசயத்தில் அவர்கள் எவ்வாறு நடந்து கொண்டார்களோ, மேலும் எவற்றை எல்லாம் அவர்கள் செய்யாது மௌனமாக இருந்தார்களோ அவை அனைத்தையும் நாமும் அப்படியே நடைமுறைப்படுத்த வேண்டும். இந்த வகையில் மரணித்த மனிதர்கள் பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன ? நல்லடியார்களுக்காக கப்ர்களில் கட்டடம் கட்டுதல், அவர்களிடம் தேவைகளை வேண்டுதல், அவர்களுக்காக கந்தூரி நடாத்துதல் கூடுமானதுதானா? என்பன போன்ற பல அம்சங்கள் பற்றி இங்கு சுருக்கமாக நோக்குவோம்.

[المائدة : 3] الْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمُ الْإِسْلَامَ دِينًا ' இன்றைய தினம் உங்களது மார்க்கத்தை உங்களுக்காகப் பூரணப்படுத்தி விட்டேன், எனது அருட்கொடையை உங்களுக்கு முழுமைப்படுத்தி விட்டேன், இஸ்லாத்தை உங்களுக்கான (பொது) மார்க்மாகவும் பொருந்திக் கொண்டேன். (அல்மாயிதா: வச:3)

இந்த வசனத்தை அறிந்திருந்த ஒரு யூதன் உமர் (ரழி) அவர்களிடம், **அமீருல் மு:.மினீன்** அவர்களே! உங்கள் வேதத்தில் ஒரு வசனத்தை நீங்கள் ஓதி வருகின்றீர்கள். அது யூதர்களாகிய எம்மீது இறக்கப்பட்டிருக்குமானால் அந்த நாளை பெருநாள் தினமாக எடுத்திருப்போம் என்றார். அது என்ன வசனம் என உமர் (ரழி) அவர்கள் கேட்ட போது, இன்றைய தினம் உங்களது மார்க்கத்தைப்பூரணப்படுத்தி, எனது அருட் கொடையை முழுமைப்படுத்தி, இஸ்லாத்தை மார்க்மாகப் பொருந்திக் கொண்டேன். (5:3) என்ற பொருளுடைய வசனம் எனக் கூறினார். அதற்கு அந்த நாளையும், அது இறக்கப்படட்ட இடத்தை யும் நாம் அறிவோம் எனக் கூறிய உமர் (ரழி) அவர்கள் 'அர:.பாத் திடலில் ஒரு ஜு ம்ஆத்தினத்தில் அவ்வசனம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு இறங்கியது எனப் பதிலளித்தார்கள். (புகாரி)

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ فِيهِ فَهُوَ رَدٌّ. (بخاري)

எவர் ஒருவர் எமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றை தோற்றுவிக்கின்றாரோ அது நிராகரிக்கப்படும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். (புகாரி: ஹதீஸ் இல:2697).

இதன் மூலம் இஸ்லாமிய மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

## மக்காவாழ் காபிர்களின் நம்பிக்கையும், நபி (ஸல்) அவர்களும்.

இஸ்லாம் அல்லாஹ்வை மாத்திரம் வணங்குமாறு பணிக்கின்ற மார்க்கமாகும். அதற்காகவே மனித, மற்றும் ஜின் இனத்தினர் படைக்கப்பட்டுள்ளனர், உலகில் முதல் மனிதராக படைக்கப்பட்ட நபி ஆதம் (அலை) அவர்களின் காலம் முதல் கிட்டதட்ட பத்து நூற்றாண்டுகள் வரை மனிதர்கள் ஓரிறைக்கொள்கையிலேயே இருந்து வந்துள்ளனர் என இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள். (இப்னு கஸீர்).

இந்தக்காலமும் கடந்து, அக்கால மக்களும் மரணித்த பின்னால் அவர்களின் வழித்தோன்றல்களாக வந்த மனிதர்கள் அவர்களிலுள்ள **'வத்து' 'சுவா' 'யகூஸ்' 'யஊக்' 'நஸ்ர்'** போன்ற நல்லடியார்களின் உருவங்களை தீட்டி தமது தேவைகளை நிறைவேற்றும் கடவுள்களாக எண்ணி வணங்கி, வழிபட எப்போது ஆரம்பித்தார்களோ அப்போதிருந்தே அதிலிருந்து அம்மக்களைத்தடுத்து நிறுத்துவதற்காக உலகில் முதல் தூதரான நூஹ் (அலை) அவர்கள் இப்பூமியில் அல்லாஹ்வால் அனுப்பிவைக்கப்பட்டார்கள்.

இவ்வாறு மனிதர்கள் ஒவ்வொரு காலத்திலும் தத்தமது கற்பனைகளில் உதிக்கின்றவற்றை தாமாக வணங்கி, வழிபட தலைப்பட்டுள்ளனர். ஒரு சிலர் வானவர்களையும், மற்றும் சிலர் நபிமார்களையும், நல்லடியார்களையும், வேறு சிலர் ஜின்களையும், இன்னும் சிலர் மாட்டையும் வணங்கி வந்தனர்.
மக்கா வாழ் காபிர்கள், அல்லாஹ்தான் இவ்வுலகைப் படைத்தவன், வானங்களில் இருந்து மழை பொழிவிப்பவன், அதிலிருந்து உணவளிப்பவன் என்று ஏற்றுக் கொண்டாலும் தமது வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வுக்கு இணைகற்பித்த காரணத்தால் அல்லாஹ் அவர்களை காபிர்களே! எனக் கூறி அழைக்கின்றான்.

وَلَئِنْ سَأَلْتَهُمْ مَنْ خَلَقَ السَّمَاوَاتِ وَالْأَرْضَ لَيَقُولُنَّ اللَّهُ قُلِ الْحَمْدُ لِلَّهِ بَلْ أَكْثَرُهُمْ لَا يَعْلَمُونَ [لقمان/25]

வானங்களையும்ஜீ பூமியையும் படைத்தவன் யார் என (முஹம்மதே) நீர் அவர்களிடம் கேட்டால் நிச்சயமாக அல்லாஹ்தான் என்பார்கள். (லுக்மான். வச: 25) .

وَلَئِنْ سَأَلْتَهُمْ مَنْ خَلَقَهُمْ لَيَقُولُنَّ اللَّهُ فَأَنَّى يُؤْفَكُونَ [الزخرف/ 87] அவர்களைப் படைத்தவன் யார் என (நபியே!) நீர் அவர்களிடம் கேட்டால் நிச்சயமாக 'அல்லாஹ்' எனப் பதிலளிப்பார்கள். (அஸ்ஸு க்ரு:ஃப். வச: 87).

இவர்களை நோக்கி அல்லாஹ்வை நீங்கள் நேரடியாக அழைத்தால் என்ன? அவனுக்கும் உங்களுக்கும் இடையில் தரகர்களை ஏன் ஏற்படுத்திக் கொள்கின்றீர்கள்? மரணித்த மனிதர்களுக்காக ஏன் நேர்ச்சை செய்கின்றீர்கள்? சிலைகளை, மரம் மட்டைகளை ஏன் வணங்குகின்றீர்கள் ? அவற்றை ஏன் பூஜிக்கின்றீர்கள் ? நன்மை தீமைகளை அவைகளிடம் ஏன் ஆதரவு வைக்கின்றீர்கள்? எனக் கேட்டால் அவர்கள் என்ன பதில் கூறுவார்கள் என்பதை அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்.

وَالَّذِينَ اتَّخَذُوا مِنْ دُونِهِ أَوْلِيَاءَ مَا نَعْبُدُهُمْ إِلَّا لِيُقَرِّبُونَا إِلَى اللَّهِ زُلْفَى [الزمر/3] அவனை (அல்லாஹ்வை) அன்றி பாதுகாவலர்களை எடுத்துக்கோண்டோர், (இணைதெய்வங்களான) அவர்கள் எம்மை அல்லாஹ்வின் பக்கம் மிகவும் நெருக்கமாக்குவார்கள் என்பதற்காகவே தவிர நாம் அவர்களை வணங்கவில்லை (எனக் கூறுகின்றனர்) (அஸ்ஸு மர்: வச:3)

قَالُوا وَجَدْنَا آبَاءَنَا لَهَا عَابِدِينَ [الأنبياء /53 ] எமது முன்னோர்கள் அவைகளை வணங்கக் கண்டோம். (அல்அன்பியா. வச :53),

إِنَّا وَجَدْنَا آبَاءَنَا عَلَى أُمَّةٍ وَإِنَّا عَلَى آثَارِهِمْ مُقْتَدُونَ [الزخرف/23]

'எமது முன்னோர்களை ஒரு வழியில் நாங்கள் கண்டோம், நாங்கள் அவர்களின் அடிச்சுவடுகளை பின்பற்றுபவர்கள் என்றும், கூறுவர். (அல்ஸு க்ரு:ஃப். வச: 23)

இதன் மூலம் 'தவ்ஹீத் அல் உலூஹிய்யா' வில் இவர்கள் இணை கற்பித்துள்ளதை அறியலாம். அது பற்றி இப்போது நோக்குவோம்.

இவை அனைத்தையும் விட்டுவிட்டு அல்லாஹ் ஒருவனை மாத்திரம் வணங்குமாறு சகல தூதர்களும் அவர்களின் சமுதாயத்தினரை **'லாயிலாஹ இல்லல்லாஹ்'** என்ற வாசகத்தைக் கொண்டு இஸ்லாத்தின் பக்கம் அழைத்தது போல முஹம்மத் நபி (ஸல்) அவர்களும் அவர்களின் சமுதாயத்தவரை அழைத்தார்கள்.

**'உண்மையாக வணங்கி, வழிபட அல்லாஹ்வைத்தவிர வேறு யாரும் இல்லை'** என்ற அடிப்படையில் அமைந்த சத்தியப் பிரச்சாரத்தை இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் அவர்களிடம் கொண்டு சென்றபோது அவர்கள் அதை ஆச்சரியமாக நோக்கினார்கள், புதிய கொள்கையை நபி (ஸல்) அவர்கள் போதிப்பதாக மக்கள் மத்தியில் பொய்ப் பிரச்சாரமும் செய்தார்கள்.

أَجَعَلَ الْآلِهَةَ إِلَهاً وَاحِداً إِنَّ هَذَا لَشَيْءٌ عُجَابٌ ∃ ما سَمِعْنَا بِهَذَا فِي الْمِلَّةِ الْآخِرَةِ إِنْ هَذَا إِلَّا اخْتِلَاقٌ [ص :5- 7 ]

இவர் 'பல கடவுளர்களை ஒரு கடவுளாக்கிவிட்டாரா ? இது ஆச்சரியமான விஷயம்தான்! இது பற்றி நாம் நமது முன்னோர்களின் மார்க்கத்திலும் கேள்விப்பட்டதில்லையே! இது ஒரு புதிய கண்டுபிடிப்பே அன்றி வேறில்லை. (அத்தியாயம் 38: வசனங்கள்: 5-7 வது வசனங்கள்).

وَيَعْبُدُونَ مِنْ دُونِ اللَّهِ مَا لَا يَضُرُّهُمْ وَلَا يَنْفَعُهُمْ وَيَقُولُونَ هَؤُلَاءِ شُفَعَاؤُنَا عِنْدَ اللَّهِ قُلْ أَتُنَبِّئُونَ اللَّهَ بِمَا لَا يَعْلَمُ فِي السَّمَاوَاتِ وَلَا فِي الْأَرْضِ سُبْحَانَهُ وَتَعَالَى عَمَّا يُشْرِكُونَ [يونس: 18 ]

அவர்களுக்கு தீங்கிழைக்காததையும், (எவ்விதப்) பயன்தராததையும் அவர்கள் வணங்குகின்றனர். மேலும், இவர்கள் அல்லாஹ்விடம் நமது பரிந்துரையாளர்கள் என்றும் கூறிக் கொள்கின்றன்றனர். வானங்களிலோ, பூமியிலோ அல்லாஹ் அறியாதிருப்பதைப் பற்றி (அவனுக்கு) நீங்கள் அறிவிக்கின்றீர்களா? அவர்கள் இணைவைப்பதை விட்டும் அவன் தூயவன். (யூனுஸ்: வச: 18)

إِنَّ الَّذِينَ تَدْعُونَ مِن دُونِ اللّهِ عِبَادٌ أَمْثَالُكُمْ فَادْعُوهُمْ فَلْيَسْتَجِيبُواْ لَكُمْ إِن كُنتُمْ صَادِقِينَ [الأعراف : 194]

அல்லாஹ்வை விட்டுவிட்டு நீங்கள் அழைப்போர் உங்களைப் போன்ற அடியார்களே அன்றி வேறில்லை, எனவே அவர்களை நீங்கள் அழையுங்கள், நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் அவர்கள் உங்களுக்கு பதில் கூறட்டும். (அஃராப் 7. வச: 194)

وَالَّذِينَ تَدْعُونَ مِنْ دُونِهِ مَا يَمْلِكُونَ مِنْ قِطْمِيرٍ (13) إِنْ تَدْعُوهُمْ لَا يَسْمَعُوا دُعَاءَكُمْ وَلَوْ سَمِعُوا مَا اسْتَجَابُوا لَكُمْ وَيَوْمَ الْقِيَامَةِ يَكْفُرُونَ بِشِرْكِكُمْ وَلَا يُنَبِّئُكَ مِثْلُ خَبِيرٍ [فاطر : 13، 14 ]

அல்லாஹ்வை அன்றி, நீங்கள் அழைப்பவர்கள் (வித்தின்மீதிருக்கும்) தொலியைக் கூட சொந்தமாக்கிக் கொள்ளாதவர்கள். நீங்கள் அவர்களை அழைப்பீர்களாயின் அவர்கள் உங்கள் அழைப்பை செவியேற்மாட்டார்கள், (வாதத்திற்கு) அவ்வாறு அவர்கள் செவியேற்றாலும் உங்களுக்கு (எந்தவிதமான பதிலும்) தரமாட்டார்கள். மறுமையில் உங்களது இணைவைப்பை மறுத்துரைப்பார்கள். நன்கறிந்தவனை (அல்லாஹ்வைப்) போல உமக்கு (வேறு எவரும்) அறிவித்துத்தரமாட்டார்கள். (ஃபாதிர்: 13-14).

இவ்வாறு நூற்றுக்கணக்கான வசனங்கள் மரணித்தவர்களை நெருங்கி எதையும் கேட்காதே என்று சொல்வதுடன், அதைத்தடுப்பதற்காகவே நபிமார்கள் வந்தார்கள் எனக் குறிப்பிடுவதைப்பார்க்கலாம்.

## கப்று வணங்கிகள் பற்றிய முன்னறிவிப்பு.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தனது மரணத்தின் பின்னர் தோன்றவிருக்கும் வழிகெட்ட பிரிவுகள் பற்றியும், குழப்பங்கள் பற்றியும் முன்னறிவிப்புச் செய்திருந்தார்கள். அந்தப்பிரிவில் ஹவாரிஜ்கள் எனப்படும் இஸ்லாமிய ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்வோர் பற்றித் தெளிவாகவும், ஏனைய பிரிவுகளும் சூசகமாகவும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளனர்.

நபி (ஸல்) அவர்கள் வெறுத்ததைச் செய்து கொண்டு, இமாம்களின் தீர்ப்புக்களையும் புறந்தள்ளிவிட்டு, தான் தோன்றித்தனமாக மார்க்கத்தில் கப்று வணக்கத்தை உருவாக்கி, அல்லாஹ்வின் அந்தஸ்தைக் குறைத்து மதிப்பிடும் சுன்னத் ஜமாஅத் பெயர் தாங்கிகள் இந்தப்பிரிவில் உட்படுத்தப்பட வேண்டியவர்களே.

ஹுதைபா (ரழி) அவர்கள் அறிவிக்கும் நரக அழைப்பாளர்கள் பற்றிய நீண்ட ஹதீஸில் ...

... فَقُلْتُ هَلْ بَعْدَ ذَلِكَ الْخَيْرِ مِنْ شَرٍّ قَالَ نَعَمْ دُعَاةٌ عَلَى أَبْوَابِ جَهَنَّمَ مَنْ أَجَابَهُمْ إِلَيْهَا قَذَفُوهُ فِيهَا فَقُلْتُ يَا رَسُولَ اللَّهِ صِفْهُمْ لَنَا قَالَ نَعَمْ قَوْمٌ مِنْ جِلْدَتِنَا وَيَتَكَلَّمُونَ بِأَلْسِنَتِنَا (صحيح مسلم – (9 / 386)

அல்லாஹ்வின் தூதரே! இந்த நன்மைக்குப்பின் தீமை ஏற்படுமா எனக் கேட்டேன்? ஆம். நரகத்தின் வாயிலில் நின்று கொண்டு அழைக்கும் அழைப்பாளர்கள். அவர்களுக்கு யார் பதில் தருகின்றானோ அவனை அவர்கள் அதில் (நரகில்) தூக்கிப் போட்டுவிடுவார்கள். அல்லாஹ்வின் தூதரே! அவர்களைப்பற்றி எமக்கு வர்ணியுங்கள் எனக் கேட்டேன். ஆம். அவர்கள் நமது இனத்திலுள்ள ஒரு கூட்டம்தான். நமது மொழியே பேசுவார்கள், எனக் கூறினார்கள். (முஸ்லிம்)

குழப்பங்கள் அங்கிருந்துதான் தோன்றும் குழப்பங்கள் அங்கிருந்துதான் தோன்றும், குழப்பங்கள் அங்கிருந்துதான் தோன்றும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிவிட்டு 'கிழக்கை நோக்கி சைகை செய்ததை ஈராக்கையும், அதைச்சூழவுள்ள பிரதேசத்தையுமே தெளிபடுத்துவதாக புகாரியின் விளக்கவுரை நூற்களான பத்ஹுல்பாரி, ஷரஹுல்பத்தால் ஆகிய நூற்களில் முறையே இமாம்களான இப்னுஹஜர் அல்அஸ்கலானி, இமாம் இப்னு பத்தால் ஆகியோர் தமது விரிவுரைகளில் குறிப்பிட்டுள்ளனர்.

ஜமல், சிஃப்பீன் போர், ஹவாரிஜ்களின் தோற்றம், இப்பகுதிகளில்தான் இடம்பெற்றுள்ளது. அங்குதான் ஜஹ்மிய்யாக்கள், கத்ரிய்யாக்கள், ஜப்ரியாக்கள் போன்ற

வழிகெட்ட பிரிவுகளும் தோற்றம் பெற்றனர் எனக் குறிப்பிட்டுள்ளனர். ஷீஆக்கள், இந்த சமுதாயத்தில் இஸ்லாம் என்ற பெயரால் கப்று வணக்கக் குப்ரை முதல் முதலில் அரங்கேற்றியவர்கள் என்பதை கப்று வணங்கிகள் அறிந்திருப்பார்களோ, என்னவோ தெரியவில்லை.

## கப்று வணங்கிகள் என்போர் யார்?

சாதாரண இந்திரியத்துளியில் இருந்து மனிதைனைப் படைத்து, பின்னர் அவனை மரணிக்கச் செய்து, அதன்பின்பும் அவனது விரல்ரேகைளில் கூட எவ்வித மாற்றமும் இல்லாது அதே அமைப்பில் அவனை எழுப்புவற்கு சக்தி பெற்ற அகலங்களின அதிபதியாகிய அல்லாஹ்வைவிட்டுவிட்டு, மரணித்த சிலருக்கு தாமாக சில சிறப்புக்களையும், கராமத்துக்களையும் வழங்கி அவர்கள் பேரில் பேரில் கப்றுகளை கட்டி அவர்களின் மகிமைகளை எடுத்துக் கூறி அல்லாஹ்விடம் நேரடியாகப் பிரார்த்திப்பதை விட்டும் முஸ்லிம்களை தடுக்கின்ற கூட்டத்தினரை கப்று வணங்கிகள் என அழைக்கலாம்.

## அடையாளங்கள்.

ஒருவர் கப்று வணங்கிதான் என்பதன் அளவு கோலாக நாம் மேலே சொன்ன அமசங்களுடன் அவர்களுக்காக நேர்ச்சை செய்தல், அவர்களின் மண்ணறையில் அறுத்துப்பலியிடுதல், அவர்கள் பொருட்டால் அல்லாஹ்விடம் தேவைகளை வேண்டுதல், அவர்களின் பெயரால் விழா எடுத்தல், கந்தூரி கொடுத்தல், அவர்களின் மண்ணறைகளுக்கு நேர்ச்சை நிறைவேற்றப் பயணம் செய்தல், அவற்றைப் புனிதமாக்குதல், அங்கு தலையைத் தாழ்த்தி மரியாதை செய்தல், அல்லது சுஜூ த் செய்தல், போன்ற மார்க்கம் அனுமதிக்காத காரியங்களை அரங்கேற்றுவோரை கப்று வணங்கிகள் என நாம் அடையாளப்படுத்த முடியும்.

## மரணித்தவர்கள் செவிமடுப்பார்களா?

மரணித்தவர்கள் செவிமடுப்பதாக நம்பிக்கை கொள்ளும் இவர்கள் தமது தேவைகளை அந்த மாகான்கள் நிறைவேற்றி வைப்பதாகவும் நம்புகின்றனர். இது இஸ்லாமிய நம்பிக்கைக்கு முரணான இறை நிராகரிப்பாளர்களின் நம்பிக்கையாகும். மரணித்தவர்களுக்கும் இவ்வுலகிற்கும் இடையில் தொடர்பு துண்டிக்கப்பட்ட நிலையே காணப்படும், அவர்கள் இவ்வுலகில் நடப்பதை அறியமாட்டார்கள்.

وَمِن وَرَائِهِم بَرْزَخٌ إِلَى يَوْمِ يُبْعَثُونَ [المؤمنون : 100 ] **‘அவர்களுக்கு முன்னால் அவர்கள் எழுப்பப்படும் நாள் வரை ஒரு திரை இருக்கும் . (அத்தியாயம்: 25. வச: 100).**

إِن تَدْعُوهُمْ لَا يَسْمَعُوا دُعَاءَكُمْ وَلَوْ سَمِعُوا مَا اسْتَجَابُوا لَكُمْ وَيَوْمَ الْقِيَامَةِ يَكْفُرُونَ بِشِرْكِكُمْ وَلَا يُنَبِّئُكَ مِثْلُ خَبِيرٍ [فاطر : 14]

(மரணித்த) அவர்களை நீங்கள் அழைத்தால் அவர்கள் உங்கள் அழைப்பை செவியேற்கமாட்டார்கள், அப்படித்தான் செவியேற்றாலும் அவர்கள் உங்களுக்கு பதில்தரமாட்டார்கள், இன்னும் மறுமைநாளில் உங்களின் இணைவைப்பைக் கொண்டு அவர்கள் நிராகரிப்பார்கள், அறிந்தவனை (அல்லாஹ்வை)ப்போல் உமக்கு யாரும் (இது பற்றி) உணர்த்தமாட்டார்கள். (அத்தியாயம் : பாதிர். வச: 14)

إِنَّمَا يَسْتَجِيبُ الَّذِينَ يَسْمَعُونَ [الأنعام : 36] **செவியேற்பவர்கள்தாம் பதில் தருவார்கள்.**

**(அத்: அல்அன்ஆம். வச: 36)**

மரணித்தவர்களிடம் கேள்விகேட்டும் இரு வானவர்களிடமும் நல்லமுறையில் பதில் கூறவாய்ப்பளிக்கப்பட்ட மனிதன் தனது மகிழ்ச்சியான இந்தச் செய்தியை தனது குடும்பத்தவர்களிடம் சொல்லிவிட்டு வருவதற்கு அனுமதி வேண்டுகின்ற போது அந்த வானவர்கள்

...نَمْ كَنَوْمَةِ الْعَرُوسِ الَّذِي لَا يُوقِظُهُ إِلَّا أَحَبُّ أَهْلِهِ إِلَيْهِ حَتَّى يَبْعَثَهُ اللَّهُ مِنْ مَضْجَعِهِ ذَلِكَ (سنن الترمذي) (( باب ماجاء في عذاب القبر))

புதியமாப்பிள்ளையை அவனுக்கு நெருக்கமான அவனது குடும்பத்தவர்கள்தாம் அவனை எழுப்புவார்கள். அவன் உறங்குவது போன்று நீயும் அந்தப்படுக்கையில் இருந்து அல்லாஹ் எழுப்புகின்றவரை உறங்கிக்கொள் எனக் கூறுவார்கள் என்பதாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னதற்கு மாற்றமான விளக்கங்களைக் கூறி மக்களை மரணித்தவர்களிடம் தமது தேவையை வேண்டலாம் என கூப்பாடு போடுகின்றனர் சில கோமாளிகள்.

كُلُّ ابْنِ آدَمَ يَأْكُلُهُ التُّرَابُ إِلَّا عَجْبَ الذَّنَبِ مِنْهُ خُلِقَ وَفِيهِ يُرَكَّبُ ((صحيح مسلم باب : ما بين النفختين))

ஆதமின் மகனை (மனிதனை) முழுமையாக மண் அரித்துவிடும், அவனில் இருக்கும் **'அஜ்புஸ்ஸஜப்'** என்ற முள்ளம் தண்டைத்தவிர. அதிலிருந்துதான் அவன் (ஆரம்பமாக) படைக்கப்பட்டான், (மறுமைக்காக) அதிலிருந்துதான் (மீண்டும்) அவன் உருவாக்கப்படுவான். என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

أَمِ اتَّخَذُوا مِنْ دُونِهِ أَوْلِيَاءَ فَاللَّهُ هُوَ الْوَلِيُّ وَهُوَ يُحْيِي الْمَوْتَى وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ [الشورى : 9]

அவனை (அல்லாஹ்வை) அன்றி அவ்லியாக்களை எடுத்துக் கொண்டனரா? அல்லாஹ்வாகிய அவனே (உண்மையான) வலி. மரணித்தவர்களை அவனே உயிர்ப்பிக்கின்றான். அவன் யாவற்றின் மீது ஆற்றல் உடையவன். (அஷ்ஷுூ ரா. வச:09)

رَبُّ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ لَا إِلَهَ إِلَّا هُوَ فَاتَّخِذْهُ وَكِيلًا [المزمل : 9] **(அவன்) கிழக்கு, மற்றும் மேற்குத் திசைகளின் இரட்சகன். அவனை அன்றி வணங்கி வழிபடத்தகுதியானவர் யாருமில்லை. அவனைப் பொறுப்பாளனாக எடுத்துக் கொள். (அல்முஸ்ஸம்மில். வச: 09).**

இவர்கள் குறிப்பிடுகின்ற அவ்லியாக்கள், நாதாக்கள், ஷேக்குகள், சாதாத்துக்கள் அனைவரும் மண்ணில் மக்கிப்போவார்கள் என்பதையே இந்த ஹதீஸ் குறிப்பிடுகின்றது. அவ்வாறு மக்கிப்போன பின்னால் இவர்கள் பிரார்த்திப்பது யாரிடம்? மண்ணிடமா? இவர்களின் நம்பிக்கையில் சாகாவரம் பெற்ற மகான்களிடமா?

## கப்று வணங்கிகளின் வாதங்களும் அவற்றிற்கான மறுப்பும்

**வாதம்: 1)** 'எமது இரட்சகன் எங்களுக்கு வாக்களித்ததை நிதர்சனமாகவே நாம் பெற்றுக் கொண்டோம், உங்கள் இரட்சகன் உங்களுக்கு வாக்களித்ததை நீங்கள் உண்மையாகவே பெற்றுக் கொண்டீர்களா? என **'பத்ர்'** போரில் கொல்லப்பட்டுக் கிடந்த **குரைஷிக் காபிர்களை நோக்கி அல்லாஹ்வின் தூதர் பேசியுள்ளார்களே!** இது மரணித்தவர்கள் செவிமடுப்பார்கள் என்பதைத்தானே காட்டுகின்றது.

**மறுப்பு:** இது புகாரி, முஸ்லிம் உள்ளிட்ட பல ஹதீஸ் கிரந்தங்களில் இடம் பெற்றுள்ள ஆதாரபூர்வமான நிகழ்வு என்பதில் இரண்டாம் கருத்திற்கு இடமில்லை. எனினும் இது மரணித்தவர்களிடம் தேவைகளை வேண்டலாம் என்பதற்கு எந்தவகையிலும் பொருத்தமற்ற ஆதாரமாகும்.

ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் பத்ரில் கொலை செய்யப்பட்டுக் கிடந்த கொடிய காபிர்களை நோக்கி தமது தேவைகளைக் கேட்கவில்லை, மாற்றமாக இவர்கள் கொலை செய்யப்பட்டுக் கேவலப்படுத்தப்பட்டதன் பின்னணியைக் கருத்தில் கொண்டு அதை உணர்த்தவே இவ்வாறு கூறினார்கள். இது நபி (ஸல்) அவர்களுக்கும் பத்ரில் கொல்லப்பட்ட காபிர்களுடக்கும் தொடர்பான விஷேடமான நிகழ்வாகும்.

அது மாத்திரமின்றி, மரணித்தவர்கள் செவியேற்கமாட்டார்கள் என்பதே நபி (ஸல்) அவர்களின் நிலைப்பாடும், ஸஹாபாக்களின் உறுதியான நம்பிக்கையுமாகும். அதனால்தான் 'அல்லாஹ்வின் தூதரே! உயிர்கள் அற்ற வெறும்பிணங்களாகி விட்ட, முண்டங்களுடனா நீங்கள் பேசுகின்றீர்கள்? என உமர் (ரழி) அவர்கள் கேட்டார்கள் ' நான் போதித்தது உண்மைதான் என்பதை அவர்கள் இப்போது அறிகிறார்கள்' என அல்லாஹ்வின் தூதர் விளக்கமளித்தார்கள். (புகாரி)

காபிரானவர்களுடன் தொடர்புடைய நிகழ்ச்சியை மகான்கள் எனப்படுவோருடன் பொருத்திப் பார்க்கலாமா? சிந்தியுங்கள்.

**வாதம்:2).** நபிமார்கள் மண்ணறைகளில் உயிருடன் இருக்கின்றனர். எனவே அவர்களிடமும், அவ்லியாக்களிடமும் தேவைகளை வேண்டிப் பிரார்த்திக்கலாம். மிஃராஜின் போது நபி மூஸா (அலை) அவர்கள் தொழுகையை குறைத்து வரும்படி முஹம்மத் நபி (ஸல்) அவர்களிடம் கூறியதால், அதை அவர்கள் குறைத்துக் கொண்டு வந்தது மரணித்தவர்களிடம் உதவி தேடலாம் என்பதைக் காட்டவில்லையா?

**மறுப்பு :** மனிதர்கள் அனைவருக்கும் மரணம் பொதுவான விதியாகும். அதிலிருந்து நபிமார்கள், அவ்லியாக்கள் விலக்கப்பட்டவர்கள் அல்லர். அதையும் மீறி ஒருவன் கருத்துக் கூற முற்பட்டால் அவனை இஸ்லாமிய வரையறைக்குட்பட்டவனாக கருதவே முடியாது.

மிஃராஜ் என்பது அல்லாஹ்வின் தூதருக்கு அல்லாஹ் ஏற்படுத்திய விஷேஷ நிகழ்வாகும். அதில் அவனது பல அத்தாட்சிகளை அவருக்கு காண்பித்தான். வேறு எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் அவர்களுக்கு இவ்வாறானதொரு நிகழ்வு நடைபெறவில்லை. நபி மூஸா (அலை) அவர்களுக்கும், நபி முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் இடையில் நடந்த உரையாடலும் அதில் ஒன்றாகும்.

தொழுகையைக் குறைத்து கேட்கும்படி மூஸா (அலை) அவர்கள் கூறியதை நபி (ஸல்) அவர்கள் கூறியதால்தான் நம்புகின்றோம். அதே போல் அவ்லியாக்களின் உடல்களை மண் தின்னாது என்றும், அவர்கள் மண்ணறையில் இருந்தவாறு உலகில் நடப்பதை அறிவார்கள் என்றும் நபி (ஸல்) அவர்கள் எங்கேனும் கூறியுள்ளார்களா?

அடுத்ததாக கப்ரில் இருந்தவாறு நபி (ஸல்) அவர்கள் சிபாரிசு செய்யமாட்டார்கள். மறுமையிலேயே சிபாரிசு செய்வார்கள் என்பதை புகாரி, முஸ்லிம் உள்ளிட்ட பல ஹதீஸ் கிரந்தங்களில் காண முடிகின்றது. இமாம் புகாரியின் கிரந்தத்தத்தில் சிபாரிசு பற்றி செய்தி பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

அவர்கள் (நபிமார்கள்) முஹம்மதிடம் செல்லுங்கள் எனக் கூறுவார்கள். உடனே அம்மக்கள் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் வந்து) முஹம்மதே! நீர் அல்லாஹ்வின் தூதர், நபிமார்களில் இறுதியானவர், முந்திய, பிந்திய பவாங்களை அல்லாஹ் உமக்காக மன்னித்து விட்டான். உமது இரட்சகனிடம் எமக்காக சிபாரிசு வேண்டுவீராக! எமது நிலையினை நீர் கவனிக்க வேண்டாமா? எனக் கூறுவர். இதைக் கூறும் அல்லாஹ்வின் இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள்

.... فَأَنْطَلِقُ فَآتِي تَحْتَ الْعَرْشِ فَأَقَعُ سَاجِدًا لِرَبِّي عَزَّ وَجَلَّ ثُمَّ يَفْتَحُ اللَّهُ عَلَيَّ مِنْ مَحَامِدِهِ وَحُسْنِ الثَّنَاءِ عَلَيْهِ شَيْئًا لَمْ يَفْتَحْهُ عَلَى أَحَدٍ قَبْلِي ثُمَّ يُقَالُ يَا مُحَمَّدُ ارْفَعْ رَأْسَكَ سَلْ تُعْطَهْ وَاشْفَعْ تُشَفَّعْ (( أخرجه البخاري من أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ ))

உடன் அர்ஷின் கீழ் வந்து, மகத்துவமிக்க எனது இரட்சகனுக்கு நான் சுஜூ தில் விழுந்து விடுவேன். பின்பு அல்லாஹ் அவனது புகழாரங்களில் இருந்தும், அவனுக்குரிய அழகிய துதியையும் எனக்கு திறந்து தருவான் (மற்றொரு அறிவிப்பின்படி உதிப்பாக்குவான்). <u>**எனக்கு முன்னர் அவன் அதை யாருக்கும் திறந்து கொடுத்ததில்லை.**</u> பின்னர் முஹம்மதே! உமது தலையை உயர்த்தி, கேளும் கொடுக்கப்படும், பரிந்துரை செய்யும். உமது பரிந்துரை ஏற்றுக் கொள்ளப்படும்', எனக்

கூறப்படும். (புகாரி, முஸ்லிம், அஹ்மத்) போன்ற பல ஹதீஸ் கிரந்தங்களில் காணப்படும் செய்திகளைப்பார்த்தால் சிபாரிசு என்பது மறுமை நாளில் எல்லாமனிதர்களின் கண் எதிரே நடக்கும் நிகழ்வுதான் என்பதையும், கப்ரு வாழ்க்கைக்கும், ஷஃபாஅத்திற்கும் இடையில் கடுகு அளவுகூட சம்மந்தம் இல்லை என்பதையும் அறியலாம்.

ஒவ்வொரு நபிக்கும் பதிலளிக்கப்படும் ஓர் அழைப்பிருந்தது. அதைக் கொண்டு அவரகள் அவசரமாக (உலகில்) அழைத்துவிட்டனர். எனது பிரார்த்தனையை எனது சமுதாயத்தின் மறுமை (ஷபாஅத்திற்காக) மன்றாட்டத்திற்காக நான் ஒதுக்கி வைத்துள்ளேன் (புகாரி) என நபி (ஸல்) அவர்கள் கூறியதை சரியாக சிந்திப்போர் மண்ணறைகளில் மன்றாட்டம் நடத்துவார்களா?

அல்லாஹ்வின் தூதர் தனது இறுதி நேர உரைகளில் **நான் உங்களை 'ஹவ்ழுல் கௌஸர்'** நீர் தடாகத்தில் (ஏற்பாட்டாளன் போன்று) எதிர்பர்த்தவனாக இருப்பேன். (புகாரி, முஸ்லிம்) உங்களுக்குள் சர்ச்சைகள் தலைதூக்கும் போதெல்லாம் **அந்த 'ஹவ்ழ்'** நீர் தடாகத்தில் என்னை நீங்கள் சந்திக்கின்றவரை பொறுமையாக இருங்கள். (புகாரி, முஸ்லிம்) என தனது தோழர்களிடம் கூறியது மண்ணறையில் இருந்து கொண்டு உலகில் நடப்பதை தன்னால் அவதானிக்க முடியாது என்பதற்காக அன்றி வேறு எதற்காகக் கூறினார்கள் ?

அது மாத்திரமின்றி, அல்லாஹ்வின் தூதர் அவர்கள் உலகில் உயிர்வாழ்கின்ற போதே மறைவான செய்திகளை அறிய முடியாதிருந்திருக்கிறார்கள் என்பதற்கு நூற்றுக்கணக்கான சான்றுகள் உள்ளன.

நபி (ஸல்) அவர்கள் தபூக் பயணத்தில் இருந்து திரும்பியதும் வராமல் இருந்தவர்களை விசாரணை நடத்திய போது அவர்கள் நடந்து கொண்ட முறையையும் ஆதாரங்களில் ஒன்றாகக் கொள்ளலாம்.

அப்போருக்குச் செல்லாது தங்கிவிட்ட முனாபிக்கள், நபி (ஸல்) அவர்களிடம் வந்து பல சாக்குப் போக்குகளைக் கூறி, சத்தியமும் செய்தனர். அவர்கள் எண்பதுக்கும் மேற்பட்டோராக இருந்தனர் எனக் கூறப்படுகின்றது.

فَقَبِلَ مِنْهُمْ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَلَانِيَتَهُمْ وَبَايَعَهُمْ وَاسْتَغْفَرَ لَهُمْ وَوَكَلَ سَرَائِرَهُمْ إِلَى اللَّهِ ( خ )

**அவர்களின் வெளிப்படையான காரணத்தை ஏற்றுக் கொண்ட அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அவர்களுடன் உறுதி மொழியும் செய்து கொண்டு, அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் வேண்டினார்கள். (அதே நேரம்) அவர்களின் அந்தரங்க விஷயங்களை அல்லாஹ்விடம் ஒப்படைத்தார்கள். (புகாரி)**

**இந்த நிகழ்வு கப்ரில் நடப்பதை அல்ல, உலகில் ஒரு மனிதனுடன் தொடர்புடைய மறைவானவற்றையே நபி (ஸல்) அவர்கள் அறிய முடியாதவர்கள் இருந்திருக்கின்றார்கள் என்பதைக் காட்டவில்லையா?**

இதைப் புரியாத பலர் பெரியார்கள் சுயநினைவிழந்த நிலையில் மரணிப்பார்கள், மண்ணறையில் வைக்கப்பட்டதும் விழித்துக்கொள்வார்கள், உலகில் நடப்பதை அறிவார்கள் என்றெல்லாம் உளருவதைப் பார்க்கின்றோம். இதுவும் இஸ்லாத்தில் இல்லாத புதிய சித்தாந்தமாகும்.

## வாதம்: 3)

وَمَا أَرْسَلْنَا مِنْ رَسُولٍ إِلَّا لِيُطَاعَ بِإِذْنِ اللَّهِ وَلَوْ أَنَّهُمْ إِذْ ظَلَمُوا أَنْفُسَهُمْ جَاءُوكَ فَاسْتَغْفَرُوا اللَّهَ وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُولُ لَوَجَدُوا اللَّهَ تَوَّابًا رَحِيمًا [النساء : 64]

எந்த தூதரையும் அல்லாஹ்வின் உத்தரவிற்கு அமைவாக அவர் வழிப்படப்படுவதற்கே அன்றி நாம் (அவரை) அனுப்பிவைக்கவில்லை. அவர்கள் தமக்கு அநீதி இழைத்ததும் உம்மிடம் வந்து அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் கோருவதுடன்,

இத்தூதரும் அவர்களுக்காக பாவமன்னிப்புக் கோரினால் அல்லாஹ்வை மிக்க மன்னிப்பாளனாகவும், நிகரற்ற அன்புடையோனாகவும் கண்டு கொள்வார்கள். (அந்நிஸா. வச:64) என்ற வசனத்தையும் ஆதாரமாகக் கொள்வதில் என்ன தப்பு இருக்கின்றது!

**மறுப்பு:** இவர்கள் எடுத்து வைக்கின்ற குர்ஆன் வசனம் முனாபிக்குகள் விசயத்தில் இறங்கியதாகும். நபி (ஸல்) அவர்கள் உயிருடன் இருக்கும் போது அவர்களுக்கு வார்த்தைகளால் தொல்லை தந்த நயவஞ்சகர்கள் திருந்திவாழ விரும்பினால் இந்த வழிமுறையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதை அல்லாஹ் கட்டளையிடுகின்றானே தவிர மரணித்த நபியிடம் மன்றாடும் படி கூறவில்லை. நபித்தோழர்கள் இந்த வசனத்தை இப்படித்தான் புரிந்திருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின் தமக்கு ஏற்பட்ட கஷ்டங்கள், துன்பங்களின் போது அவர்களின் மண்ணறையில் தமது தேவைகளையும், கஷ்டங்களையும் நிவர்த்தி செய்யுமாறு வேண்டாதிருந்தது மாபெரும் சான்றாகும்.

உமர் (ரழி) அவர்களின் ஆட்சியில் ஹிஜ்ரி, 18ல் ஏற்பட்ட **'ஆமுர்ரமாதா'** எனப்படும் மாபெரும் வறட்சி ஆண்டு பற்றியும், சிரியாவில் ஏற்பட்ட தாவூன் என்ற தொழு நோய் பற்றியும் அறிவீர்கள். இவற்றிற்கெல்லாம் அல்லாஹ்வின் தூதரின் மண்ணறைக்கு வந்து அவர்கள் மன்றாடவில்லை, கலீபா உமர் (ரழி) அவர்கள் தனது ஆட்சியில் மழை வேண்டிப் பிரார்த்தனை செய்த போது பயன்படுத்திய வாசகம் புகாரி, முஸ்லிம் போன்ற கிரந்தங்களில் இடம்பெற்றுள்ளன. அவற்றைப் படித்துப் பாருங்கள்.

عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ كَانَ إِذَا قَحَطُوا اسْتَسْقَى بِالْعَبَّاسِ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ فَقَالَ اللَّهُمَّ إِنَّا كُنَّا نَتَوَسَّلُ إِلَيْكَ بِنَبِيِّنَا صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَتَسْقِينَا وَإِنَّا نَتَوَسَّلُ إِلَيْكَ بِعَمِّ نَبِيِّنَا فَاسْقِنَا قَالَ فَيُسْقَوْنَ (صحيح البخاري)

மக்கள் வரட்சியால் பாதிக்கப்பட்ட போது, அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் (ரழி) அவர்களைக் கொண்டு மழைவேண்டுபவர்களாக உமர் (ரழி) அவர்கள் இருந்தார்கள். அல்லாஹ்வே நமது நபியைக் கொண்டு (முன்றிறுத்தி) நாம் மழைவேண்டுபவர்களாக இருந்தோம். அதனால் நீ எமக்கு மழையைப் பொழிவிப்பாய், நாம் உன்னிடம் நமது நபியின் சிறிய தந்தையை முன்நிறுத்தி (மழைவேண்டி) உதவிதேடுகின்றோம். ஆகவே எமக்கு மழையைத் தருவாயாக! எனக் கூறுவார்கள். அதற்காக மழையும் பெற்றிருக்கின்றார்கள் என அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். (புகாரி).

கப்று வணங்கிகள் இந்த ஹதீஸை பொது மக்களிடம் தவறாகவே விளக்குவார்கள். அல்லாஹ்வின் தூதரிடம் ஸஹாபாக்கள் கூட வஸீலா வேண்டி இருப்பதாக உளருவார்கள்.

உண்மையில் ஸஹாபாக்கள், அல்லாஹ்வுடைய தூதரிடம் நேரடியாகவோ, அல்லது மறைமுகமாகவோ வஸீலா வேண்டி இருந்தால், அல்லாஹ்வின் தூதரே! எமக்கேற்பட்ட வரட்சிக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யுங்கள் என்றுதான் கூறி இருக்க வேண்டும்.

அவ்வாறு கூறாது, அல்லாஹ்வுடைய தூதர் உயிருடன் இருக்கின்ற போது நடந்த ஒரு நிகழ்வை நினைவுபடுத்தி 'அல்லாஹ்வே' என அல்லாஹ்வை அழைத்து நடந்ததைக் கூறிய பின்னர், உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் நபி (ஸல்) அவர்களின் நெருங்கிய உறவினரில் ஒருவரை முன் நிறுத்தி மழை வேண்டி பிரார்த்தனை செய்திருக்கின்றார்கள்.

மார்க்க அறிவில் உயர் நிலையில் காணப்பட்ட ஸஹாபாக்கள், இவ்வாறு பிரார்த்தித்தது நபி (ஸல்) அவர்கள் மரணித்த பின்னர், அவர்களிடம் எந்தவிதமான கோரிக்கைளையும் முன்வைக்கக்கூடாது என்று அவர்கள் புரிந்ததனால்தான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நபியின் மண்ணறைக்குச் சென்று பாவமன்னிப்புக்கோரலாம், தேவைகளைக் கேட்கலாம் என்பதை மறுத்துரைக்கும் பின்வரும் நபி மொழியைக் கவனியுங்கள். ஒரு முறை அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் தலைவலி, தலைவலி எனக்கதறி அழுதார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள்,

'...ذَاكِ، لَوْ كَانَ وَأَنَا حَيٌّ فَأَسْتَغْفِرَ لَكِ وَأَدْعُوَ لَكِ ( صحيح البخاري ) நான் உயிருடன் இருக்கும் நிலையில் நீ எனக்கு முன்னர் மரணித்தால் உன்னைக் குளிப்பாட்டி, கபனிட்டு, உனக்காக பாவமன்னிப்பு தேடுவேன், உனக்காக பிரார்த்தனையும் செய்வேன் எனக் கூறினார்கள். (புகாரி).

இந்த செய்தியை சிந்தித்தால் நபி (ஸல்) அவர்கள் உயிருடன் இருக்கும் போதுதான் நபி (ஸல்) அவர்களின் பாவமன்னிப்புக் கோரல் சாத்தியமானது என்பதை அறிந்து கொள்ள முடியும்.

قال أبو سفيان يوم أحد . لنا العزى ولا عزى لكم . فقال رسول الله صلى الله عليه وسلم – : « قولوا : الله مولانا ولا مولى لكم » (بخاري)

**ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டு நடைபெற்ற உஹத் போரில் (இஸ்லாத்தில் இணையுமுன்) காபிர்களின் அணி சார்பாக தலைமை தாங்கி வந்த அபூசுப்யான் (ரழி) அவர்கள்,**

'எங்களுக்கு (கண்ணிமளிக்கும்) உஸ்ஸாக் கடவுள் இருக்கின்றது, உங்களுக்கு 'உஸ்ஸா (கண்ணியமளிக்கும்) உஸ்ஸாக் கடவுள் இல்லையே! என்று கூறியபோது 'அல்லாஹ் எங்கள் (மௌலானா) பாதுகாவலன், உங்களுக்கு (மௌலா) பாதுகாப்பளிப்பவன் இல்லை எனக் கூறிவிடுங்கள் எனப்பணித்தார்கள். (புகாரி).

நபி (ஸல்) அவர்களின் போதனை முறையைக் கவனித்தால் அவர்கள் உயிருடன் இருக்கின்ற போது கஷ்டமான நிலையிலும் அல்லாஹ்வையே பாதுகாவலாக எடுத்திருக்கின்றார்கள் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்கள் கப்ரில் உயிருடன் இருக்கின்றார்கள், மரணிக்கவில்லை என்ற குருட்டு வாதத்தை முன்வைப்போரின் கூற்றை ஒரு வாதத்திற்காக ஏற்றுக் கொண்டாலும் அல்லாஹ்வின் தூதரிடம் பாதுகாப்பையோ, தேவைகளையோ இப்போதும் வேண்டமுடியாது. ஏனெனில் பத்ர், உஹத் போன்ற போர்க்களங்களில் வானவர்கள்தாம் அவர்களுக்கு உதவி செய்திருக்கின்றார்கள் என்பதை ஹதீஸ்களில் பார்க்கின்றோம்.

## வாதம்: 04). ஆதம் நபி (அலை) அவர்கள் தவறு செய்த போது நபி (ஸல்) அவர்களின் பொருட்டால் வஸீலாக் கேட்கவில்லையா? அது மாத்திரம் இவர்களுக்கு போதுமான ஆதரமாக இல்லையா ?

**மறுப்பு:** இந்தச் செய்தி ஆதராமற்ற செய்தியாகும் என்பதை ஹதீஸ்கலை அறிஞர்கள் முடிவாகச் சொல்லிவிட்டார்கள். இதை பெரிய ஆதராம் என்ற பெயரால் கூறி தொடர்ந்தும் மக்கள் மத்தியில் உளம்புவது ஒரு வகை நோயாகும்.

முல்லா அலிஅல்காரி (ரஹ்) என்ற அறிஞர் தனது 'அல்மவ்ழூஆத்' (நபியின் புனையப்பட்டவைகள்) என்ற நூலில் இதைத் தெளிவாகக் கூறியுள்ளார்கள். கஸஸுல் அன்பியா என்ற நூலில் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களும் இது ஏற்றுக் கொள்ள முடியாத செய்தி என்று கூறியுள்ளார்கள். ஹதீஸ் கலையில் பூரண அறிவில்லாதவர்களே இதை ஒரு ஆதராமாகக் கொள்வார்கள்.

வாதத்திற்கு இதை ஒரு ஆதாரமாக எடுத்துக் கொண்டாலும், ஒரு நபி மற்றொரு நபியின் பொருட்டால் கேட்டார்கள் என்பதை மகான்களுக்குப் பொருத்திக் கூறலாமா? என்று சிந்தியுங்கள்.

**வாதம்: 5).** நாங்கள் இறைநேசர்களை வணங்கவில்லையே! நாம் பாவிகளாக இருப்பதால் இவர்கள் மூலமாக அல்லாஹ்விடம் நெருங்குகின்றோம். இதில் என்ன தவறு இருக்கிறது?

**மறுப்பு: இதே வார்த்தையைத்தான் மக்காவாழ் காபிர்களும் கூறினார்கள். (பார்க்: (அத்: அஸ்ஸுமர்: வச: 03.) (யூனுஸ்: வச: 18). (ஸாத்: வச:05)** இந்த வசனங்களைத் திரும்பத்திரும்பப் படியுங்கள்.

தொழுது, நோன்பு நோற்று, அல்லாஹ்வை வணங்குகின்றவர்களைப் பார்த்து இதைக் கூறலாமா என்ற ஆதங்கம் பலர் மனதில் தோன்றவே செய்யும். இதைவிட அல்லாஹ்வின் வசனம் ஆயிரம் மடங்கு உண்மை என்பதை மறுக்க முடியாத உண்மையாகும்.

இணைவைப்பாளர்கள் உம்ராச் செய்கின்ற போது, **இறைவா! உனக்கு கட்டுப்பட்டுவிட்டேன்' எனக் கூறும் வார்த்தையைச் செவிமடுக்கும் அல்லாஹ்வின் தூதர் அவர்கள்**

فَيَقُولُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَيْلَكُمْ قَدْ قَدْ فَيَقُولُونَ إِلَّا شَرِيكًا هُوَ لَكَ تَمْلِكُهُ وَمَا مَلَكَ يَقُولُونَ هَذَا وَهُمْ يَطُوفُونَ بِالْبَيْتِ (مسلم)

போதும்! போதும்! (இத்தோடு நிறுத்திக் கொள்ளுங்கள்) எனக் கூறுவார்கள். (அவர்கள் அதையும் மீறி) நீ உனக்கென சொந்தமாக வைத்திருக்கும் ஒரு இணைதெய்வத்தையும், அது சொந்தமாக்கியுள்ளதையும் தவிர என அல்லாஹ்வின் அந்த இல்லத்தை தவாப் செய்து கொண்டே (இந்த இணைவைப்பு வார்த்தையைக்) கூறுவார்கள் என இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள் (முஸ்லிம்).

ஒருவர் வணக்கம் செய்வதால் அவர் முஸ்லிமாகிவிடுவதில்லை. மாற்றமாக அந்த வணக்கம் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான **நிபந்தனைகளையும் அந்த வணக்கம் பொதிந்திருக்க வேண்டும்.**

**வாதம் 6): உத்தம நபியின் மண்ணறையில் மன்றாடிய 'உத்பி' என்ற கிராம வாசிக்கு மன்னிப்புக் கிடைத்ததாக 'இப்னு கஸீர்' என்ற தப்ஸீருடைய இமாம் கூறி இருக்கிறார்களே! அவரை விட நீங்கள் பெரிய அறிஞரா?**

**பதில்:** மண்ணறையில் அடங்கப்பட்டவர்களிடம் மன்றாடுவது கூடும் என நியாயப்படுத்துவோர் இந்த உத்பி என்ற விலாசமற்ற கிராமப்புற ஒரு மனிதன் பேரில் புனையப்பட்ட சம்வத்தையும் ஆதாரமாகக் கொள்ளவது மிகப் பெரும் தவாறகும். கற்பனையான ஒன்றை ஆதாரமாக சித்தரித்துக் கூறுவது எந்த வகையிலும் ஏற்க முடியாதாகும். கப்று வணங்கிகளுக்கு வேண்டுமானால் அது ஒரு பெரிய ஆதாரமாகத் தோன்றலாம். ஆனால் இஸ்லாத்தில் இது போன்ற பொய்களை ஆதாரமாகக் கொள்ள முடியாது.

'உத்பி' என்ற கிராம வாசி யார் என்று அறியப்படாதவர். விலாசமற்ற ஒருவர் மூலம் அறிவிக்கப்படும் செய்தியை ஆதாரத்திற்கு கொள்ள முடியாது என ஹதீஸ்கலை இமாம்கள் முடிவு செய்வார்கள். அந்த விதியின்படி அப்படையில் இந்தச் செய்தியும் ஆதாரமற்றதாகும் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களது தப்ஸீரில் ஆதாரத்திற்கு கொள்ள முடியாத பல செய்திகள் இடம் பெற்றுள்ளன என்பதை நீங்கள் முதலில் கவனத்தில் கொள்ள வேண்டும். அவர்கள் கூறுவது அனைத்தும் சரியானது என அவர்கள் உத்தரவாதம் தரவில்லை. அரபு நூலில் வந்துவிட்டது என்பதற்காக அது ஆதாரமாகிவிடாது.

**இரண்டாவதாக: குறித்த** அந்தச் செய்தியில் 'அறிவிக்கப்படுகின்றது' என்ற உறுதியற்ற வாசகத்தொடரே பயன்படுத்தப்பட்டுள்ளது. அதை ஹதீஸ் கலை அறிஞர்கள் உறுதியற்ற வாசக அமைப்பு எனப் பொருள் கொள்வார்கள்.

**மூன்றாவதாக: கவிதையால் மார்க்கத்தை நிலை** நிறுத்த முடியாது என்று குர்ஆன் தெளிவாகக் குறிப்பிடுவதைப் பார்க்கின்றோம்.

وَالشُّعَرَاءُ يَتَّبِعُهُمُ الْغَاوُونَ [الشعراء : 224] **கவிஞர்களை வீணர்கள்தாம் பின்பற்றுவார்கள். (அஷ்ஷுஃ அரா. வச:224) என்ற வசனத்தையும்,**

وَمَا عَلَّمْنَاهُ الشِّعْرَ وَمَا يَنْبَغِي لَهُ إِنْ هُوَ إِلَّا ذِكْرٌ وَقُرْآنٌ مُبِينٌ [يس : 69] **நாம் அவருக்கு கவிதையைக் கற்றுக்கொடுக்கவுமில்லை, அது அவருக்கு அவசியமும் இல்லை. அது இறை நினைவும், தெளிவான அல்குர்ஆனுமே அன்றி வேறில்லை. (யாசீன்: 69)** என்ற வசனத்தை சிந்தித்தால் கவிதையால் மார்க்கத்தை நிலைப்படுத்த அல்லாஹ்வே விரும்பவில்லை என்பதை அறியலாம்.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் அவரது மண்ணறையில் கவிதை பாடி பாவமன்னிப்பு வேண்டியவருக்கு மன்னிப்புக்கிடைத்ததாக நம்புவது எவ்வாளவு பெரும் முட்டாள்தனம் என்பதை பார்க்க வேண்டும்.

இது நபி (ஸல்) அவர்களின் காலத்தில் வாழ்ந்த ஸஹாபி ஒருவரால் பாடல்பாடப்பட்டு நபி (ஸல்) அவர்களால் அங்கீகரிக்கப்படட ஒரு கனவு போல் கிடையாது என்பதை அறிந்து கொள்ளவேண்டும்.

## நான்காவதாக: கனவின் வெளிப்பாடு மார்க்கமாகுமா?

பெரியார்கள் பேரில் கட்டப்பட்டுள்ள தர்ஹாக்கள் தீய கனவின் வெளிப்பாடாகவே உருவாக்கப்பட்டிருக்கின்றன. மக்களை ஏமாற்றிப் பிழைப்பு நடத்த இது ஒரு சாத்வீக வழியிலான அனுமுறை என்றே கூற வேண்டும். இது திவாலாகிப் போன பணவைப்பு முறை போன்றதாகும். இதில் இடப்படும் பணத்திற்கு தர்ஹாக் காவலர்களே நிருவாகிகளாகும்.

மரணித்த எங்கள் தந்தை கப்று, தர்ஹாக் கட்டச் சொன்னார், சந்தனக் கூடு எடுக்கச் சொன்னார், விழா கொண்டாடச் சொன்னார் என்றால் உடனே அதை நிறைவேற்றி தயாராகிவிடும் இவர்கள் இது தீய கனவு என முடிவு செய்வதில்லை. எனது அத்தா என்னைக் கிணற்றில் விழச் சொன்னார் என்றால் அவர்கள் அதை நிறைவேற்றத் தயாராக இல்லை. ஏன் இது கெட்ட கனவு என்று முடிவு செய்யும் திறண் இருக்கின்றது.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் கனவில் கண்டோம் என்பதற்காக அதன் மூலம் மார்க்கத்தை உறுதி செய்ய முடியுமா என்றால் முடியாது என ஷாபி மத்ஹபின் அறிஞரான இமாம் நவவி (ரஹ்) அவர்கள் பின்வருமாறு தீர்ப்புக் கூறியுள்ளார்கள்.

قال النووي رحمه الله: ...... لَا يَجُوز إِثْبَات حُكْم شَرْعِيّ بِهِ لِأَنَّ حَالَة النَّوْم لَيْسَتْ حَالَةَ ضَبْطٍ وَتَحْقِيقٍ لِمَا يَسْمَعُهُ الرَّائِي ، وَقَدْ اِتَّفَقُوا عَلَى أَنَّ مِنْ شَرْطِ مَنْ تُقْبَلُ رِوَايَتُهُ وَشَهَادَتُهُ أَنْ يَكُون مُتَيَقِّظًا لَا مُغَفَّلًا وَلَا سَيِّئَ الْحِفْظِ وَلَا كَثِيرَ الْخَطَأِ وَلَا مُخْتَلَّ الضَّبْطِ ، وَالنَّائِم لَيْسَ بِهَذِهِ الصِّفَة فَلَمْ تُقْبَلْ رِوَايَتُهُ لِاخْتِلَالِ ضَبْطِهِ ( مقدمة شرح النووي على مسلم - (1 / 50)

உறக்கத்தின் நிலையில் கனவு காண்பவர் அதனை உறுதி செய்து, சரியான ஒழுங்கமைப்பில் இல்லாததால் கனவால் மார்க்க சட்டத்தை நிலைப்படுத்த முடியாது. ஒருவரின் சாட்சியம் ஏற்க்கப்பட அவர், விழிப்புணர்வுள்ளவராகவும், அபாரமறதிக்கு உட்படாதவராகவும், மனனத்தில் குறைவில்லாதவராகவும், அதிமதிகம் தவறிழைக்காதவராகவும், ஞாபகம் குன்றிடாதவராகவும் இருக்க வேண்டும். (இவரதுசாட்சியமே ஏற்றுக் கொள்ளப்படும்) இதில் அறிஞர்கள் ஒருமுத்தி கருத்தில் உள்ளனர். உறக்கத்தில் இருப்பவன் இந்த நிலையில் கிடையாது. அவனது ஞாகபத்தன்மையில் குறைவு இருக்கும். ஆகவே அவனது அறிவிப்பை ஏற்றுக்கொள்ள முடியாது எனக் குறிப்பிடுகிறார்கள். (பார்க்க: ஷரஹ்முஸ்லிம்).

அப்படியானால் உத்பி என்ற விலாசமற்ற கிராமவாசி நபி (ஸல்) அவர்களின் மண்ணறையில் மன்றாடியதற்காக தனது பாவம் மன்னிக்கப்பட்டதாக் குறிப்பிடும் கனவை இந்த அடிப்படையிலாவது ஏற்றுக் கொள்ள முடியுமா என நீங்களே சிந்தியுங்கள்.

**வாதம் 7)** أَلَا إِنَّ أَوْلِيَاءَ اللَّهِ لَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ [يونس: 62 ] அல்லாஹ்வின் நேசர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை. அவர்கள் கவலை கொள்ளவும்மாட்டார்கள். (யூனுஸ். வச: 62) என்ற குர்ஆன் வசனம் அவ்லியாக்களின் சிறப்பைப்றைசாட்டவில்லையா?

**மறுப்பு:** பொதுவாக அல்லாஹ்வின் நல்லடியார்கள் பற்றி இடம் பெறும் குர்ஆன் வசனங்களையும், ஹதீஸ்களையும் எடுத்துக் கொண்டு அவர்களிடம் தேவைகளை வேண்டலாம் என சம்மந்தமில்லாமல் ஆதாரமம் காட்டுகின்றனர். அவற்றில் மேலே உள்ள வசனமும் ஒன்று.

அனைத்து தர்ஹாக்களிலும் நீங்கள் இந்த வசனங்களை பார்க்க முடியும். இந்த வசனத்தை வைத்தும் மக்கள் அவ்லியா வணக்கத்தில் அதீத ஆர்வம் காட்டுகின்றனர்.

செப்டம்பர் 11 தாக்குதலில் அமெரிக்காவின் இரட்டைக் கோபுரங்கள் பற்றி எரிந்தன. சவூதி அரேபியாவைச் சேர்ந்த உஸாமா பின்லேடன் என்பவரே இந்த உலக சாதனையை நிகழ்த்திவிட்டார் என்று மார்க்க அறிவு மருந்துக்கும் இல்லாத முஸ்லிம்கள் ஆராவாரம் போட்டனர்.

அது மட்டுமா! போதக்குறைக்கு திருமறை குர்ஆனில் (9-109ல்) இடம் பெறும் வசனத்தை ஆதாரமாகவும் உளரினர். அந்த வசனத்தில் மாடியின் எண்ணிக்கை இத்தனைதான் என வந்துள்ளதால் இவ்வாறு கூறத் தலைப்பட்டனர் போலும்.

ஈராக்கின் பெட்ரோலைக் கொள்ளையடிக்க அது யூதக்கும்பலின் சதியின் பின்னணியில் நடத்தப்பட்ட யூத நாடகம் என்பதை உலகம் அறிந்து கொள்கின்றது. ஆனால் நமது அறிவிலிகளோ மகிழ்ச்சிப் பெருக்கில் உறைந்து போனார்கள். தங்களை அறியாமலே இந்தக் கொடுமையை இஸ்லாம் அங்கீகரிப்பதாகவே நம்புகின்றனர் என்பது ஒருபுறம் இருக்கட்டுமே.

இதே போன்றதுதான் அவ்லியாக்கள் பற்றி கப்று வணங்கிகள் ஆதராமாக எடுத்து வைக்கின்ற அல்குர்ஆன் வசனங்களும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அதாவது சம்மந்தமில்லாவற்றை சம்மந்தமில்லாதவற்றுக்கு ஆதாரமாகக் கொள்கின்றனர்.

கப்று வணங்கிகளின் ஏமாற்று மாயையில் இருந்து விடுதலைபெற நீங்கள் விரும்பினால் பின்வரும் அல்குர்ஆன் வசனங்களையும் கூர்ந்து படியுங்கள். (அல்பகரா. வச: 38, 62, 112, 262, 264, 274, 277) . அவை நேர்வழி நடக்கின்ற, நன்மைகள் செய்கின்ற, தொழுது, ஸகாத் கொடுக்கின்ற, நல்லமல்கள் செய்கின்றவர்களுக்கும் பயம் அச்சம் இல்லை என்றே கூறுகின்றன. அப்படியான பண்புடையவர்களை ஏன் அவ்லியாக்கள் எனக் கூறக்கூடாது !?!

## வாதம்: 08) ஆதம் நபிக்கு வானவர்கள் சுஜூ த் செய்துள்ளனர் என்பது அவ்லியாக்களின் கப்றுகளின் மீது சுஜூ த் செய்யலாம் என்பற்கு ஆதாரம் இல்லையா?

**மறுப்பு:** கப்று வணக்கம் புரிவோர் மற்றொரு கொடிய பாவத்தை அரங்கேற்றுகின்றனர். அதுதான். நல்லடியார்கள் என்று சொல்லப்படுபவர்களின் மண்ணறைகளில் சுஜூ த் செய்தல். அதற்கு ஆதாரம் இருக்கின்றதா என்றால் ஆமாம். இருக்கின்றதே. ஆதம் நபி (அலை) அவர்களுக்கு வானவர்கள் சுஜூ த் செய்யவில்லையா? அதே பெரிய ஆதாரமில்லையா? இதுதான் இந்தப்பாவத்திற்கு இவர்கள் காட்டுகின்ற ஆதாரம்.

வானவர்களையும், இப்லீஸையும் ஆதம் நபிக்கு சுஜூ த் செய்யும்படி சொன்னது படைத்தவனின் கட்டளை. அதை இப்லீஸ் நிறைவேற்றவில்லை. ஆனால் வானவர்கள் நிறைவேற்றினார்கள். அவன் மறுத்தது பற்றி அல்லாஹ் விசாரிக்கின்ற போத அவன் அது பற்றிக்குறிப்பிடுகின்றான். ((பார்க்க: (அல்பகரா: 34) (அஃராப்: 11, 12), (அல்ஹிஜ்ர். 30,31), (அல்இஸ்ரா. 61), அல்கஹஃப். 50) (தாஹா:116), (ஸாத்:73, 75).

இதை நாம் எடுத்துக் கூறியதும், மற்றொரு ஆதாரமாக யூசுப் நபி (அலை) அவர்களுக்கு அவர்களின் பெற்றோர்கள் சுஜூ தில் விழுந்தது. என்பார்கள்.

மார்க்கத்தில் ஆரம்ப கால மக்களுக்கு வழங்கப்பட்ட சட்டம், பின்னர் நமது மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட சட்டம் என இரு வகை சட்டங்கள் உண்டு. உதாரணமாக, நூஹ் நபி, லூத் நபி (அலை) ஆகிய இருவரின் மனைவிகளும் நரகவாதிகள், ஆனால் கணவன்மார்களோ சுவனத்துக்கு நன்மாராயம் பெற்றி நபிமார்கள். அதே போன்று, பிர்அவ்னின் மனைவி ஆசியா அம்மையார் அவர்கள் சுவனத்துப் பெண்களில் ஒருவர். ஆனால் அந்தக் கொடியவன் பிர்அவ்ன் நரகவாதி. (பார்க்க: அத்தஹ்ரீம். 10.11))

இந்த வசனத்தை ஆதாரமாகக் காட்டி காபிரான பெண்களை மனைவியராக ஏற்றுக் கொள்ளலாம் என்பதா? அதே போன்றதுதான் இந்த சுஜூ த் விவகாரமும். இது போன்று ஆரம்பத்தில் அனுமதிக்கப்பட்டிருந்த பல சட்டங்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வருகைக்குப் பின்னால் மாற்றப்பட்டன. அல்லது தடை செய்யப்பட்ட சட்டங்களாகிவிட்டன. அதில் பிறருக்கு சுஜூ த் செய்வதும் ஒன்றாகும். இந்த அடிப்படை அறிவு அற்றுப்போனதால் பெரும் பாவத்திற்காக மக்களை அழைக்கின்றார்கள்.

## வாதம்:09). கப்று கட்ட குர்ஆனில் இடம் பெறும் குகைவாசிகள் பற்றிய செய்தியில் ஆதாரம் உண்டு.

**மறுப்பு:** செத்தவர்களுக்கு எப்படியாவது மரியாதையை உருவாக்கி, அவர்களின் மண்ணறைகள் வணங்கப்பட வேண்டும் என்பதில் அக்கறையாக இருப்பவர்களே கப்று வணங்கிகள்.

கப்று வணக்கத்தை தாம் சார்ந்திருக்கும் ஷாபி மத்ஹப் ஹராமாக்கி இருப்பதைக் கூட இவர் ஆகுமாக்க முயல்கின்றார். கப்று வணக்கத்தை நியாயப்படுத்திட அற்புதான விளக்கங்களைக் கூறி மக்களை கலிமா சொன்ன அபூஜஹ்ல்களாக மாற்றிவருகின்றார்.

இவர்கள் முன்வைக்கும் ஆதாரங்கள் அமெரிக்கா உலக முஸ்லிம்களை பயங்கரவாதிகளாக சித்தரிக்கும் ஆதாரங்களை ஒத்தவையாகும். அவற்றில் பின்வரும் திருமறை வசனமும் ஒன்றாகும்.

فَقَالُوا ابْنُوا عَلَيْهِمْ بُنْيَانًا رَبُّهُمْ أَعْلَمُ بِهِمْ قَالَ الَّذِينَ غَلَبُوا عَلَى أَمْرِهِمْ لَنَتَّخِذَنَّ عَلَيْهِمْ مَسْجِدًا [الكهف : 21]

**அவர்கள் மீது கட்டத்தை எழுப்புங்கள், அவர்கள் பற்றி அவர்களது இரட்சகள் நன்கறிந்தவனாக இருக்கின்றான். என்று அவர்கள் (குகைவாசிகள் பற்றிக்) கூறிக் கொண்டனர். அவர்களின் விஷயத்தில் எல்லை மீறியோர் நாம் அவர்கள் மீது ஒரு பள்ளியைக்கட்டிக் கொள்வோம் எனக் கூறினர். (அல்கஹ்ப். வச: 21).**

இது ஆரம்ப காலத்தில் மரணித்த குகைவாசிகள் விசயத்தில் அக்காலத்தில் வாழ்ந்த மனிதர்கள் பேசிக்கொண்டதைக் கூறும் செய்திகளில் ஒன்றாகும். பிர்அவ்ன் **'நானே உங்களின் உயர்ந்த இரட்சகன்'** எனக் கூறினான். என்பதற்காக **'நான் உங்கள் இரட்சகன்'** என்று கூறுவதற்கு குர்ஆனில் ஆதாரம் இருக்கின்றது எனவாதிடுவது எவ்வளவு அறிவீனமோ அதை விட இது மிகப்பெரிய அறிவீனாமாகும்.

இந்த வசனத்தைப் புரிந்த விதத்தில் மரணிப்பவர்கள் செவியேற்கமாட்டார்கள், அல்லாஹ்விடமே பிரார்த்திக்க வேண்டும் போன்ற வசனங்களை இவர்கள் புரிந்து கொள்ளாமல் இருப்பது ஏனோ!

இந்த வழிகேட்டுத் தத்துவங்களை கலிமாச் சொன்ன அபூஜஹ்லின் பரம்பரையான இந்த கப்றுவணங்கிகள் மாத்திரம்தான் புதிதாக முன்மொழிந்திருக்கின்றார்கள். அல்குர்ஆன் விரிவுரையாளர்களோ, இமாம்களோ இதை இவ்வாறு விளங்கியேதோ, விளக்கியதே கிடையாது. உதாரணத்திற்கு குர்துபி என்ற தப்ஸீர் ஆசரியர் அவர்கள் குறிப்பிடுவதைப் பாருங்கள்.

وتنشأ هنا مسائل ممنوعة وجائزة؛ فاتخاذ المساجد على القبور والصلاة فيها والبناء عليها ، إلى غير ذلك مما تضمّنته السنة من النهي عنه ممنوع لا يجوز (الجامع لأحكام القرآن للقرطبي – (1 / 3391)

(மார்க்கத்தில்) அனுமதிக்கப்பட்டதும், அனுமதிக்கப்படாததுமான பல மார்க்க சட்டங்கள் இங்கே உருவாகுகின்றன. கப்றுகள் மீது பள்ளிகள் அமைத்தல், அவற்றில் தொழுதல், அவற்றின் மீது கட்டடம் கட்டுதல் போன்ற சுன்னாவில் தடுக்கப்பட்டிருக்கின்றவை. அவவை ஆகுமானதல்ல, எனக் குறிப்பிட்டுள்ளார்கள். கப்றுகள் கட்டப்படுவதைத் தடை செய்யும் பல நபிமொழிகளை அங்கு ஆதாரமாகக் காட்டியுள்ளார்கள் என்பதை நீங்கள் படித்து தெரிந்து கொள்ளலாம்.

முஸ்லிமான ஒருவர் மரணித்து விட்டால் அவரைக் குளிப்பாட்டி, கபனிட்டு, தொழுகை நடாத்திய பின்னர், அடக்கம் செய்வதுடன், ஜனாஸாவிற்கு சமூகம் தந்த ஒவ்வொருவரும் தனியாக அவருக்காக பிரார்த்திக்க வேண்டும் எனவும் இஸ்லாம் வழிகாட்டி இருக்கின்றது.

அத்துடன் கப்றுகளை எல்லைமீறி உயர்த்துவது, கல்லால் கட்டுவது, பூசுவது, வணக்கஸ்தலங்காளாக மாற்றுவது, விளக்கேற்றி அலங்கரிப்பது ஆகிய அனைத்தையும் இஸ்லாம் ஹராமாக்கி இருப்பதுடன், அவை யூத, கிரிஸ்தவ கலாச்சாரம் எனவும் பறைசாற்றுகின்றது.

குர்ஆனில் குறைகண்டு, ஸஹாபாக்களும், ஏனைய முஸ்லிம்களும் மதம்மாறிய முர்தத்துகள், காபிர்கள் என வாதிடும் ‘ஷீயா’ என்ற வழிகெட்ட பிரிவினரே ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் அப்பாசியர் ஆட்சி பலவீனமடைந்து, பாதிமிய்ய ஷீஆக்களின் ஆட்சி ஸ்திரம்பெற்ற போது நபி (ஸல்) அவர்களால் குழிதோன்டிப் புதைக்கப்பட்ட இந்தக் கொடிய பாவத்தைத் தோற்றுவித்தனர். அதனை கப்று வணங்கிகளான சூபிகள் பின் தொடர்ந்தனர், இன்றும் அவர்களே அதற்கு புத்துயிருட்டுகின்றனர்.

## வாதம்:10). இறை நேசர்களான அவ்லியாக்களிடம் உதவி தேடலாம் என்பதற்குப் பின்வரும் நபிமொழிய ஆதாரமாகும்.

عنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ اللَّهَ قَالَ مَنْ عَادَى لِي وَلِيًّا فَقَدْ آذَنْتُهُ بِالْحَرْبِ وَمَا تَقَرَّبَ إِلَيَّ عَبْدِي بِشَيْءٍ أَحَبَّ إِلَيَّ مِمَّا افْتَرَضْتُ عَلَيْهِ وَمَا يَزَالُ عَبْدِي يَتَقَرَّبُ إِلَيَّ بِالنَّوَافِلِ حَتَّى أُحِبَّهُ فَإِذَا أَحْبَبْتُهُ كُنْتُ سَمْعَهُ الَّذِي يَسْمَعُ بِهِ وَبَصَرَهُ الَّذِي يُبْصِرُ بِهِ وَيَدَهُ الَّتِي يَبْطِشُ بِهَا وَرِجْلَهُ الَّتِي يَمْشِي بِهَا وَإِنْ سَأَلَنِي لَأُعْطِيَنَّهُ وَلَئِنْ اسْتَعَاذَنِي لَأُعِيذَنَّهُ ... ( صحيح البخاري )

எனக்குரிய நேசரை யார் விரோதிக்கின்றானோ நிச்சயமாக நான் அவனுக்கெதிராகப் போர்ப்பிரகடம் செய்துவிட்டேன், நான் கடமையாக்கிய ஒன்றை விட வேறு எந்த ஒன்றினாலும் எனது அடியான் என்னை நெருங்குவதில்லை. எனது அடியானை நான் நேசிக்கும் வரை மேலதிகமான (நபிலான) வணக்கங்கள் மூலம் அவன் என்னை நெருங்கிக் கெண்டே இருப்பான், நான் அவனை நேசித்துவிட்டால்

அவன் கேட்கின்ற அவனது செவிப்புலனாகவும், அவன் பார்க்கின்ற அவனது பார்வையாகவும், அவன் பிடிக்கின்ற அவனது கரமாகவும், அவன் நடக்கின்ற அவனது காலாகவும் நான் ஆகிவிடுவேன். அவன் என்னிடம் கேட்டால் நிச்சயம் நான் அவனுக்குக் கொடுப்பேன், அவன் என்னிடம் பாதுகாப்பு வேண்டினால் நிச்சயம் நான் அவனுக்கு பாதுகாப்பளிப்பேன், (புகாரி) என்து அந்த ஹதீஸ்.

இதில் அவ்லியாக்களிடம் உதவி வேண்டலாம் என்பதற்கான எவ்வித ஆதாரமும் கிடையாது. மாத்திரமின்றி, ஒருவர் அல்லாஹ்வின் நேசராக (வலியாவாக) விரும்பினால் கடமைகளை கட்டாயம் பேணிக் கொள்வதுடன், உபரியான வணக்கங்களையும் செய்ய வேண்டும் என்றே கூறுகின்றது.

உண்மை விசுவாசிகள் எவரும் அந்த நிலையை அடையலாம். அப்படி வலி நிலையை அடைந்த ஒருவர் அல்லாஹ்விடமே பாதுகாப்புத்தேடவும் வேண்டும், அவனிமே தேவைகளைக் கேட்கவும் வேண்டும் என்ற மற்றொரு பகுதியையும் இந்த ஹதீஸ் கூறுவதை மண்ணறை வணங்கிகள் மறந்தது ஏனோ!

## கப்றுகளை வணக்கஸ்தலங்களாக்குவது மாபெரும் குற்றமாகும்.

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ فِي مَرَضِهِ الَّذِي مَاتَ فِيهِ لَعَنَ اللَّهُ الْيَهُودَ وَالنَّصَارَى اتَّخَذُوا قُبُورَ أَنْبِيَائِهِمْ مَسْجِدًا قَالَتْ وَلَوْلَا ذَلِكَ لَأَبْرَزُوا قَبْرَهُ غَيْرَ أَنِّي أَخْشَى أَنْ يُتَّخَذَ مَسْجِدًا (أخرجه البخاري، ومسلم )

நபி (ஸல்) அவர்கள் மரணமான நோயில் ' தங்களது நபிமார்களின் மண்ணறைகளை பள்ளியாக எடுத்துக் கொண்ட யூதர்களையும், கிரிஸ்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக! என எச்சரித்ததாக குறிப்பிடும் அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் 'இந்த எச்சரிக்கை இல்லாதிருப்பின் நபி (ஸல்) அவர்களின் கப்றை உயர்த்தி இருப்பார்கள், இருந்தும் அது பள்ளியாக மாற்றப்படுவதை நான் அஞ்சுகிறேன்' எனக் குறிப்பிடுகிறார்கள். (புகாரி, முஸ்லிம்).

عَنْ عَائِشَةَ أُمِّ الْمُؤْمِنِينَ أَنَّ أُمَّ حَبِيبَةَ وَأُمَّ سَلَمَةَ ذَكَرَتَا كَنِيسَةً رَأَيْنَهَا بِالْحَبَشَةِ فِيهَا تَصَاوِيرُ فَذَكَرَتَا لِلنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ إِنَّ أُولَئِكَ إِذَا كَانَ فِيهِمْ الرَّجُلُ الصَّالِحُ فَمَاتَ بَنَوْا عَلَى قَبْرِهِ مَسْجِدًا وَصَوَّرُوا فِيهِ تِلْكَ الصُّوَرَ فَأُولَئِكَ شِرَارُ الْخَلْقِ عِنْدَ اللَّهِ يَوْمَ الْقِيَامَةِ (رواه البخاري ،و مسلم)

அன்னையரான உம்மு ஹபீபா (ரழி) அவர்களும், உம்மு ஸலமா (ரழி) ஆகிய இருவரும் ஹபஷாவில் தாம் அவதானித்த உருவப்படங்களுடன் காணப்பட்ட ஒரு கோவிலைப்பற்றி அல்லாஹ்வின் தூதரிடம் எடுத்துக் கூறியபோது **'அவர்கள் தங்களில் உள்ள ஒரு நல்லடியார் மரணித்தால் அவரது மண்ணறையின் மீது ஒரு பள்ளியைக் கட்டுவார்கள், அவர்களின் அந்த உருவங்களை அதில் வரைந்துவிடுவார்கள், இவர்கள்தாம் மறுமையில் அல்லாஹ்விடத்தில் மிகக்கெட்ட படைப்பினமாகும்'** என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். **(புகாரி, முஸ்லிம்).**

தங்கள்மார், பெரியார்கள், நாதாக்கள் என்போரின் உருவப்படங்களை இல்லங்களில் தொங்கவிடுவதும், அவற்றை நினைவு கூர்வதும் இதில் அடங்கும். உலகில் பிறந்து மரணிக்கும் எந்த மனிதனும் எந்த நிலையிலும் கடவுள் நிலையை அடைய முடியாது, அவர் அல்லாஹ்விடம் நெருக்கமான வானவராகவோ, அல்லது அவனால் அனுப்பப்பட்ட தூதராகவோ, அல்லது நல்லடியாராகவோ இருக்கலாம். இதை முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் தனது இறுதி வேளையிலும் எச்சரித்திருக்கின்றார்கள்.

## கட்டப்பட்ட கப்றுகள் தகர்க்கப்பட வேண்டும்.

நபிமார்கள், நல்லடியார்கள் பேரில் எழுப்பப்படும் கப்றுகள் தகர்க்கப்பட்டு, அவை மண்ணோடு மண்ணாக சேர்க்கப்பட வேண்டும் என்பதே இஸ்லாத்தின் உறுதியான நிலைப்பாடாகும்.

عَنْ أَبِي الْهَيَّاجِ الْأَسَدِيِّ قَالَ قَالَ لِي عَلِيُّ بْنُ أَبِي طَالِبٍ أَلَا أَبْعَثُكَ عَلَى مَا بَعَثَنِي عَلَيْهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ لَا تَدَعَ تِمْثَالًا إِلَّا طَمَسْتَهُ وَلَا قَبْرًا مُشْرِفًا إِلَّا سَوَّيْتَهُ ( أخرجه مسلم في صحيحه)

'என்னை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதற்காக அனுப்பினார்களோ அதற்காக உன்னையும் நான் அனுப்பிவைக்கட்டுமா? என 'அபுல்ஹய்யாஜ் அல்அஸதி' (ரழி) அவர்களிடம் அலி (ரழி) அவர்கள் கேட்டுவிட்டு, 'நீ எந்த ஒரு உருவப்படுத்தின் தோற்றத்தை மாற்றாமலும், மேலால் தெரிகின்ற எந்த கப்ரையும் தரைமட்டமாக்காதும் விட்டுவிடாதே' எனக் கூறினார்கள் (நூல்: முஸ்லிம்)

## வாதம்: 11) கப்ரைத் தரைமட்டமாக்குவதல்ல பொருள், சீர் செய்வது என்பதே சரியான பொருள்.

**மறுப்பு :** கப்றுகள் கட்டுவது பெரும் பாவம், கட்டப்பட்ட கப்றுகள் தகர்க்கப்பட வேண்டும் என்று நாம் பிரச்சாரம் செய்கின்ற போது இந்த வாதத்தை முன்வைக்கும் கப்று வணங்கிகள் தமது வணக்கத்திற்கான ஆதாரமாக கப்ரை உடைப்பதல்ல, சீர்செய்வதுதான் அதன் பொருள் என தமது வாதத்தை முன்வப்பதைப் பார்க்கின்றோம்.

**கட்டப்பட்ட கப்றுகள் தகர்க்கப்பட வேண்டும் என்ற சிறு தலப்பில் நாம் ஆதாரமாகக் காட்டிய ஹதீஸில் இடம் பெறும் 'إِلَّا سَوَّيْتَهُ' 'அதைத் தரைமட்டமாக்காது விட்டுவிடாதே'** என்பதை தவறான அர்த்தம் என வாதிடும் இவர்கள் **' அதை சீர் செய்யாது விட்டுவிடாதே'** என்பதுதான் அதன் சரியான அர்த்தம் என விளக்கி, கப்று வணக்கத்தை தொடர்கின்றனர்.

இக்கூற்றிற்கு ஆதாரமாக **'சீரமைத்தல்'** என்பதைக் குறிக்க அல்குர்ஆனில் இடம் பெறும் **سَوَّيْتُهُ 'ஸவ்வைத்துஹு '** 'நான் அவனை சீர் படுத்தினேன்' என்ற பொருளில் அமைந்த வசனத்தை ஆதாரமாகக் கூறுகின்றனர்.

அல்குர்ஆனிலும், நபி (ஸல்) அவர்களின் பொன்மொழிகளிலும் **'ஸவ்வா'** என்ற வார்த்தை **'சீர் செய்தல்' 'சமப்படுத்துதல்' 'மட்டப்படுத்துதல்'** போன்ற பொருள்களில் ஆளப்பட்டுள்ளது.

அரபுமொழியியல் துறைசார்ந்த அறிஞர்களும், ஹதீஸ்கலை வல்லுனர்களும் அது இடம்பெறும் இடத்தையும், நிலையையும் கவனத்தில் கொண்டே அதற்குரிய பொருத்தமான பொருளை முடிவு செய்வர்.

கப்று வணங்கிகள் வாதிடுவது போன்று, கட்டப்பட்ட கப்ரை சீர் செய்தல் என்ற பொருளை அவர்கள் சார்ந்துள்ள மத்ஹபு கூட விளக்கவில்லை. அவர்கள் சார்ந்திருக்கும் மத்ஹபு அறிஞர்கள் தரும் விளக்கம் இவர்களின் விளக்கத்திற்கு நேர் முரணானதாக அமைந்துள்ளது என்பதே உண்மை.

**ஸவ்வா'** என்ற சொல்லுக்கும், அதன் கிளைச் சொற்களுக்கும் இந்த அர்த்தம் மாத்திரம் இருப்பதாக இவர்களாகவே கற்பனை செய்து கப்று கட்டலாம், அங்கு அடங்கப்பட்டுள்ள மகான்களை(?) அவ்லியாக்களை (?) அழைக்கலாம், வணங்கலாம், அவர்களுக்காக நேர்ச்சை செய்யலாம் என்றெல்லாம் உளறி பாமரமக்களை படைத்திவனிடம் நேரடியாக பிரார்த்திக்க விடாது மரணித்தவர்களிடம் வேண்டுமாறு கூறி வழிகெடுப்பதைப் பார்க்கின்றோம்.

## 'ஸவ்வா' என்ற அரபிச் சொல்லின் விளக்கம்.

تَاللَّهِ إِن كُنَّا لَفِي ضَلَالٍ مُّبِينٍ إِذْ نُسَوِّيكُم بِرَبِّ الْعَالَمِينَ [الشعراء: 97- 98] 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக உங்களை அகிலத்தாரின் இரட்சகனுடன் உங்களை நாம் சமப்படுத்திக் கூறுவோராக இருந்த காரணத்தால் தெளிவான வழிகேட்டிலேயே இருந்தோம் (அத் அஷ்ஷு அரா. வச: 97-98).

மேற்படி வசனத்தில் ‘அகிலத்தாரின் இரட்சகனை சீர் செய்வோராக இருந்தோம் என பொருள் கொண்டால் எப்படி இருக்கும்! அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கு சமமாக பெரியார்களை, சாதாத்துக்களை மதிப்போர் பற்றியே இந்த வசனம் பேசுகின்றது, அவர்கள் மறுமையில் நரகத்தில் போடப்படும் பொழுது இந்த வார்த்தையைக் கூறுவார்கள் என்பதை கவனத்தில் கொள்ளவும்.

يَوْمَئِذٍ يَوَدُّ الَّذِينَ كَفَرُواْ وَعَصَوُاْ الرَّسُولَ لَوْ تُسَوَّى بِهِمُ الأَرْضُ [النساء : 42] ‘நிராகரித்தோரும், இத்தூதருக்கு மாறுசெய்தோரும் தம்மைக் கொண்டு பூமி சமப்படுத்தப்படக்கூடாதா? என (அந்நாளில்) ஆசைப்படுவர் (அத்தியாயம்: 03. வச:42).

இங்கு **‘ஸவ்வா’** என்ற இறந்த காலச் சொல்லில் இருந்து பிறந்த எதிர்கால செயற்பாட்டு வினையான **‘துஸவ்வா’** என்ற சொற்கள் ஆளப்பட்டுள்ளன.

இவர்கள் ‘ஸவ்வா’ என்ற சொல்லிற்கு தரும் **‘சீர் செய்தல் என்ற** பொருளை இந்த வசனத்திற்கும் வழங்க முடியுமா? அரபு மொழியில் பாண்டித்தியம் பெற்ற பண்டிதர்கள் போல தம்மை அடையாளப்படுத்திக் கொள்ளும் இவர்கள் எவ்வளவு பெரும் பொய்யர்கள் என்பதை சிந்தித்துப்பாருங்கள்.

இவ்வாறே அஷ்ஷம்ஸ் அத்தியாயம் , 14வது வசனத்தில் ஸாலிஹ் நபியைப் பொய்ப்பித்த ஸமூத் கூட்டத்தாரை தண்டித்து, தரைமட்டமாக்கியதைக் குறிப்பிடுகின்ற போது فَكَذَّبُوهُ فَعَقَرُوهَا فَدَمْدَمَ عَلَيْهِمْ رَبُّهُمْ بِذَنْبِهِمْ فَسَوَّاهَا [الشمس: 14 ] அவர்கள் அவரைப் பொய்ப்பித்தனர். அதை (ஒட்டகத்தின் கால் நரம்பைத் தறித்தனர்). அவர்களின் இரட்சகன் அவர்கள் மீது தண்டடையை சரமாரியாக இறக்கினான். அவர்களின் பாவத்தின் காரணமாக அவர்களைச் தரைமட்டாக்கினான். அங்கும் **‘ஸவ்வா’** என்ற வார்த்தையை அல்லாஹ் பிரயோகித்துள்ளான்.

அந்த சனத்தில் இடம் பெறும் **‘ஸவ்வா’** என்ற வார்த்தைக்கு சீர்படுத்தினான் என பொருள் கொள்வது மிகப்பெரும் முட்டாள்தனமாகும்.

عَنْ جَابِرٍ قَالَ نَهَى رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ يُجَصَّصَ الْقَبْرُ وَأَنْ يُقْعَدَ عَلَيْهِ وَأَنْ يُبْنَى عَلَيْهِ (مسلم)

கப்ரைப் பூசுவதையும், அதைக்கட்டுவதையும், அதன் மீது அமர்வதையும் நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள். (முஸ்லிம்). என்ற செய்தியில் கப்ரைக் சீர்படுத்துவதற்கு முன் அதைக் கட்டுவது என்பது அடிப்படையிலே தவறான ஒரு செயலாயிற்றே! இந்த அடிப்படை அறிவுகூட இவர்களுக்கு மழுங்கடிக்கப்பட்டுள்ளதைப் பார்க்கின்றோம்.

மஸ்ஜிதுன் நபவியை நிறுவுவதற்கு முன் அதன் நிலம் பள்ளமும், குளியும், குன்றும், கிடங்குமாகக் காணப்பட்டது. நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்கு அமைவாக அது தூர்த்து சமப்படுத்தப்பட்டது என்பதைக் குறிக்க ‘ **ثُمَّ بِالْخَرِبِ فَسُوِّيَتْ** பின்னர் பாழடைந்த குழிகளைக் கொண்டு (ஏவினார்கள்) அது மட்டப்படுத்தப்பட்டது (புகாரி) என நபிமொழியில் பிரயோகிக்கப்பட்டுள்ள வாசகத்தை அவதானித்தால் **‘ஸவ்வா’** என்ற வார்த்தைக்கு தரைமட்டமாக்குவது, சமப்படுத்துவது எனப் பொருள் கொள்வதே பொருத்தமானதாகும்.

**‘ஸவ்வா’** என்ற வார்த்தைக்கு சீர் செய்தல் என வாதத்திற்காக வைத்துகொண்டால் **‘சீர் செய்தல்’** என்பது அதைக் கட்டி, அது பாழ்போன பின்னர்தானே சாத்தியப்படும். கப்ரைக் கட்டுவதைத்தான் அல்லாஹ்வின் தூதர் தடை செய்துவிட்டார்களே! தடுத்த ஒன்றை மார்க்கமாக்கி, புதிய வியாக்கியானம் செய்ய இவர்களுக்கு அனுமதி வழங்கியவன் யார்?

**வாதம் 12).** அல்லாஹ்வின் தூதரின் கப்று அவர்களின் பள்ளிக்குள்யேயே அமைந்திருப்பது தர்ஹாகக்கள் எழுப்புவதற்கான ஆதாரமாக இல்லையா?

**மறுப்பு :** பள்ளிக்குள் கப்றுகள் வைத்துக் கொண்டு அல்லாஹ்வையும் வணங்கி, அவ்லியாக்களையும் கைவிட முடியாத இப்படி ஒரு சிலர் கேள்வி எழுப்புவதுண்டு. தாம் சார்ந்திருக்கும் மத்ஹப் அறிஞரான இமாம் நவவி (ரஹ்) அவர்கள் இது பற்றித் தரும் விளக்கம் இதற்கு பொருத்தமானதாகும்.

قال النووي رحمه الله: قَالَ الْعُلَمَاء : إِنَّمَا نَهَى النَّبِيّ صَلَّى اللَّه عَلَيْهِ وَسَلَّمَ عَنْ اِتِّخَاذ قَبْره وَقَبْر غَيْره مَسْجِدًا خَوْفًا مِنْ الْمُبَالَغَة فِي تَعْظِيمه وَالِافْتِتَان بِهِ ، فَرُبَّمَا أَدَّى ذَلِكَ إِلَى الْكُفْر كَمَا جَرَى لِكَثِيرٍ مِنْ الْأُمَم الْخَالِيَة . وَلَمَّا اِحْتَاجَتْ الصَّحَابَة - رِضْوَان اللَّه عَلَيْهِمْ أَجْمَعِينَ - وَالتَّابِعُونَ إِلَى الزِّيَادَة فِي مَسْجِد رَسُول اللَّه صَلَّى اللَّه عَلَيْهِ وَسَلَّمَ حِين كَثُرَ الْمُسْلِمُونَ وَامْتَدَّتْ الزِّيَادَة إِلَى أَنْ دَخَلَتْ بُيُوت أُمَّهَات الْمُؤْمِنِينَ فِيهِ ، وَمِنْهَا حُجْرَة عَائِشَة - رَضِيَ اللَّه عَنْهَا - مَدْفِن رَسُول اللَّه صَلَّى اللَّه عَلَيْهِ وَسَلَّمَ وَصَاحِبَيْهِ أَبِي بَكْر وَعُمَر - رَضِيَ اللَّه عَنْهُمَا - بَنَوْا عَلَى الْقَبْر حِيطَانًا مُرْتَفِعَة مُسْتَدِيرَة حَوْله لِئَلَّا يَظْهَر فِي الْمَسْجِد ، فَيُصَلِّي إِلَيْهِ الْعَوَامّ وَيُؤَدِّي الْمَحْذُور ، ثُمَّ بَنَوْا جِدَارَيْنِ مِنْ رُكْنَيْ الْقَبْر الشَّمَالِيَّيْنِ ، وَحَرَّفُوهُمَا حَتَّى اِلْتَقَيَا حَتَّى لَا يَتَمَكَّن أَحَد مِنْ اِسْتِقْبَال الْقَبْر ، وَلِهَذَا قَالَ فِي الْحَدِيث : لَوْلَا ذَلِكَ لَأُبْرِزَ قَبْره ، غَيْر أَنَّهُ خَشِيَ أَنْ يُتَّخَذ مَسْجِدًا . وَاَللَّه تَعَالَى أَعْلَم بِالصَّوَابِ. شرح النووي على مسلم - (ج 2 / ص 292)

'மண்ணறையை எல்லைமீறி கண்ணியப்படுத்துதல், அதனால் ஏற்படும் குழப்பம் போன்றதை அஞ்சியே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தனது கப்ரையும், பிறரின் கப்ரையும் பள்ளியாக எடுக்கக் கூடாது என தடுத்திருக்கிறார்கள், சென்ற சமுதாயத்தவரில் ஏற்பட்டது போல் சிலவேளை 'கு∴ப்ர்' நிராகரிப்பின் பக்கமும் இது இட்டுச்செல்லாம், முஸ்லிம்கள் அதிகமான போது (மதிப்புக்குரிய) ஸஹாபாக்களும், தாபியீன்களும் (சங்கைமிக்க) அல்லாஹ்வின் தூதரின் பள்ளியை விஸ்தரிக்க வேண்டிய தேவை ஏற்பட்ட போது உம்முஹாத்துல் மு∴மினீன்களின் அறைகளும் அந்த விஸ்தரிப்பில் உள்ளடங்கியது. அதில் அல்லாஹ்வின் தூதரின் (புனித) அடக்கஸ்தலமும், அவர்களின் இருதோழர்களான அபூபக்கர் (ரழி), உமர் (ரழி) ஆகியோரின் அடக்கஸ்தலங்களும் அமைந்திருக்கும் அன்னை ஆயிஷா (ரழி) அவர்களின் அறையும் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்களின் அடக்கஸ்தலத்தை சூழ வட்டவடிவில் பள்ளிக்கு தென்படாதவிதமாக நீண்ட சுவர் எழுப்பப்பட்டது, அங்கு பொது மக்கள் தொழுவார்கள் (இருப்பினும்) மார்க்கத்தில் எச்சரிக்கப்பட்டது தவிர்க்கப்பட்டு விடும். இதன் பின்னரும் அதன் இரு வடமுனைகளிலும் இரு சுவர்களை எழுப்பினார்கள், கப்ரை முன்னோக்காதிருக்க அவற்றின் இரு முனையும் (ஒன்றுடன் ஒன்று) படும்படியாக அவ்விரு சுவர்களையும் திருப்பியும் வைத்தனர், இதற்காகத்தான் ஹதீஸில் 'இந்த எச்சரிக்கை இல்லாதிருப்பின் அவர்களின் கப்று வெளிப்படுத்தப்பட்டிருக்கும் எனினும் அது பள்ளியாக மாற்றப்பட்டுவிடுமோ என அவர்கள் அஞ்சியுள்ளார்கள்' இவ்வாறு அறிஞர்கள் கூறியுள்ளார்கள். (அல்லாஹ்வே சரியானதுபற்றி நன்கு அறிந்தவன்). என இமாம் நவவி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். (ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம். பாகம்: 2- பக்கம் 225)

அல்லாஹ்வின் தூதரின் அடக்கஸ்தலம் அவர்களின் பள்ளியின் விஸ்தரிப்பின் போதே உள்வாங்கப்பட்டிருக்கின்றது, அதே வேளை அவர்கள் எதை எச்சரித்தார்களோ அது நடக்காமல் இருப்பதற்காக அல்லாஹ் அவர்களின் மண்ணறையை இவ்வாறான வழிமுறை மூலம் பாதுகாத்துள்ளான் என்றே இமாம் நவவி (ரஹ்) அவர்களின் தீர்ப்பு தெளிவுபடுத்துகின்றது.

இந்த எச்சரிக்கை இல்லாதிருப்பின் அவர்களின் கப்று உயர்த்தப்பட்டிருக்கும் என்பதை விளக்கும் 'இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி' (ரஹ்) அவர்கள்

قَوْله : ( لَأُبْرِزَ قَبْره ) أَيْ لَكُشِفَ قَبْر النَّبِيّ صَلَّى اللَّه عَلَيْهِ وَسَلَّمَ وَلَمْ يُتَّخَذ عَلَيْهِ الْحَائِل ، وَالْمُرَاد الدَّفْن خَارِج بَيْته ، وَهَذَا قَالَتْهُ عَائِشَة قَبْل أَنْ يُوَسَّع الْمَسْجِد النَّبَوِيّ ، وَلِهَذَا لَمَّا وُسِّعَ الْمَسْجِد جُعِلَتْ حُجْرَتهَا مُثَلَّثَة الشَّكْل مُحَدَّدَة حَتَّى لَا يَتَأَتَّى لِأَحَدٍ أَنْ يُصَلِّي إِلَى جِهَة الْقَبْر مَعَ اِسْتِقْبَال الْقِبْلَة .قَالَ الْكَرْمَانِيُّ : مُفَاد الْحَدِيث مَنْع اِتِّخَاذ الْقَبْر مَسْجِدًا فتح الباري لابن حجر – (ج 4 / ص 390)

நபி (ஸல்) அவர்கள் அடக்கஸ்தலம் வெளிப்படுத்தப்பட்டிருக்கும், அதற்கென திரை ஏற்படுத்திக் கொள்ளப்பட்டிருக்காது, வீட்டிற்கு வெளியில் அடக்கம் செய்யப்பட்டிருப்பார்கள் என்துபதான் இதன் அர்த்தமாகும், இதனை அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் **'மஸ்ஜிதுன் நபவி'** விஸ்தரிக்கப்படுவதற்கு முன்னர் கூறியுள்ளார்கள், இதனால்தான் அந்தப்பள்ளி விஸ்தரிக்கப்பட்ட போது (தொழும்) ஒருவர் கிப்லாவை முன்னோக்குவதுடன், கப்ரை முன்னோக்காதவாறு அன்னை அவர்களின் அறை முக்கோண வடிவில் அமைக்கப்பட்டிருந்தது' என விளக்குகிறார்கள். (ஃபத்ஹுு ல்பாரி. பாகம் 4. பக்கம்: 390)

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் மஸ்ஜிதுன் நபவியின் விஸ்தரிப்பு பற்றி விளக்குகின்றபோது ' அல்லாஹ்வின் தூதரின் பள்ளியை அவர்களின் மரணத்தின் பின் இரண்டாம் கலீஃபா உமர் (ரழி) அவர்களும், மூன்றாம் கலீஃபா உஸ்மான் (ரழி) அவர்களும், பின்னர் அப்துல் மலிகின் மகன் வலீத் அவர்கள், அவரது ஆட்சியிலும் விஸ்தரிப்பு செய்தார்கள். இதற்கு முன்னர் பள்ளியை விட்டும் பிரிக்கப்பட்டிருந்த உம்முஹாத்துல் முஃமினீன்களின் அறைகள் பள்ளியுடன் இணைக்கப்பட்டன, இது இவரது சிறிய தந்தையின் மகன் உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் மதீனாவின் கவர்னராக இருந்த போது நடந்தது.

இமாம் இப்னு கஸீரின் மற்றொரு கூற்றை சிந்தித்தால் 'இரண்டு கலீபாக்களும் தமது காலத்தில் வேறுபடுத்தி வைத்திருந்த அன்னையரின் இல்லங்கள் ஹிஜ்ரி 86ற்குப் பின்னரே பள்ளியுடன் இணைக்கப்பட்டுள்ளன என்பதையும், இதற்கு முன்னர் அது பிரிக்கப்பட்டே இருந்து வந்துள்ளன என்பதையும் அறியலாம். (பார்க்க: அல்பிதாயா வன்னிஹாயா. பாகம்: 1- பக்கம் 216. பாகம் 3- பக்கம்: 273)

## வாதம்: 13) **அவ்லியாக்கள் பேரில் கந்தூரி** எடுப்பது அவர்களை கௌரவிப்பதாகும். இதில் என்ன தவறு கண்டீர்கள்? பிள்ளை பிறந்தால், விருந்தாளி வந்தால் அவர்களுக்கு ஆடு அறுத்துக் கொடுப்பது ஆகுமானால் இது எப்படி ஹராமானது!

**மறுப்பு:** அவ்லியாக்கள் பேரில் கந்தூரி நடாத்துபவர்கள் இந்த வாதத்தைக் கூறியே இன்றும் கந்தூரி நடத்துகின்றனர். மேற்படி வாதத்தையே முன்வைக்கவும் செய்கின்றனர்.

ஒரு குழந்தை பிறந்தால் அதற்காக அகீகாக் கொடுப்பதையும், வீட்டிற்கு வரும் விருந்தினரை கௌரவிப்பதையும் அனுமதித்த அல்லாஹ்வும், அவனது தூதருமே இந்த வழிமுறையை ஹராமாக்கியுள்ளனர். வீட்டுக்கு வரும் விருந்தினர் அவர்களுக்காக அறுக்கப்படும் மாமிசத்தையும், தயாரிக்கப்படும் உணவையும் உண்ணுவார்கள். அவ்லியாக்கள் உண்ணுவார்களா ? என்று கொஞ்சம் சிந்திக்க வேண்டும்.

இதனை இஸ்லாமோ, இவர்கள் சார்ந்திருக்கும் மத்ஹபுகளோ அங்கீகரிக்கவில்லை என்பதே உண்மை. இந்த நிலையில் அதைத் தூக்கிப்பிடித்து அரங்கேற்றுவது சரியா என்று இவர்கள்தான் முதலில் சிந்திக்க வேண்டும்.

**'அல்லாஹ் அல்லாதோருக்காக அறுத்துப் பலியிடுபவனை அல்லாஹ் சபிப்பானாக'** என நபி (ஸல்) அவர்கள் கூறிய செய்தி முஸ்லிம் என்ற கிரந்தத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இதற்கு விளக்கமளிக்கும் இமாம் நவவி (ரஹ்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

وَأَمَّا الذَّبْح لِغَيْرِ اللَّه فَالْمُرَاد بِهِ أَنْ يَذْبَح بِاسْمِ غَيْر اللَّه تَعَالَى كَمَنْ ذَبَحَ لِلصَّنَمِ أَوْ الصَّلِيب أَوْ لِمُوسَى أَوْ لِعِيسَى صَلَّى اللَّه عَلَيْهِمَا أَوْ لِلْكَعْبَةِ وَنَحْو ذَلِكَ ، فَكُلّ هَذَا حَرَام ، وَلَا تَحِلّ هَذِهِ الذَّبِيحَة ، سَوَاء كَانَ الذَّابِح مُسْلِمًا أَوْ نَصْرَانِيًّا أَوْ يَهُودِيًّا ، نَصَّ عَلَيْهِ الشَّافِعِيّ ، وَاتَّفَقَ عَلَيْهِ أَصْحَابنَا ، فَإِنْ قَصَدَ مَعَ ذَلِكَ تَعْظِيم الْمَذْبُوح لَهُ غَيْر اللَّه

تَعَالَى وَالْعِبَادَةَ لَهُ كَانَ ذَلِكَ كُفْرًا ، فَإِنْ كَانَ الذَّابِح مُسْلِمًا قَبْل ذَلِكَ صَارَ بِالذَّبْحِ مُرْتَدًّا .(( شرح النووي على مسلم – ج 6 / ص 475)

'அல்லாஹ் அல்லாதோருக்காக அறுத்தல் என்பதன் நோக்கம் என்னவெனில் சிலைக்காக, அல்லது சிலுவைக்காக, அல்லது மூஸா (அலை) , அல்லது ஈஸா (அலை) ஆகியோருக்காக, அல்லது கஃபாவிற்காக, அல்லது அதல்லாவற்றிற்காக அறுத்துப்பலியிடுபவன் (செயல்) போன்றதாகும். இவை அனைத்தும் ஹராமாகும். அறுப்பவன் முஸ்லிமாகவோ, அல்லது கிரிஸ்தவனாகவோ, அல்லது யூதனாகவோ இருந்தாலும் அந்தப்பலிப்பிராணி ஹலாலாகாது. இதையே ஷாஃபி (ரஹ்) அவர்கள் உறுதியாகக் குறிப்பிட்டுள்ளார்கள், இக்கருத்திலேயே நமது தோழர்களும் ஏகமனதாக இருக்கின்றனர். அத்துடன் அல்லாஹ் அல்லாது யாருக்காக அறுக்கப்படுப்படுகின்றதோ அவரை கண்ணியப்படுத்துவதையும், அவருக்கு வழிப்படுவதையும் அவர் நோக்கமாகக் கொள்வாரானால் அது **'குஃப்ர்'** எனும் நிராகரிப்பாகி விடும், அறுப்பவன் முஸ்லிமாக இருப்பின் அறுத்த காரணத்தால் அவன் **'முர்தத்'** எனும் மதம் மாறியவனாக மாறிவிடுகின்றான். (பார்க்க: ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்: பாகம் -6 பக்கம்: 475)

இவ்வளவு கடுமையான நிலைப்பாட்டைக் கொண்ட தமது மத்ஹபின் தீர்ப்பை முதுகுக்குப்பின் தூக்கி எறிந்த ஷாஃபி மத்ஹப் ஆலிம்கள் என்ன மனதுடன் பெரியார்கள், மற்றும் அவ்லியாக்கள் பேரில் இவ்வாறான அனாச்சாரங்களை அரங்கேற்றுகின்றனரோ தெரியவில்லை.

## கலீபா உமர் (ரழி) அவர்களின் நடவடிக்கை.

இரண்டாம் கலீபா உமர் (ரழி) அவர்களின் ஆட்சியில் ஹுதைபியா உடன்படிக்கை (பைஅத்) மரத்திடியின் கீழ் மக்கள் தொழ ஆரம்பித்தார்கள்.

ما هذا؟ قالوا مكان صلى فيه رسول الله قال: « أتريدون أن تتخذوا آثار أنبيائكم مساجد، إنما هلك من كان قبلكم بهذا. من أدركته فيه الصلاة فليصل وإلا فليمض». و« حين بلغه أن أناساً يأتون الشجرة التي بويع عندها النبي صلى الله عليه وسلم  أمر بها فقطعت» (قال الحافظ في الفتح 448/7 إسناده صحيح).

உமர் (ரழி) அவர்களுக்கு செய்தி எட்டிய போது இது என்ன என விசாரித்தார்கள். இது அல்லாஹ்வின் தூதர் தொழுத இடம் என்றார்கள். உங்கள் நபிமார்களின் அடிச்சுவடுகளை நீங்கள் பள்ளிவாயில்களாக எடுத்துக்கொள்ள விரும்புகின்றீர்களா? உங்களுக்கு முன்பு வாழ்ந்தோர் இப்படித்தான் அழிந்து போனார்கள். எவருக்கு இதில் தொழுகை நேரம் வந்துவிட்டதோ அவர்கள் அதில் தொழட்டும், இல்லை என்றால் நடையைக்கட்டட்டும் என்று கூறினார்கள். பின்னர் மனிதர்கள் பைஅத் செய்யப்பட்ட அந்த மரமிருக்கும் இடத்திற்கு வருகின்றார்கள் என்ற செய்தி அவர்களை எட்டிய போது அதை வெட்டிவிடும்படி பணித்தார்கள், உடனே அது வெட்டப்பட்டது. (பத்ஹுல் பாரி).

நபி (ஸல்) அவர்கள் தொழுத இடம் என்பதை மக்கள் **பரகத் வேண்டி** நாடிய போது கலீபாவின் நடவடிக்கை எப்படி இருந்திருக்கின்றது என்பதைப் பாருங்கள். அவ்லியாக்கள் எனப்படுவோர் வாழ்ந்த இடங்களின் அடையாளங்கள் சமுதாயத்திற்கு தெரிவதால் பல குழப்பங்கள் வருகின்றன என அவற்றை உண்மையான முஸ்லிம் என்ன செய்ய வேண்டும் என்பதற்க இது சான்று.

## கப்று வணக்கம் பற்றிய அறிஞர்களின் தீர்ப்புக்கள்

கப்று வணக்கத்தை இஸ்லாம் அங்கீகரிக்கவில்லை. மாற்றமாக அது மார்க்கம் வெறுக்கின்ற ஒரு வழிமுறைதான் என்பதை மென்மேலும் உறுதி செய்ய மார்க்கப் பெருந்தகைகளின் கருத்துக்கள் குறிப்பாக கப்று வணக்கத்தை நியாயப்படுத்துவோர் சார்ந்திருக்கும் மத்ஹபுடைய அறிஞர்களின் தீர்ப்புக்கள் இங்கே தரப்படுகின்றன.

## ∃ ஷா:.பி (ரஹ்) அர்கள்.

கப்றுகள் மீது உட்காரவும் வேண்டாம், அவற்றை நோக்கி தொழவும் வேண்டாம் (முஸ்லிம்) என்ற நபி (ρ) அவர்களின் கூற்றை விளக்கும் இமாம் நவவி (ரஹ்) அவர்கள்,

فِيهِ تَصْرِيح بِالنَّهْيِ عَنْ الصَّلَاة إِلَى قَبْر ، قَالَ الشَّافِعِيّ - رَحِمَهُ اللَّه - : وَأَكْرَه أَنْ يُعَظَّم مَخْلُوق حَتَّى يُجْعَل قَبْره مَسْجِدًا مَخَافَة الْفِتْنَة عَلَيْهِ وَعَلَى مَنْ بَعْده مِنْ النَّاس . ( شرح النووي على مسلم - ج 3 / ص 394)

'கப்ரை முன்னோக்கித் தொழுவது தடை என்பது இதில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது எனக் கூறிய பின் **'ஒரு மனிதனது கப்ர் பள்ளியாக எடுத்துக் கொள்ளப்படும் அளவு அவன் கண்ணியப்படுத்தப்படுவதை நான் முற்றாக வெறுக்கிறேன். (இதனால்) இவன்மீதும், இவனுக்கு பின்வருவோர் மீதும் (மார்க்கத்தில்) குழப்பத்தை அஞ்சுவதே இதற்குக் காரணம்.** என இமாம் ஷா:.பிஈ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாக எடுத்தெழுதியுள்ளார்கள். (ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம். பாகம்: 3- பக்கம் 349)

தொப்பி இல்லாமல் தொழுவது மக்ரூஹ் என மத்ஹபில் போதிக்கப்பட்டதையே பர்ழைவிட பர்ழாகக் கருதும் இவர்கள் இமாம் ஷாபி (ரஹ்) அவர்கள் வெறுப்பதை ஏன் வெறுத்து ஒதுங்குவதில்லை!

قال الشافعي رحمه الله : وقد رأيت من الولاة من يهدم بمكة ما يبنى فيها فلم أر الفقهاء يعيبون ذلك (الأم –ج 1 / ص 316)

மக்காவில் இருந்த ஆட்சியாரளர்கள் அங்கு கட்டப்பட்ட கப்றுகளைத் தகர்ப்பதைக் கண்டேன், மார்க்க அறிஞர்கள் அதைக்குறைகூற நான் காணவில்லை என இமாம் ஷா:.பி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். (பார்க்க: அல்உம்மு. பாகம்: 1- பக்கம்: 316).

## ∃ இமாம் இப்னு ஹஜர் அல்ஹைஸமி (ரஹ்) அவர்கள்.

இப்னு ஹஜர் அல்ஹைதமி என்பவருக்கு ' **الزواجر عن اقتراف الكبائر** 'அஸ்ஸவாஜிர் அன் இக்திராபில் கபாயிர்' என்ற நூலும் உண்டு. அவர்கள் அதில்

( الْكَبِيرَةُ الثَّالِثَةُ وَالرَّابِعَةُ وَالْخَامِسَةُ وَالسَّادِسَةُ وَالسَّابِعَةُ وَالثَّامِنَةُ وَالتِّسْعُونَ : اتِّخَاذُ الْقُبُورِ مَسَاجِدَ ، وَإِيقَادُ السُّرُجِ عَلَيْهَا ، وَاتِّخَاذُهَا أَوْثَانًا ، وَالطَّوَافُ بِهَا ، وَاسْتِلَامُهَا ، وَالصَّلَاةُ إلَيْهَا )

கப்றுகளை பள்ளிகளாக எடுப்பதும், அவற்றின் மீது விளக்கேற்றுதல், அவற்றை சிலைகளைப்போல எடுத்தல், அதைச்சுற்றிவலம் வருதல், அவற்றை தொடுதல், அதனை நோக்கி தொழுதல். 93, 94, 95, 96, 97, 98, வது பெரும்பாவங்களின் உள்ளவைாகும். எனக்குறிப்பிட்ட பின்னர்

وَتَجِبُ الْمُبَادَرَةُ لِهَدْمِهَا وَهَدْمِ الْقِبَابِ الَّتِي عَلَى الْقُبُورِ إذْ هِيَ أَضَرُّ مِنْ مَسْجِدِ الضِّرَارِ لِأَنَّهَا أُسِّسَتْ عَلَى مَعْصِيَةِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لِأَنَّهُ نَهَى عَنْ ذَلِكَ وَأَمَرَ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِهَدْمِ الْقُبُورِ الْمُشْرِفَةِ ، وَتَجِبُ إزَالَةُ كُلِّ قِنْدِيلٍ أَوْ سِرَاجٍ عَلَى قَبْرٍ وَلَا يَصِحُّ وَقْفُهُ وَنَذْرُهُ انْتَهَى .الزواجر عن اقتراف الكبائر – (ج 1 / ص 386)

'இவற்றை தகர்ப்பதற்கு தீவிரம்காட்டுவதும், கப்றுகள்மீது கட்டப்பட்டுள்ள குப்பாக்களை தகர்ப்பதும், அவசியமாகும். இவை நபி (ρ) அவர்களின் காலத்தில் காணப்பட்ட மஸ்ஜதுள்ளிரார் என்ற பள்ளியை விட மிகத்தீங்கானதாகும். ஏனெனில் இவை அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு மாறுசெய்வதன் பேரில் அமைக்கப்பட்டுள்ளது. அவர்கள் இதை தடை செய்திருப்பதுடன், உயரமான கப்றுகளை இடித்துவிடும்படி ஏவியும் உள்ளார்கள். கப்ரின் மீதிருக்கின்ற ஒவ்வொரு விளக்கையும் அகற்றுவது அவசியமாகும். அதனை வக்பு செய்வதோ, நேர்ச்சை செய்வதோ கூடாது.

(பார்க்க: அஸ்ஸவாஜிர் பாகம்.1 பக்கம் 386- ல் பெரும்பாவங்கள் பற்றிக்குறிப்பிடும் போது பின்வருமாறு தீர்ப்பு கூறியுள்ளார்கள்.

## ∃ இமாம் குர்துபி (ரஹ்) அவர்கள்.

அல்கஹ்ப் அத்தியாயத்தில் இடம் பெறும் 21வது வசனத்தை விளக்குகின்ற இமாம் குர்துபி (ரஹ்) அவர்கள் கப்ருகள் கட்டப்படுவது மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட காரியம் என்பதை தெளிவாக எடுத்தெழுதிய

والتسنيم في القبر : ارتفاعه قدر شبر؛ مأخوذ من سنام البعير الجامع لأحكام القرآن للقرطبي – (1 / 393)

**கப்ரை உயர்த்துவது என்பது ஒரு சாண் அளவு உயர்த்துவதாகும்.** அது ஒட்டகத்திமிழைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் சொல்லில் இருந்து பெறப்பட்டதாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். (பார்க்க: தப்ஸீர் குர்துபி. பாகம்: 1- பக்கம்: 393 மேற்படி வசனத்தின் விளக்கம்)

ஒட்டகத்தின் திமிழைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு சொல்லை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோழர்கள் பயன்படுத்தியுள்ளார்கள் என்பதற்காக மண்ணறையை வீடு போன்று கட்டி விழாக்கொண்டாட முடியாது. மாற்றமாக ஒரு சாண் அளவுதான் உயர்த்தப்பட வேண்டும் என இங்கு இமாமவர்கள் விளக்கி இருப்பதைக் கப்று வணக்கம் கூடும் என்பதை அதிமதிகம் அலட்டிக் கொள்வோர் கவனித்தில் கொண்டால் தெளிவு பெறுவார்கள்.

## இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள்.

ஹிஜ்ரி (774)ல் மரணமான மிகப்பெரும் அறிஞர்களில் ஒருவர்தான் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள், அவர், தப்ஸீர், (அல்குர்ஆன் விரிவுரை), ஹதீஸ், ஹதீஸ் பகுப்பாய்வு, தாரீஹ் (வரலாறு) போன்ற சகல துறைகளிலும் சிறப்பித்து விளங்கிய மாமேதை.

அவர்களின் காலத்தில் எகிப்தில் வாழ்ந்த மக்கள் நபீஸா அல்குரஷிய்யா'' என்ற ஸாலிஹான பெண் மீது அளவு கடந்த பிரியமும், தவறான நம்பிக்கையும் கொண்டிந்தனர். இவர் பற்றிய தகலை (ஹி:208) ன் நிகழ்வு என்ற தலைப்பில் வெளியிடும் இமாமவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

....... وكانت وفاتها في شهر رمضان من هذه السنة فيما ذكره ابن خلكان . قال: ولاهل مصر فيها اعتقاد .

قلت: وإلى الآن قد بالغ العامة في اعتقادهم فيها وفي غيرها كثيرا جدا، ولا سيما عوام مصر فإنهم يطلقون فيها عبارات بشيعة مجازفة تؤدي إلى الكفر والشرك، وألفاظا كثيرة ينبغي أن يعرفوا أنها لا تجوز . وربما نسبها بعضهم إلى زين العابدين وليست من سلالته . والذي ينبغي أن يعتقد فيها ما يليق بمثلها من النساء الصالحات، وأصل عبادة الاصنام من المغالاة في القبور وأصحابها، وقد أمر النبي صلى الله عليه وسلم بتسوية القبور وطمسها، والمغالاة في البشر حرام . ومن زعم أنها تفك من الخشب أو أنها تنفع أو تضر بغير مشيئة الله فهو مشرك . رحمها الله وأكرمها . (( **البداية والنهاية** – (**10** / 286)

வரலாற்றாசிரயரான **இப்னு ஹல்லிகான்** அவர்களின் கூற்றுப்படி ஒரு ரமளானில் இந்த ஆண்டில்தான் (208-ல்) அந்தப் பெண் மரணமானார்கள், **நான் கூறுகின்றேன்** (கேழுங்கள்). எகிப்து வாசிகள் அவர் பேரில் பல

நம்பிக்கையுடையோராக இருக்கின்றனர். எனக் கூறிய பின், ‘ பாமரர்கள் இந்தப் பெண் பற்றிய தமது நம்பிக்கை விசயத்திலும், அவர் அல்லாதவர்கள் விசயத்திலும் இன்றுவரை எல்லை மீறியவர்களாகவே காணப்படுகின்றனர். அதிலும் குறிப்பாக எகிப்தின் பாமரமக்கள், இணைவைப்பிற்கும், இறை நிரகாரிப்பிற்கு கொண்டு செல்லக் கூடிய மார்க்கத்தரமற்ற, கொடியவார்த்தைகளை, அதிகமான சொற்பிரயோகங்களை, இவர் பேரில் குறிப்பிடுகின்றனர். அவற்றைக் கூறுவது ஆகுமானதல்ல என்பதை அவர்கள் அறியவேண்டும்.

இவர்கள் ஸைனுல் ஆபிதீன் என்பரின் வழித்தோன்றல்களில் ஒருவராக இந்தப் பெண்ணை இணைத்துப் பேசிக்கொண்டாலும் அவர் அவரது சந்ததியில் வந்தவர் அல்ல. எல்ல நல்லடியார்களான பெண்களையும் எண்ணுவது போன்று இவரின் தகுதிக்குமைவாக நம்புவதே அவசியமாகும். மண்ணறைகள் பேரிலும், அங்கு அடங்கப்பட்டவர்கள் பேரிலும் எல்லை மீறியதுதான் சிலை வணக்கத்தின் அடிப்படையாக இருந்துள்ளது. மண்ணறைகளை மட்டப்படுத்துமாறும், அவற்றை அடையாளம் தெரியாது ஆக்குமாறும் நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள். மனிதர்களில் எல்லை மீறுவது ஹராமாகும். யார் இந்தப் பெண் ஒட்டிய பலகைகளை இழக்குவதாக, அல்லது நன்மை, தீமை செய்வதாக நம்புகின்றாரோ அவர் (முஷ்ரிக்) இணைவைப்பாளராகும். அல்லாஹ் அந்தப் பெண்ணுக்கு அருள் செய்து அவரை கண்ணியப்படுத்துவானாக எனக் குறிப்பிட்டுள்ளார்கள். (பார்க்க: அல்பிதயா வன்னிஹாயா. பாகம்: 10- பக்கம்: 286). (ஹிஜ்ரி: 208வது நிகழ்வு).

## மஹ்மூத் கத்தாப் அஸ்ஸுப்கி (ரஹ்) அவர்கள்.

இந்த அறிஞர் ஷாஃபி மத்ஹப் சார்ந்தவர், இவர், **‘அத்தீனுல் ஹாலிஸ்’,** அல்லது **‘இர்ஷாதுல் ஹல்க்’** என்ற (இரு பெயருள்ள) தனது நூலில் கப்ரில் தடை செய்யப்பட்டவைகள் என்ற தலைப்பில் **பாகம்8, பக்கம் 02ல்** பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

(١٠) محظورات القبر

يُمنع البناء والقعود والمشي والكتابة عليه والصلاة إليه وعليه، وغير ذلك مما يأتى، لأحاديث (منها) حديث أبي سعيد الخدرى رضى الله عنه أن النبي صلى الله عليه وسلم نهى أن يُبنى على القبور أو يُقعد عليها أو يُصلى عليها. أخرجه أبو يعلى بسند رجاله ثقات. وروى ابن ماجه النهى عن البناء عليها فقط[١]. [1]

கப்ரைக் கட்டுதல், அதன்மீது அமர்வது நட்டபது, அதில் எழுதுவது அதன் பக்கமோ, அல்லது அதன் மீதிருந்தவாறோ தொழுவது போன்ற மற்றும் பல காரியங்கள் ஹதீஸ்களில் தடை வந்திருப்பதால் தடை செய்யப்பட்டதாகும் எனக்கூறிய பின், கப்றுகள் கட்டப்படுவதையும், அவற்றின் மீது அமர்வதையும், அவற்றின் மீது தொழுவதையும் நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள் என்ற நபி மொழியை ஆதாரமாகக் காட்டியுள்ளார்கள்.

## தர்ஹாக்களும் பாதணிகளும்.

தர்ஹாக்களுக்குள் பிரவேசிப்பதற்கு முன்னர் பாதணி(பாலணி)களைக் கழற்றிய பின்னரே பிரவேசிக்க வேண்டும். இது ஒரு கட்டாயமான நடைமுறையாக தர்ஹாவணங்கிகள் கடைப்பிடிக்கின்றனர். நாகூர் போன்ற இடங்களில் இதை நீங்கள் அவதானித்திருப்பீர்கள்.

'மூஸாவே உமது இரு பாதிணிகைளயும் கழற்றும் நிச்சயமாக நீர் புனிதமிக்கதோர் பள்ளத்தாக்கில் இருக்கின்றாய்' (தாஹா: வச:12) என்ற செய்தி அதற்கு ஆதாரம் என்கின்றனர்.

**தன்னிடம் வரவேண்டும், பள்ளத்தாக்கில் செருப்ணியக் கூடாது என்பது அல்லாஹ்வின் ஆணை இது தர்ஹாக்களுக்கு உண்டா?**

தர்ஹாக்களை புனிதமாகவும், அங்கு அடங்கப்பட்டிருப்போரை அல்லாஹ்வின் நிலையிலும் சித்திரத்தே இந்த ஆதாரத்தைக் கூறுகின்றனர் இவை மக்களை வழிகெடுப்பதற்கான ஆதாரங்கள் என்பதை மக்கள் உணர வேண்டும். எதையோ எதற்குப் பொருத்திச் (கியாஸ்) அனுமான அடிப்பயைடலான சட்டம் எடுத்து மக்களை வழி கெடுக்கின்றார்கள்.

நபி (ஸல்) அவர்கள் சுத்தமான பாதணியுடன் தொழுதிருக்கின்றார்கள் என்பதை ஹதீஸ்கள் குறிப்பிடுவதையும், அவற்றில் அசுத்தம் இருப்பதை அறியாமல் ஒரு நாள் தொழுத போது அது பற்றிய ஜிப்ரீல் (அலை) அவர்கள் அறிவித்தவுடன், அதை வீசியதாகவும் வந்திருக்கின்ற ஆதாரபூவர்மான செய்தியை இவர்கள் என்ன செய்யப் போகின்றார்கள். அப்படியான நபிமொழகள் இல்லை என்று இவர்களால் கூறுவார்களா?

## தர்ஹாவில் மொட்டை போடுவது ஹஜ்ஜில் போடுவது போன்றதா?

குழந்தைகளைத் தருபவன் அல்லாஹ்வே! அவனே தாயின் கருவரையில் இந்திரியத்துளிச் சொட்டுக்களை மிகப்பக்குவமாக வைத்து பல காலங்கள் பாதுகாக்கின்றான், மூன்று இருள்களில் படைக்கின்றான். (முஃமினூன் 12,13), (ஸு மர்: வச:06), (அல்முர்ஸலாத். வச: 21) போன்ற அல்குர்ஆன் வசனங்களைப்படித்தால் அறிந்து கொள்லாம்.

ஹஜ்ஜு க்குப் போய் மொட்டை போடலாம் என்றால் தர்ஹாவில் ஏன் மொட்டை போடக் கூடாது என்று வஹ்ஹாபிகளிடம் கேழுங்கள்.

இதுதான் பொதுமக்களை ஏமாற்றுவதற்கு தெரிவு செய்த அடிப்படையற்ற ஆதராம் என்பதை அறிவுடையோர் சிந்திக்க வேண்டும். ஒரு குழந்தை பிறந்து ஏழாவது நாள் செய்ய வேண்டிய மார்க்கம் போதிக்கும் சில அம்சங்களை தர்ஹாக்களில் நிறைவேற்றுவது எவ்வளவு பெரிய குற்றம் என்பதை சம்மந்தப்பட்டோர் உணர வேண்டும்.

## ஸியாரத்

மறுமையை நினைவு கூர்தல், மண்ணறைவாசிகளுக்கு ஸலாம் கூறுதல் ஆகிய இரு நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டே ஒருவர் மண்ணறைகளை சந்திக்க வேண்டும். இதற்கு மாற்றமாக அங்கு அடங்கப்பட்டிருப்போரிடம் தமது தேவைகளை நேரடியாகவோ, அல்லது அவர்களது பொருட்டால் வேண்டுவதற்காகவோ **'ஸியாரத்'** செய்வாராயின் அது இணைவைப்பு சார்ந்ததாகிவிடும் என்பதில் சந்தேகம் கிடையாது.

கப்றுகளை தரிசிக்கின்ற போது கற்றுத்தரப்பட்டுள்ள துஆக்களைக் கவனத்தில் கொண்டாலே கப்றுவாசிகளுக்காக உயிருடன் இருப்பவர் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற அற்புதமான வழிமுறையையே மார்க்கம் காட்டித்தந்துள்ளதைப பார்க்க முடிகின்றது. அந்தப்பிரார்த்தனைகள் கூட கப்று வணக்கத்திற்கு விடுக்கப்படும் சாவுமணிதான் என்பதை உணரலாம்.

### கப்றுகளை தரிசிக்கும் போது கூற வேண்டிய பிரார்த்தனை.

اَلسَّلاَمُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُؤْمِنِينَ وَأَتَاكُمْ مَا تُوعَدُونَ غَدًا مُؤَجَّلُونَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَاحِقُونَ (مسلم)

**பொருள்:** நம்பிக்கை கொண்ட சமூக வீட்டாரே! உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது உங்களை வந்தடைந்து விட்டது, நாளை வரை நாம் அவகாசம் அளிக்கப்பட்டுள்ளோம், அல்லாஹ்வின் நாட்டப்படி உங்களை நாம் வந்தடையக் கூடியவர்களே! (ஆதார நூல்: முஸ்லிம்)

**மற்றுமொரு துஆ.**

اَلسَّلاَمُ عَلَى أَهْلِ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِيْنَ وَ الْمُسْلِمِيْنَ . وَيَرْحَمِ اللهُ الْمُسْتَقْدِمِيْنَ مِنَّا وَالْمُسْتَأْخِرِيْنَ . وَإِنَّا إِنْ شَاءَ اللهُ بِكُمْ لَلاَحِقُوْنَ

'அஸ்ஸலாமு அஹ்லத் **(னு)** தியாரி மினல் முஃமினீன் வல்முஸ்லிமீன், வயர்ஹமில்லாஹு ல் முஸ்தக் **(னு)** திமீன மின்னா, வல் முஸ்தஃஹிரீன். வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன்'

**பொருள்:** முஃமின்களான, முஸ்லிம்களான வீட்டுடையார் மீது (அல்லாஹ்வின்) சாந்தி நிலவட்டுமாக! எம்மில் முந்திச் சென்றோருக்கும், பின்னால் வருவோருக்கும் அல்லாஹ் அருள்பாலிப்பானாக! அல்லாஹ்வின் நாட்டப்படி நாமும் உங்களை வந்தடையக் கூடியவர்களே! (முஸ்லிம்)

மேற்படி பிரார்த்தனையை முஸ்லிம்களான மண்ணறைவாசிகளை சந்திக்கின்ற போது கூற வேண்டும் என்ற கட்டளை இருக்க அங்கு அடக்கப்பட்டிருப்பவர்களின் பொருட்டால் தேவைகளை வேண்டலாம் என முடிவு செய்வது எந்த வகையிலும் மார்க்கமாகாது.

# காதியானிகள்

இறுதி நபித்துவத்தின் முத்திரையை அகற்றி, தம்மால் தத்தெடுக்கப்பட்ட மிர்ஸா 'குலாம் அஹ்மத்' என்ற பொய்யனுக்கு நபித்துவத்தையும், மஸீஹியத்தையும் வழங்கி, அவனை முன்னறிவிப்புச் செய்யப்பட்ட ஒரு நபியாக நம்பும், வாதிடும், அவனை நம்பிக்கை கொள்ளுமாறு அழைப்புவிடுக்கும் ஒரு கூட்டம் காதியானிகள், அஹ்மதியாக்கள் போன்ற பெயர்கொண்டு அழைக்கப்படுகின்றனர்.

பாகிஸ்தான் பஞ்சாப் மாநிலத்தில் உள்ள காதியான் என்ற கிராமத்தில் முளைத்ததனால் காதியானிகள் என்று பொதுவாக அழைக்கப்படுகிறார்கள். காதியான் மிர்ஸா குலாம் அஹ்மதை நபியாக ஏற்றுக் கொண்டதானால் காதியானிகள் 'அஹ்மதியாக்கள்' என்ற மற்றொரு பெயரிலும் அழைக்கப்படுகின்றனர். எனினும் இவர்களை **'நவீன முஸைலமாக்கள்'** எனப் பெயரிட்டு இவர்களை அழைப்பது பொருத்தமானதாகத் தெரிகின்றது.

## நபித்துவ வாதாட்டம்

நபித்துவ வாதாட்டம் தொடர்பான நோய்க்கிருமி இறுதி நபியான முஹம்மத் (ஸல்) அவர்கள் உயிர்வாழும் போது உருவெடுத்தாலும், நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னரே அது தலையை நிமிர்த்திட எத்தணித்தது.

பொய் நபியாக தன்னைப் பிரகடப்படுத்திக் கொண்ட முஸைலமாவின் குழப்பம் உருவெடுத்து, பின்னர் அதற்கு உடனுக்குடன் முற்றுப்புள்ளி வைக்கப்படும் என்பதை நபி (ஸல்) அவர்கள் கண்ட கனவும், அவர்களின் மரணத்தின் பின் ஆட்சி செய்த முதலாவது கலீபா அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களின் காலத்தில் நபித்துவத்தை

வாதிட்ட முஸைலமா, துலைஹா, அஸ்வத் அல்அன்ஸி, ஸஜாஹ், போன்றோருக்கெதிராக தொடரப்பட்ட போரும் இதற்கு எடுத்தக்காட்டாகும்.

பொய் நபித்துவத்தை வாதிடும் கும்பல் எதிர்காலத்தில் தோற்றம் பெறுவதை செய்த நபி (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்த பல ஹதீஸ்கள் இதனை இன்றும் உறுதி செய்கின்றன.

## முஸைலமாவின் பொய் நபித்துவ வாதாட்டம் பற்றிய முன்னறிவிப்பு.

பொய் நபித்துவ ஆசை நபி (ஸல்) அவர்களின் காலத்தில் சிலருக்கு தோன்றிவிட்டது. மற்றும் சிலர் நபி (ஸல்) அவர்களின் அவர்களின் மரணத்தின் பின் தம்மை நபிமார்களாக வாதிட்டனர்.

மிர்ஸாவுக்கு முன் பல குட்டி மிர்ஸாக்கள் தோற்றம் பெற்றனர். நபி (ஸல்) அவர்கள் அவர்களுடன் மிகக் கடுமையாக நடந்து கொண்டார்கள் என்பதை நிரூபிக்கும் நூற்றுக்கணக்கான பல சான்றுகளில் இருந்து ஓரிரு சான்றுகள் மாத்திரம் மாதிரிக்காக இங்கு தரப்படுகின்றன.

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ قَدِمَ مُسَيْلِمَةُ الْكَذَّابُ عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَجَعَلَ يَقُولُ إِنْ جَعَلَ لِي مُحَمَّدٌ الْأَمْرَ مِنْ بَعْدِهِ تَبِعْتُهُ وَقَدِمَهَا فِي بَشَرٍ كَثِيرٍ مِنْ قَوْمِهِ فَأَقْبَلَ إِلَيْهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَمَعَهُ ثَابِتُ بْنُ قَيْسِ بْنِ شَمَّاسٍ وَفِي يَدِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قِطْعَةُ جَرِيدٍ حَتَّى وَقَفَ عَلَى مُسَيْلِمَةَ فِي أَصْحَابِهِ فَقَالَ لَوْ سَأَلْتَنِي هَذِهِ الْقِطْعَةَ مَا أَعْطَيْتُكَهَا وَلَنْ تَعْدُوَ أَمْرَ اللَّهِ فِيكَ وَلَئِنْ أَدْبَرْتَ لَيَعْقِرَنَّكَ اللَّهُ وَإِنِّي لَأَرَاكَ الَّذِي أُرِيتُ فِيكَ فَأَخْبَرَنِي أَبُو هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ بَيْنَمَا أَنَا نَائِمٌ رَأَيْتُ فِي يَدَيَّ سِوَارَيْنِ مِنْ ذَهَبٍ فَأَهَمَّنِي شَأْنُهُمَا فَأُوحِيَ إِلَيَّ فِي الْمَنَامِ أَنْ انْفُخْهُمَا فَنَفَخْتُهُمَا فَطَارَا فَأَوَّلْتُهُمَا كَذَّابَيْنِ يَخْرُجَانِ بَعْدِي فَكَانَ أَحَدُهُمَا الْعَنْسِيَّ وَالْآخَرُ مُسَيْلِمَةَ الْكَذَّابَ صَاحِبَ الْيَمَامَةِ (صحيح البخاري )

பொய்யன் முஸைலமா நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பலபேர்களுடன் வந்து, இந்த அதிகாரத்தை முஹம்மத் தனக்குப் பின் எனக்குத்தந்தால் அவரை நான் பின்பற்றுவேன் என்றான். தாபித் பின் கைஸ் என்ற நபித்தோழருடன் நபி (ஸல்) அவர்கள் பேரீத்த மட்டைத்துண்டு ஒன்றை தனது கையில் எடுத்துக் கொண்டு அவனிடம் சென்றார்கள். முஸைலமாவைப் பார்த்து இந்த மட்டைத் துண்டைக்கூட நீ என்னிடம் கேட்டாலும் அதைக்கூட நான் உனக்குத் தரமாட்டேன். உன்னில் அல்லாஹ்வின் கட்டளை நிறைவேறாதிருக்காது. (பிற்காலத்தில் நீ கொல்லப்படுவாய்) நீ (நம்பிக்கை கொள்ளாது) புறக்கணித்தால் அல்லாஹ் உன்னை கருவறுப்பான். நான் கண்ட (இரு தங்க காப்புக்) கனவின் விளக்கமாக உன்னையே விளக்கமாகக் காண்கின்றேன். எனக்கூறியதாகக் குறிப்பிடும் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் 'நான் ஒரு நாள் உறக்கத்தில் எனது இரு கைகளிலும் இரு தங்கக்காப்புக்கள் இருக்கக் கண்டேன். அந்தக்காரியம் எனக்கு கவலை அளித்தது. கனவில் அவ்விரண்டையும் ஊதுமாறு எனக்கு மீண்டும் கனவில் வஹி அறிவிக்கப்பட்டது. அவ்விரண்டையும் ஊதினேன். அவ்விரண்டும் பறந்துவிட்டது. எனக்குப்பின்னால் வரவிருக்கும் இரு பொய்யர்களில் ஒருவன் (அஸ்வத்) 'அல்அனஸி' மற்றவன் ' பொய்யன் முஸைலமா' என்று அதன் விளக்கமாக எடுத்துக் கொண்டேன். என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக தனக்கு அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவித்ததாகக் குறிப்பிடுகிறார்கள். (புகாரி, முஸ்லிம், அஹ்மத்).

இது பொய் நபிமார்களின் தோற்றம் பற்றியும், அவர்களின் கதி என்னவாகும் என்பது பற்றியும் தெளிவாக அறிவிக்கின்ற நபிமொழியாகும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لَا تَقُومُ السَّاعَةُ حَتَّى يَقْتَتِلَ فِئَتَانِ فَيَكُونَ بَيْنَهُمَا مَقْتَلَةٌ عَظِيمَةٌ دَعْوَاهُمَا وَاحِدَةٌ وَلَا تَقُومُ السَّاعَةُ حَتَّى يُبْعَثَ دَجَّالُونَ كَذَّابُونَ قَرِيبًا مِنْ ثَلَاثِينَ كُلُّهُمْ يَزْعُمُ أَنَّهُ رَسُولُ اللَّهِ (صحيح البخاري)

ஓரேவிதமான வாதம் புரியும் இரு அணிகள் தமக்கிடையில் சண்டையிட்டுக் கொள்ளாதவரை மறுமை ஏற்படாது. மேலும், அல்லாஹ்வின் தூதர் நானே! என்று வாதிடும் பொய்யர்கள் முப்பது பேர் தோன்றாதவரை மறுமை நிகழாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி). முஸ்லிமில் வரும் அறிவிப்பில் 'அவன் ஒவ்வொருவனும் தானே நபி என வாதிடுவான் என இடம் பெற்றுள்ளது. இந்தப் பொய் நபிமார் தோன்றியதை இஸ்லாமிய வரலாற்றில் பார்க்கின்றோம். அதில் மிர்ஸாவும் ஒருவன்.

عن أسماء أن رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ حَدَّثَنَا أَنَّ فِي ثَقِيفٍ كَذَّابًا وَمُبِيرًا فَأَمَّا الْكَذَّابُ فَرَأَيْنَاهُ وَأَمَّا الْمُبِيرُ فَلَا إِخَالُكَ إِلَّا إِيَّاهُ (صحيح مسلم )

ஹஜ்ஜாஜ் என்ற கொடுங்கோல் மன்னனை நோக்கி அன்னை அஸ்மா (ரழி) அவர்கள் தகீப் கோத்திரத்தில் பொய்யனும், கோடுங்கலனும் தோற்றம் பெறுவர் என அல்லாஹ்வின் தூதர் நிச்சயமாக எமக்கு அறிவித்துத்தந்தார்கள். பொய்யனைக் கண்டு கொண்டோம். அந்த அழிவுக்காரனாக உன்னையே நான் நினைக்கின்றேன் எனக் கூறினார்கள். (முஸ்லிம்).

இதுபோன்ற செய்திகளை சிந்தித்தால் முஹம்மத் நபி (ஸல்) அவர்களுக்குப் பின் நபிவர முடியாது என்பது நபி (ஸல்) அவர்களினதும், நபித்தோழர்களினதும். அவர்களின் வழிவந்த முஸ்லிம்களிதும் அடிப்படையான நம்பிக்கையாகும் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்களுடன் நபித்துவ வருகை முற்றுப் பெற்றுள்ளது. அவர்களுக்குப் பின் நபித்துவத்தை வாதிடுவது பச்சைப் பொய்யும், வடிகட்டிய முட்டாள்தனமும் இறை நிராகரிப்புமாகும். அதனை நிரூபிக்க இன்னும் சில சான்றுகள்.

عَنْ أَنَسٍ قَالَ قَالَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ بَعْدَ وَفَاةِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لِعُمَرَ انْطَلِقْ بِنَا إِلَى أُمِّ أَيْمَنَ نَزُورُهَا كَمَا كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَزُورُهَا فَلَمَّا انْتَهَيْنَا إِلَيْهَا بَكَتْ فَقَالَا لَهَا مَا يُبْكِيكِ مَا عِنْدَ اللَّهِ خَيْرٌ لِرَسُولِهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ مَا أَبْكِي أَنْ لَا أَكُونَ أَعْلَمُ أَنَّ مَا عِنْدَ اللَّهِ خَيْرٌ لِرَسُولِهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَلَكِنْ أَبْكِي أَنَّ الْوَحْيَ قَدْ انْقَطَعَ مِنْ السَّمَاءِ فَهَيَّجَتْهُمَا عَلَى الْبُكَاءِ فَجَعَلَا يَبْكِيَانِ مَعَهَ(صحيح مسلم)

உம்மு ஐமன் (ரழி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் சந்தித்துவிட்டுவருது போன்று நாமும் சந்தித்துவிட்டுவருவோம் என அவர்களின் மரணத்தின் பின் அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்கள் உமர் (ரழி) அவர்களிடம் கூறி, இருவமாக அந்தப் பெண்ணிடம் வந்து சேர்ந்தார்கள். (இவர்களைக் கண்ட) அந்தப் பெண் அழ ஆரம்பித்த்தார்கள். ஏன் அழுகிறீர்கள் என அவர்களிடம் இவ்விருவரும் வினவியதற்கு ' அல்லாஹ்விடம் அவனது தூதருக்கு இருப்பது மிகச்சிறந்ததுதான் என்பதை நான் நன்கறிவேன். இருந்தாலும் வானத்தில் இருந்து வஹி வருவது நின்றுவிட்டதே! என்பதை நினைத்தே அழுகிறேன் எனக் கூறி அவ்விருவரையும் அழுகையில் ஆழ்த்தினார்கள் என அனஸ் (ரழி) அவர்கள் அறவிக்கிறார்கள். (முஸ்லிம்).

عَنْ عَبْدِ اللَّهِ قَالَ كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَمَرَرْنَا بِصِبْيَانٍ فِيهِمْ ابْنُ صَيَّادٍ فَفَرَّ الصِّبْيَانُ وَجَلَسَ ابْنُ صَيَّادٍ فَكَأَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَرِهَ ذَلِكَ فَقَالَ لَهُ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ تَرِبَتْ يَدَاكَ أَتَشْهَدُ أَنِّي رَسُولُ اللَّهِ فَقَالَ لَا بَلْ تَشْهَدُ أَنِّي رَسُولُ اللَّهِ فَقَالَ عُمَرُ بْنُ الْخَطَّابِ ذَرْنِي يَا رَسُولَ اللَّهِ حَتَّى أَقْتُلَهُ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنْ يَكُنْ الَّذِي تَرَى فَلَنْ تَسْتَطِيعَ قَتْلَهُ ( صحيح مسلم )

நபிகள் நாயகத்துடன் இருந்த நாம் ஒரு போது சில சிறுவர்களைக் கடந்து சென்றோம். அவர்களுடன் இப்னு ஸய்யாத் என்பவன் இருந்தததைக் கண்ட சிறுவர்கள் (அங்கிருந்து) வெருண்டோடினர். அங்கு இப்னு செய்யாத் இருந்து கொண்டிருந்தான். நபி (ஸல்) அவர்கள் இவனை வெறுப்பது போன்றிருந்தார்கள். இவனிடம் நீ நாசகமாகிட்டாய் எனக் கூறிவிட்டு, என்னை நீ அல்லாஹ்வின் தூதர் என ஏற்றுக் கொள்கின்றாயா? எனக் கேட்டார்கள். உடனே அவன் இல்லை, 'நான் அல்லாஹ்வின் தூதர் நீ ஏற்றுக் கொள்கின்றாயா? ' என்றான். இதனைக் கேட்ட உமர் பின் ஹத்தாப் (ரழி) அவர்கள் ' அல்லாஹ்வின் தூதரே இவனைக் கொல்ல எனக்கு அனுமதி அளியுங்கள்' என்றதும் ' நீ நினைப்பவனைப் போன்றவனாக (தஜ்ஜாலாக) இவன் இருப்பின் இவனை உன்னால் கொல்ல முடியாது என நபி (ஸல்) கூறினார்கள். (முஸ்லிம்).

وفي رواية لمسلم : .........فَقَالَ هُوَ أَتَشْهَدُ أَنِّي رَسُولُ اللَّهِ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ آمَنْتُ بِاللَّهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ مَا تَرَى قَالَ أَرَى عَرْشًا عَلَى الْمَاءِ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ تَرَى عَرْشَ إِبْلِيسَ عَلَى الْبَحْرِ وَمَا تَرَى قَالَ أَرَى صَادِقَيْنِ وَكَاذِبًا أَوْ كَاذِبَيْنِ وَصَادِقًا فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لُبِسَ عَلَيْهِ دَعُوهُ ( صحيح مسلم )

முஸ்லிமில் இடம் பெறும் மற்றொரு அறிவிப்பில்: நபி (ஸல்) அவர்கள், நான் அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும், வேதங்களையும் நம்புகின்றேன் எனக் கூறிய பின் ' நீ எதைக் காண்கின்றாய் என அவனிடம் கேட்டார்கள். நீரின் மீது ஓர் சிம்மாசனத்தைக் காண்கின்றேன் என்றான். அப்படியா! நீ காண்பது கடல்மீதிருக்கும் ஷைய்தானின் சிம்மாசனத்தையே! என தொடர்ந்தும் கூறிவிட்டு, அங்கு நீ எதைப் பார்க்கின்றாய் என மீண்டும் வினவவே உண்மையாளர்களையும், பொய்யனையும், பொய்யர்களையும், உண்மையாளனையும் நான் பார்க்கின்றேன் என்றான் **(சரியானதில் இருந்து பிழையானதை அறிய முடியாதவாறு)** 'இவனுக்கு குழப்பம் உண்டுபண்ணப்பட்டுள்ளது, இவனை விட்டுவிடுங்கள்' எனக் கூறியதாகவும், மற்றொரு அறிவிப்பில்: '

..... فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خُلِّطَ عَلَيْكَ الْأَمْرُ ثُمَّ قَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنِّي قَدْ خَبَأْتُ لَكَ خَبِيئًا فَقَالَ ابْنُ صَيَّادٍ هُوَ الدُّخُّ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ اخْسَأْ فَلَنْ تَعْدُوَ قَدْرَكَ ..... ( صحيح مسلم )

உனக்கு குழப்பம் ஏற்படுத்தப்பட்டுள்ளது எனக் கூறிய நபி (ஸல்) அவர்கள் ' உனக்காக நான் சிலதை மறைத்துவைத்துள்ளேன். அதுபற்றி உன்னால் கூற முடியுமா? எனக் கேட்டார்கள். அவன் (துகான் என்ற வார்த்தையை முழுமையாகக் கூற முடியாதவனாக) 'துஹ், துஹ்' என்றான். நீ நாசத்தைத் தழுவுவாய், உனது எல்லை நீ தாண்டமாட்டாய் என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக **தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.**

... وَقَدْ قَارَبَ يَوْمَئِذٍ ابْنُ صَيَّادٍ يَحْتَلِمُ فَلَمْ يَشْعُرْ بِشَيْءٍ حَتَّى ضَرَبَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ظَهْرَهُ بِيَدِهِ ثُمَّ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَتَشْهَدُ أَنِّي رَسُولُ اللَّهِ فَنَظَرَ إِلَيْهِ ابْنُ صَيَّادٍ فَقَالَ أَشْهَدُ أَنَّكَ رَسُولُ الْأُمِّيِّينَ فَقَالَ ابْنُ صَيَّادٍ لِلنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَتَشْهَدُ أَنِّي رَسُولُ اللَّهِ قَالَ لَهُ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ آمَنْتُ بِاللَّهِ وَرُسُلِهِ ... (صحيح البخاري )

**புகாரியில் இடம் றெும் ஒரு அறிவிப்பில்:** அப்போது இப்னு சய்யாத் பருவ வயதை எட்டி இருந்தான். நபி (ஸல்) அவர்கள் அவனது முதுகில் தட்டும்வரை அவன் எதையும் உணராதவனாக இருந்தான். பின்பு நபி (ஸல்) அவர்கள் அவனிடம் 'நான் அல்லாஹ்வின் தூதர் என நீ சாட்சி கூறுகின்றாயா?' எனக் கேட்க, அவர்களைப்பார்த்த இப்னு ஸய்யாத் 'நீர் உம்மிகளின் தூதர்' என நான் சாட்சி கூறுகிறேன் எனக் கூறிவிட்டு, **'நான் அல்லாஹ்வின் தூதர் என நீர் சாட்சிகூறுகின்றீரா'** என நபி (ஸல்)

அவர்களிடம் இப்னு ஸய்யாத் (திருப்பிக்) கேட்டான். **'அல்லாஹ்வையும், அவனது தூதர்களையும் நான் விசுவாசம் கொண்டேன்'** எனக் கூறினனார்கள். (புகாரி).

நபி (ஸல்) அவர்களின் காலத்து குட்டி மிர்ஸாக்கள் நபித்துவத்தை வாதிட்டபோது நபி (ஸல்) அவர்களின் நிலைப்பாடு என்னவாக இருந்துள்ளது? பொய்யன் மிர்ஸா விடயத்தில் நமது நிலைப்பாடு எவ்வாறிருக்க வேண்டும்?, சைத்தான்கள் ஊடாக தகவல்களைப் பரிமாறிக்கொள்வோர், அவற்றை முழுமையாகப் பெறுபவர்களா? அல்லது அரைகுறையாகவா?, ஜோதிடம் என்பது நபி (ஸல்) அவர்களின் காலத்தின் தோற்றம் வெறுத்த ஒரு அம்சம், என்பன போன்ற பல விளக்கங்களை இந்த ஹதீஸ்களில் இருந்து தெளிவாக விளங்கிக் கொள்ளலாம்.

அது மாத்திரமின்றி மறுமை நாளின் அடையாளமாக இருவானவர்களின் துணைகொண்டு வானத்திலிருந்து இறங்கி வரும் ஈஸா நபி (அலை) அவர்கள் கூட தன்னை இந்த சமுதாயத்தில் நீதியரசராகவும், போராளியாகவுமே இணைத்துக் கொள்வார்கள் என்றால் இந்த மிர்ஸா எம்மாத்திரம்! என்பதை சிந்திக்க வேண்டும்.

عن أَبي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَيُوشِكَنَّ أَنْ يَنْزِلَ فِيكُمْ ابْنُ مَرْيَمَ حَكَمًا عَدْلًا فَيَكْسِرَ الصَّلِيبَ وَيَقْتُلَ الْخِنْزِيرَ وَيَضَعَ الْجِزْيَةَ وَيَفِيضَ الْمَالُ حَتَّى لَا يَقْبَلَهُ أَحَدٌ حَتَّى تَكُونَ السَّجْدَةُ الْوَاحِدَةُ خَيْرًا مِنْ الدُّنْيَا وَمَا فِيهَا ثُمَّ يَقُولُ أَبُو هُرَيْرَةَ وَاقْرَءُوا إِنْ شِئْتُمْ { وَإِنْ مِنْ أَهْلِ الْكِتَابِ إِلَّا لَيُؤْمِنَنَّ بِهِ قَبْلَ مَوْتِهِ وَيَوْمَ الْقِيَامَةِ يَكُونُ عَلَيْهِمْ شَهِيدًا } (صحيح البخاري )

எனது உயிர் எவனது கைவசம் உள்ளதோ அவன்மீது சத்தியமாக மர்யமின் மகன் (ஈஸா) நீதியரசரசராக இறங்கி வந்து, சிலுவையை உடைத்தெறிவார், பன்றியைக் கொல்லுவார், (இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வாழும் சிறுபான்மை மக்களிடம் இருந்து பெறப்படும் ) ஜிஸ்யா (காப்பு) வரியை தள்ளுபடி செய்வார், (தர்மத்தை) யாரும் ஏற்றுக்கொள்ளாத அளவு செல்வம் கொளிக்கும். அக்காலத்தில் செய்யப்படும் ஒரு ஸஜ்தா இந்த உலகத்தையும், அதிலுள்ளவற்றையும் விட மேலானதாகும். என நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பிட்ட அபூஹுரைரா (ரழி) அவர்கள் ' வேதக்காரர்களில் ஒரு பகுபகுதியினர் அவரை(ஈஸாவை) அவரது மரணத்திற்கு முன்னர் நிச்சயமாக நம்பிக்கைகொள்வர். மறுமையில் உங்களுக்கு எதிராக அவர் சாட்சி சொல்வார். என்ற வசனத்தை விரும்பினால் படித்துப்பாருங்கள் என்று கூறுவார்கள். (புகாரி).

**மிர்ஸா என்பவன்** தன்னை வாக்களிக்கப்பட்ட 'மஸீஹ்' என்று வாதிட்டான். ஆனால் ஈஸா மஸீஹ் (அலை) அவர்கள் இறுதி நாளின் அடையாளமாக வானில் இருந்து இருவானவர்களின் துணை கொண்டு டமஸ்கஸில் காணப்படும் வெள்ளை மினா மீது இறங்குவார்கள். அதன் பின் தஜ்ஜாலைக் கொலை செய்வார்கள் என்றெல்லாம் நபி (ஸல்) அவர்கள் அறிவித்திருக்கிறார்கள்.

இந்தியாவை ஆட்சி செய்த ஆங்கிலேயர்களின் அடிவருடியான இந்தப் பொய்யன் மிர்ஸாவுக்கும், உண்மை மஸீஹ் ஈஸா நபி (ஸல்) அவர்களுக்கும் இடையில் வானம், பூமி இடையளவு வேறுபாடுள்ளது என்பதை அறிந்து கொள்ளாத குருட்டுக் கூட்டமே மிர்ஸாவை நபியாகவும், வாக்களிக்கப்பட்ட மஸீஹ் ஆகவும் நம்பி, பிரச்சாரம் செய்வர். ஆனால் உண்மை முஸ்லிம்கள் அவனை காதியான் மாகாணத்தில் தோன்றிய ஒரு மாபெரும் பொய்யன் என்றே கூறுவர்.

مَّا كَانَ مُحَمَّدٌ أَبَا أَحَدٍ مِّن رِّجَالِكُمْ وَلَكِن رَّسُولَ اللَّهِ وَخَاتَمَ النَّبِيِّينَ وَكَانَ اللَّهُ بِكُلِّ شَيْءٍ عَلِيماً [الأحزاب : 40 ]

முஹம்மத் உங்கள் ஒருவரினதும் தந்தையாக இல்லை. மாறாக, அல்லாஹ்வின் தூதரும், நபிமார்களில் இறுதியானவரு(முத்திரையு)மாகும். அல்லாஹ் அனைத்து பொருள்கள் பற்றியும் நன்கறிந்தவனாக இருக்கின்றான். (33: 40).

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ فُضِّلْتُ عَلَى الْأَنْبِيَاءِ بِسِتٍّ أُعْطِيتُ جَوَامِعَ الْكَلِمِ وَنُصِرْتُ بِالرُّعْبِ وَأُحِلَّتْ لِيَ الْغَنَائِمُ وَجُعِلَتْ لِيَ الْأَرْضُ طَهُورًا وَمَسْجِدًا وَأُرْسِلْتُ إِلَى الْخَلْقِ كَافَّةً وَخُتِمَ بِيَ النَّبِيُّونَ (صحيح مسلم)

நபிமார்கள் அனைவரையும் விட ஆறு அம்சங்களைக் கொண்டு நான் சிறப்பிக்கப்பட்டுள்ளேன் எனக் கூறுகின்ற நபி (ஸல்) அவர்கள் 'ஜவாமிவுல் கலிம்' (சுருங்கக் கூறி, நிறைவான பொருளைக் கொண்ட வாசகங்கள்) கொடுக்கப்பட்டுள்ளேன், (காபிர்களின் உள்ளங்களில் போடப்படும்) பீதியின் மூலம் உதவி செய்யப்பட்டுள்ளேன். போர்க்களத்தில் எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்படும் (கனீமத்) பொருட்கள் எனக்கு ஆகுமாக்கப்பட்டுள்ளன, இந்த பூமி சுத்தமானதாகவும், தொழுவதற்குரியதாகவும் எனக்கு ஆக்கித்தரப்பட்டுள்ளது. படைப்பினங்கள் அனைவருக்கும் தூதராக அனுப்பட்டுள்ளேன். என்னைக் கொண்டு நபிமார்கள் முடித்துவைக்கப்பட்டுள்ளனர். எனக் கூறினார்கள். (முஸ்லிம்). மற்றொரு அறிவிப்பில், மனிதர்கள் அனைவருக்கும் பொதுவான நபியாக நான் அனுப்பப்பட்டுள்ளேன் என இடம் பெற்றுள்ளது.

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ سَرْجِسَ قَالَ رَأَيْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَكَلْتُ مَعَهُ خُبْزًا وَلَحْمًا أَوْ قَالَ ثَرِيدًا قَالَ فَقُلْتُ لَهُ أَسْتَغْفَرَ لَكَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ نَعَمْ وَلَكَ ثُمَّ تَلَا هَذِهِ الْآيَةَ ﴿وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ﴾ قَالَ ثُمَّ دُرْتُ خَلْفَهُ فَنَظَرْتُ إِلَى خَاتَمِ النُّبُوَّةِ بَيْنَ كَتِفَيْهِ عِنْدَ نَاغِضِ كَتِفِهِ الْيُسْرَى جُمْعًا عَلَيْهِ خِيلَانٌ كَأَمْثَالِ الثَّآلِيلِ (صحيح مسلم )

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் ரொட்டி, அல்லது ஸரீத் (தக்கடி போன்ற உணவு) உண்டேன். உமக்காக நபிகள் நாயகமவர்கள் பிழைபொறுக்கத் தேடினார்களா எனக்கேட்டேன. நான் ஆம், உனக்காகவும்தான் என்று கூறியபின், (நபியே!) உமக்காகவும், நம்பிக்கைகொண்ட ஆண்களுக்காகவும், நம்பிக்கை கொண்ட பெண்களுக்காகவும் பாவமன்னிப்புக்கோருவீராக! என்ற வசனத்தை ஓதிக்காட்டினார்கள். அதன் பின் அவர்களின் பின்னால் திரும்பிப்பார்த்தேன். அப்போது அவர்களின் நபித்துவ முத்திரையை அவர்களின் இரு தோள் புஜத்தின் மத்தியில், அதுவும் அவர்களது இடது தோழ்ப்புயத்தின் மேலால் படர்ந்த மறுபோன்று இருப்பதைப் நான் பார்த்தேன் என அப்துல்லா பின் ஸர்ஜஸ் (ரழி) அவர்கள் வழியாக ஆஸிம் (ரழி) அறிவிக்கின்றார்கள். (முஸ்லிம்).

புகாரியில் இடம் பெறும் அறிவிப்பில் மாடப்புறாவின் முட்டையில் காணப்படும் மறுபோன்று இருப்பதைக் கண்டதாக மற்றொரு நபித்தோழர் குறிப்பிடுகிறார்கள்.

عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَوْ كَانَ بَعْدِي نَبِيٌّ لَكَانَ عُمَرَ بْنَ الْخَطَّابِ (سنن الترمذي )

**எனக்குப்பின் நபிவருவதாக இருந்தால் அவர் உமராகத்தான் இருப்பார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் (திர்மதி).**

عَنْ عَامِرِ بْنِ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ عَنْ أَبِيهِ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لِعَلِيٍّ أَنْتَ مِنِّي بِمَنْزِلَةِ هَارُونَ مِنْ مُوسَى إِلَّا أَنَّهُ لَا نَبِيَّ بَعْدِي (صحيح مسلم)

**நீ என்னிடத்தில் மூஸாவிடம் ஹாரூனுக்குரிய அந்தஸ்தையுடையவன். எனினும் எனக்குப் பின் நபி இல்லை. என்று நபி (ஸல்) அவர்கள் அலி (ரழி) அவர்களிடம் கூறினார்கள். (முஸ்லிம்).**

عَنْ مُحَمَّدِ بْنِ جُبَيْرِ بْنِ مُطْعِمٍ عَنْ أَبِيهِ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ إِنَّ لِي أَسْمَاءً أَنَا مُحَمَّدٌ وَأَنَا أَحْمَدُ وَأَنَا الْمَاحِي الَّذِي يَمْحُو اللَّهُ بِيَ الْكُفْرَ وَأَنَا الْحَاشِرُ الَّذِي يُحْشَرُ النَّاسُ عَلَى قَدَمَيَّ وَأَنَا الْعَاقِبُ الَّذِي لَيْسَ بَعْدَهُ أَحَدٌ وَقَدْ سَمَّاهُ اللَّهُ رَءُوفًا رَحِيمًا (صحيح مسلم )

எனக்கு பல பெயர் உண்டு. நான் முஹம்மத், நான் அஹ்மத், நான் (ஒழிப்பவன்என்ற பொருள் கொண்ட) மாஹீ. என் மூலம் குப்ரை அல்லாஹ் ஒழிப்பான்.

நான் (ஒன்று சேர்ப்பவன் என்ற பொருள் கொண்ட) ஹாஷிர். என் பாதத்தின் மீது (நான் எழுப்பப்பட்ட பின்னரே) மனிதர்கள் (விசாணைக்காக) எழுப்பப்படுவர். நான் (இறுதியானவன் என்ற பொருள் கொண்ட) ஆகிப். எனக்குப்பின் நபி இல்லை. அல்லாஹ் அவருக்கு ரஊப் (இரக்கமுள்ளவர்) ரஹீம் (கருணையுள்ளவர்) என்ற பெயர்களை வைத்துள்ளான். (முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் நபி வருவதில்லை என்பதைக் கூறும் பெயரோ **'ஆகிப்'** இறுதியானவர் என்ற பொருள் கொண்ட பெயரிலும் நபி (ஸல்) அவர்கள் அழைக்கப்படுகின்றார்கள் என்பதைக் ஆங்கிலே அடிவருடிகளான காதியானிகள் அறிய வேண்டாமா?

عنْ أَبِي حَازِمٍ قَالَ قَاعَدْتُ أَبَا هُرَيْرَةَ خَمْسَ سِنِينَ فَسَمِعْتُهُ يُحَدِّثُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ كَانَتْ بَنُو إِسْرَائِيلَ تَسُوسُهُمْ الْأَنْبِيَاءُ كُلَّمَا هَلَكَ نَبِيٌّ خَلَفَهُ نَبِيٌّ وَإِنَّهُ لَا نَبِيَّ بَعْدِي، وَسَتَكُونُ خُلَفَاءُ تَكْثُرُ قَالُوا فَمَا تَأْمُرُنَا قَالَ فُوا بِبَيْعَةِ الْأَوَّلِ فَالْأَوَّلِ وَأَعْطُوهُمْ حَقَّهُمْ فَإِنَّ اللَّهَ سَائِلُهُمْ عَمَّا اسْتَرْعَاهُمْ (صحيح مسلم)

பனூ இஸ்ரவேலர்களை நபிமார்கள் பொறுப்பேற்று வழிநடத்தினார்கள். ஒரு நபி மரணிக்கின்ற போது மற்றொரு நபி அவருக்கு பதிலாக வருவார். எனக்குப் பின்னால் நபி இல்லை. கலீபாக்கள்தான் வருவார்கள். அவர்கள் அதிகாமனவர்களாக இருப்பார்கள். என நபி (ஸல்) அவர்கள் கூறிய போது அல்லாஹ்வின் தூதரே அப்படியாயின் எமக்கு நீங்கள் என்ன கட்டளையிடுகின்றீர்கள் என நபித்தோழர்கள் கேட்டார்கள். முதலாவதாக பைஅத் ((உறுதி மொழி))செய்து கொண்ட தலைவருடனான பைஅத்தை நிறைவேற்றுங்கள். அவர்களின் உரிமைகளை அவர்களுக்கு வழங்கிவிடுங்கள். நிச்சயமாக அவர்களுக்கு வழங்கிய பொறுப்பு பற்றி (மறுமையில்) அல்லாஹ் அவர்களிடம் விசாரிப்பான் எனக் கூறினார்கள். (முஸ்லிம்).

அபூபக்கர் (ரழி) அவர்களுக்கும், அபுத்தர்தா (ரழி) அவர்களுக்கும் இடையில் ஏற்பட்ட மனஸ்தாபத்தின் போது அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களின் சிறப்பைக் கூற வந்த நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

....هَلْ أَنْتُمْ تَارِكُونَ لِي صَاحِبِي هَلْ أَنْتُمْ تَارِكُونَ لِي صَاحِبِي إِنِّي قُلْتُ يَا أَيُّهَا النَّاسُ إِنِّي رَسُولُ اللَّهِ إِلَيْكُمْ جَمِيعًا فَقُلْتُمْ كَذَبْتَ وَقَالَ أَبُو بَكْرٍ صَدَقْتَ (صحيح البخاري )

எனக்காக எனது தோழரை(மன்னித்து) விட்டுவிடுவீர்களா? எனக்காக எனது தோழரை(மன்னித்து) விட்டுவிடுவீர்களா? மனிதேர்களே! நானே உங்கள் அனைவருக்கும் தூதராவேன் எனக் கூறியபோது நீங்கள் பொய்யுரைத்தீர் என (என்னைப்பார்த்துக்) கூறினீர்கள். ஆனால் அபூபக்கரோ நீங்கள் உண்மை உரைத்தீர் என்று கூறினார். (புகாரி)

நானே உங்கள் அனைவருக்கும் தூதராவேன் எனக் கூறியதை சிந்தியுங்கள். கப்ரில் வைக்கப்பட்ட பின்னால் மிர்ஸாவைப் பற்றிய விசராணை இருக்காது. முஹம்மத் நபி பற்றித்தான் வானவர்கள் விசாரிப்பார்கள். (புகாரி)

மறுமையில் நடைபெறும் பரிந்துரை பற்றி இடம் பெறும் நீண்ட நபிமொழியில் மக்கள் நபிமார்களைச் சந்தித்து, அவர்களின் சிறப்புகளைக் கூறி அல்லாஹ்விடம் பிரார்த்திக்குமாறு அவர்களை வேண்டிக் கொள்வார்கள். ஈஸா (அலை) அவர்களிடம் வந்து முறைப்பாடு செய்கின்ற போது,

..... اذْهَبُوا إِلَى غَيْرِي اذْهَبُوا إِلَى مُحَمَّدٍ فَيَأْتُونَ مُحَمَّدًا <u>فَيَقُولُونَ يَا مُحَمَّدُ أَنْتَ رَسُولُ اللَّهِ وَخَاتِمُ الْأَنْبِيَاءِ</u> وَقَدْ غَفَرَ اللَّهُ لَكَ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِكَ وَمَا تَأَخَّرَ اشْفَعْ لَنَا إِلَى رَبِّكَ أَلَا تَرَى إِلَى مَا نَحْنُ فِيهِ (صحيح البخاري)

'என்னை விட்டுவிட்டு வேறு ஒருவரிடம் செல்லுங்கள், முஹம்மத் நபியிடம் செல்லுங்கள் என்று கூறுவார்கள். உடனே அவர்கள் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் வந்து, <u>**முஹம்மதே! நீர் அல்லாஹ்வின் தூதரும், நபிமார்களில் இறுதியானவருமாவீர், அல்லாஹ் உமது முந்திய, பிந்திய பாவத்தை மன்னித்துவிட்டான்.**</u> உமது

இரட்சகனிடம் எமக்காக பரிந்துரை செய்வீராக, நாம் இருக்கும் நிலையை நீர் கவனித்துப் பார்க்க வேண்டாமா என்றும் கேட்பார்கள். (புகாரி, முஸ்லிம்).

இந்தச் செய்தியில் இறுதி நபி முஹம்மத் (ஸல்) அவர்கள்தான் என்றே இடம் பெற்றுள்ளது. உலக மகாப் பொய்யன் மிர்ஸாவைப் பற்றிய எந்தச் செய்தியும் அவன் நபி என்பதை உணர்த்தும் முகமாக சமிக்கையாகக் கூட இடம்பெறவில்லை. மாத்திரமின்றி, அவன் பொய்யன் முஸைலமாவின் வாரிசு என்பதையே நபிமொழிகள் உறுதி செய்கின்றன.

நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் நபிமார்களில் இறுதியனாவர்தாம் என்பதை முப்பத்தி ஏழுக்கும் அதிகமான நபித்தோழர்கள் அறிவித்துள்ளதாக 'மதீனா இஸ்லாமியப் பல்கலைக்கழகப் பேராசிரியரும், இஸ்லாமிய ஆய்வாளருமான அஷ்ஷைக்: முஹம்மத் கலீ:பா தமீமி அவர்கள் தனது தனது ஆய்வு ஒன்றில் சுட்டிக்காட்டுவதைப்பார்த்தால் இந்தச் செய்தி முதவாதிர் குர்ஆனைப் போன்ற தரத்தில் அமைந்த, மறுக்க முடியாத செய்தி என்பதை உறுதி செய்யலாம்.

وَمَنْ أَظْلَمُ مِمَّنِ افْتَرَى عَلَى اللَّهِ كَذِبًا أَوْ قَالَ أُوحِيَ إِلَيَّ وَلَمْ يُوحَ إِلَيْهِ شَيْءٌ وَمَنْ قَالَ سَأُنْزِلُ مِثْلَ مَا أَنْزَلَ اللَّهُ [الأنعام : 93]

அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக்கட்டிக் கூறுபவன், அல்லது தனக்கு வஹி அறிவிக்கப்படாத நிலையில் வஹி அறிவிக்கப்பட்டதாகக் கூறுபவன், அல்லது, அல்லாஹ் இறக்கிவைத்ததைப் போன்ற ஒன்றை தனக்கும் இறக்கிவைக்க முடியும் என்று கூறுபவன் ஆகியோரை விட மிகப் பெரும் அநியாயக்காரன் யார்தான் இருக்க முடியும்! (அல்அன்ஆம்: 93).

( صحيح مسلم ) إِنَّ بَيْنَ يَدَيْ السَّاعَةِ كَذَّابِينَ فَاحْذَرُوهُمْ மறுமை நாள் வருவதற்கு முன்னால் பல பொய்யர்கள் (நபிமார்கள் என்ற பெயரில்) தோன்றுவார்கள். அவர்களைப் பற்றி எச்சரிக்கையா இருங்கள். (முஸ்லிம்) இந்தப் பொய்யர்களில் மிர்ஸாவும் ஒருவனாகும்.

## பொய்யன் மிர்ஸாவின் பிறப்பும், நபித்துவ வாதமும்.

பொய்யர்களான இப்னு செய்யாத், முஸைலமா, துலைஹா, ஸஜாஹ், முக்தார் அஸ்ஸகபி போன்றோரின் வழித்தோன்றல்களுக்கு வரலாறும், அழிவும் இருந்தது போன்று பொய்யன் மிர்ஸாவுக்கும் இருந்தது. அது பற்றியே இங்கு சுருக்கமாக தரப்படுகின்றது.

இவன் பாகிஸ்தானின் பன்ஜாப் மாநிலத்திற்குபட்ட காதியான் கிராமத்தில் கி.பி. 1839ல் பிறந்தான். இவனது சகாக்கள் இவன் பிறந்த கிராமத்திற்கு அல்குர்ஆனில் இடம் பெறும் 'ரப்வா' என்ற சொல்லைப்பயன்படுத்தி பெயரிட்டுக் கொண்டனர். ஆங்கியலர்களிடம் மதிப்பும், மரியாதையும் பெற்றிருந்த இவனது தந்தை அக்கால முஸ்லிம்களுக்கு குழிபறித்தது மாத்திரமின்றி ஆங்கிலயர்ளின் கைபொம்மையாகவும், நம்பிக்கை நச்சத்திரமாகவும் திகழ்ந்தவர். இது பற்றி நபித்துவத்தை வாதிட்ட ஆங்கிலேய நேசத்தில் அப்பனை மிஞ்சிய மிர்ஸாவே தனது 'துஹ்பா அல்கைஸரிய்யா' என்ற நூலில் பக்கம் 16-ல் குறிப்பிடுகின்ற போது

بأن أبي "غلام مرتضى" كان من الذين لهم روابط طيبة، وعلاقات ودية مع الحكومة الإنجليزية، وكان له كرسي في ديوان الحكومة ، وقد ساعد الحكومة حينما ثار عليها أهل وطنه ودينه الهنديون مساعدة طيبة في سنة (1851) بل مدها بخمسين جنديا، وخمسين فارسا من عنده. وخدم الحكومة العالمية فوق طاقته .((التحفة القيصرية. ص:16))

ஆங்கிலேய அரசுடன் சிறந்த தொடர்பும், சிநேகபூர்வ உறவும் கொண்டவர்களில் ஒருவராக எனது தந்தை 'குலாம் முர்தழா' இருந்தார். ஆங்கிலேய அரச சபையில் அவருக்கென தனி ஆசனம் ஒதுக்கப்பட்டிருந்தது. அவரது மார்க்கத்தைச் சேர்ந்த, அவரது ஊரவர்களான இந்திய வம்சாவழியினர் அந்த அரசுக்கெதிராக கிளர்ச்சி செய்தபோது தன்னிடமிருந்த ஐம்பது படைவீரர்களையும், ஐம்பது குதிரை வீரர்களையும் கொண்டு அதற்கு சிறப்பாக உதவி நல்கினார். சர்வதேச அரசாங்கத்திற்கு தனது சக்திக்குமேல் உதவி செய்தார். என குறிப்பிடுவது பற்றி இவர்களின் முகத்திரையை கிளித்தெறிந்த பாகிஸ்தானைச் சேர்ந்த அல்லாமா

இஹ்ஸான் இலாஹி ழஹீர் (மதனி) (ரஹ்) என்ற அறிஞர் குறிப்பிடும் போது ‘இந்தக் குடும்பத்தில் குலாம் அஹ்மத் பிறக்காவிட்டால் வேறு ஒருவர் பிறப்பாரா? எனக் கேட்டு விட்டு, இவர் பருவ வயதெல்லையை அடைந்த போது உருது, மற்றும் அரபு நூல்களை அறிமுகமற்ற ஆசிரியர்களிடம் படித்தார். சட்டத்துறையில் சில பகுதிகளைப் படித்த இவர் பாகிஸ்தான் நகரங்களில் ஒருநகரான ஸியால் கோட்டில் மாதாந்தம் பதினைந்து ரூபாவிற்கு பணியாற்றினார். எனக் குறிப்பிடுகின்றார்கள்.

கி.பி. (1880)ல் ‘ பராஹீன் அல்அஹ்மதிய்யா’ எனும் நூலை வெளியிட்ட மிர்ஸா தன்னை எதிர்பாக்கப்படும் ஒரு மஹ்தியாக அதில் வாதிட்டார். பின்னர் அந்த முடிவை திடீரென மாற்றி தான் ஒரு தூதர் என்றும், தனது நபித்துவத்தை ஏற்க மறுப்பவர் காபிர் என்றும், அவர் அறுத்தவைகளை உண்ணுவது கூடாது, அவர் மரணித்தால் அவருக்காக தொழுவதும் கூடாது என்பன போன்ற சட்டங்களை (1900)ல் உத்தியோகபூர்வமாக அறிவிப்புச் செய்தான்.

## மிர்ஸாவின் அழுகிய தத்துவங்கள்.

∃ அல்லாஹ் என்னை தூதராக அனுப்பியுள்ளான். என்னை மறுப்போர் காபிர்கள்.

∃ நான் அனைத்து தூதர்களையும், நபிமார்களையும் விட சிறப்பானவன். (ஹகீகத்துல் வஹி. பக்கம்: 74)

∃ நானே எதிர்பாக்கப்பட்ட மஹ்தி, இங்கிலாந்து அரசு எனது வாள், அவர்களின் வெற்றியை நாம் கொண்டாடுவோம். ஈராக், ஷாம், என அனைத்து அரபு தேசங்களிலும் இந்த வாளின் சுடர் வீசட்டும். இந்த அரசாங்கத்திற்கு துணைபோகவும், அதற்கு உதவிடவும் வானவர்களை அல்லாஹ் இறக்கி வைத்துள்ளான். (அல்பழ்ல் சஞ்சிகை. 07-11-1918. வெளியீடு) மிர்ஸா பொய்யன், காபிர் என்பதற்கு இதுவே போதுமான சான்றாகும்.

∃ ஆங்கிலேய அரசுக்கு துணைநிற்பதிலும், பக்கபலமாக இருந்து செயற்படுவதிலும் எனதுவாழ்நாள் முழுவதையும் கழித்துள்ளேன். ஜிஹாத் செய்வது கூடாது என்பது பற்றியும், ஆங்கிலேய அரசுக்கு கட்டுப்படுவதன் அவசியம் பற்றியும் பல நூல்கள், பிரசுரங்கள் ஆகியவற்றை வெளியிட்டுள்ளேன். அவை யகிப்து, சிரியா, காபூல், ரோமாபுரி போன்ற நாடுகளில் விநியோகிக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்காகும்.

∃ ஜிஹாத் பற்றிய வசனம் தனது வருகையுடன் மாற்றப்பட்டுவிட்டது என்ற வாதம். (காதியானிகள் விளம்பரம்: 4: 49). ல் பின்வருமாறு பொறிக்கப்பட்டுள்ளது.

اتركوا فكرة الجهاد، لأن القتال للدين قد حرم . وجاء الإمام ، والمسيح، ونزل نور الله من السماء فلا جهاد.

بل الذي يجاهد في سبيل الله فهو عدو الله.

ஜிஹாத் (அறப்போர்) பற்றிய சிந்தனையை கைவிட்டுவிடுங்கள். மார்க்கத்திற்காக போரிடுவது தடை செய்யப்பட்டு விட்டது. இமாமும், மஹ்தியும் உதித்துவிட்டார், வானத்திலிருந்து அல்லாஹ்வின் பிரசகாசமும் இறங்கிவிட்டது, எனவே ‘ஜிஹாத்’ இல்லை. மட்டுமின்றி ‘ஜிஹாத்’ செய்பவர் அல்லாஹ்வின் விரோதியாவார்.

இவன் இஸ்லாத்தின் எவ்வளவு பெரிய விரோதி என்பதை இதன் மூலம் இனம் காணலாம். இதற்காக இவனது ஆங்கிலேய கடவுளர்கள் இவன் பேரில் தங்கச்சிலை எழுப்பினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

### தலைமையகம்.

வழிகெட்ட காதியானிகள் தமது தலைமையகத்தை ஆங்கிலயர்களின் ஆசிர்வாதத்துடன் லண்டனில் அமைத்து செயல்படுகிறார்கள். இஸ்ரேல், இலங்கை,

இந்தியா, ஆபிரிக்கா, போன்ற நாடுகளில் தமெக்கென கினைகளையும், ரசிகர்களையும் கொண்டு முஸ்லிம்களை வழிகெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

## காதியானிகளின் நம்பிக்கைள் சில:

∃ முதலில் பொய்யன் மிர்ஸாவை எதிர்பார்க்கப்படும் 'மஹ்தி' என்று நம்புதல்.

∃ பின்னர் திரைமறைவில் அவனை ஒரு நபியாக நம்புதல். அதற்காக மக்கள அழைத்தல்.

∃ பின்னர் குர்ஆன் என அவன் எழுதிவைத்ததைப் பிரச்சாரம் செய்தல். அதனால்தான் ' வாக்களிக்கபட்ட மஸீஹ் முன்வைத்த குர்ஆனைத்தவிர வேறு குர்ஆன் கிடையாது என வெளியிட்டனர். ஆதாரம்: (அல்பழ் சஞ்சிகை 15-07-1924-ன் வெளியீடு)

∃ ஈஸா நபியையும், மஹ்தி (ரழி) அவர்களைக் குறித்துக்கூறப்படும் நபிமொழியை தமது நபிக்காக தாம் இறுதி நபியாக நம்பாத முஹம்மத் (ஸல்) அவர்கள் சொன்னதாக நம்புதல்.

## காதியானிகளின் விசித்தரமான ஆதாரம் ?

! காதியானிகள் தமது நபியாகிய பொய்யன் மிர்ஸாவை நபிதான் என நியாயப்படுத்துவதற்காக இறுதி நபி (ஸல்) அவர்கள் பற்றி தெளிவாக எடுத்துக் கூறும்

قُلْ لَوْ شَاءَ اللَّهُ مَا تَلَوْتُهُ عَلَيْكُمْ وَلَا أَدْرَاكُمْ بِهِ فَقَدْ لَبِثْتُ فِيكُمْ عُمُرًا مِنْ قَبْلِهِ أَفَلَا تَعْقِلُونَ [يونس/16]

அல்லாஹ் நாடாதிருந்தால் இதை (குர்ஆனை) நான் உங்களுக்கு ஓதிக்காண்பித்திருக்கமாட்டேன். அது பற்றி அவன் உங்களுக்கு அறிவித்துத் தந்திருக்கவும்மாட்டான். நான் உங்களுடன் பல ஆண்டுகள் கழித்துள்ளேன். (என்னைப்பற்றி) நீங்கள் சிந்திக்க வேண்டாமா? என்ற (10:16) வது வசனத்தை குறிப்பிட்டுக்காட்டி காதியானி நபித்துவவாதத்தை நியாயப்படுத்த தமது அறியாமைக்கு சான்றுபகர்வர்.

! مَّا كَانَ مُحَمَّدٌ أَبَا أَحَدٍ مِّن رِّجَالِكُمْ وَلَكِن رَّسُولَ اللَّهِ وَخَاتَمَ النَّبِيِّينَ [الأحزاب : 40 ] முஹம்மத் (ஸல்) அவர்கள் உங்கள் ஒருவரினதும் தந்தை அல்ல. மாறாக, அல்லாஹ்வின் தூதரும், நபிமார்களில் இறுதியானவரு(முத்திரையு)மாகும். (33: 40). என்ற வசனத்தில் இடம் பெறும் **'ஹாதம்'** என்பதற்கு 'முத்திரை' 'இறுதியானவர்' என்று பொருள் கொள்ளப்படும்.

'நபிமார்கள் என்னைக் கொண்டு முடித்து வைக்கப்பட்டுள்ளனர்' என்ற நபிமொழிகளின் இடம் பெறும் வாசகத்தின் மூலம் இதன் பொருளை இன்னும் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

காதியானி மேதாவிகள் காதம் என்பதற்கு 'நபிமார்களின் அலங்காரம், அழகு, என்ற ஒன்றுக்குத் உதவாத பொருளைத் தருகின்றனர் இது எந்த டிக்ஷனரியில் கண்டுபிடித்தார்களோ தெரியவில்லை.

வாதத்திற்காக முத்திரை என்ற பொருளை வழங்கினாலும் அந்த முத்திரையை நபித்துவத்தின் மூலம் உடைக்கும் அதிகாரம் மிர்ஸாவுக்கு வழங்கப்பட்டுள்ளதாக 'குலாம் பஷீர்' என்ற காதியானிப் பிரியர் ஒருவர் பின்வருமாறு வியாக்கியானம் தருகின்றார்.

ومما هو واضح كالشمس في رابعة النهار أن باب النبوة لا يزال مفتوحا بعد النبي صلى الله عليه وسلم. ((حقيقة النبوة : ص 2898)) لابن غلام بشير.

நபித்துவத்தின் வாயில் நபி (ஸல்) அவர்களுக்குப்பின்னாலும் திறந்திருக்கும் என்பது நண்பகலில் தெரியும் சூரியனைப் போன்றது. (ஹகீகதுன்னுபுவ்வா. பக்கம்: 288).

இந்த விளக்கம் நபி (ஸல்) அவர்களின் நேரடி விளக்கத்திற்கு முரண்பட்டதாகவும், குப்ராகவும் கொள்ளப்படும் என்பதை முஸ்லிம்கள் அறிவார்கள்.

## ! பிற்காலத்தில் தோன்றவிருக்கும் மஹ்தி பற்றிய நபிமொழிகளை பொய்யன் மிர்ஸாவைக் குறிப்பதாக வாதிடுதல்.

பொய்யன் மிர்ஸாவின் பொய் நபித்துவத்தை நிலைநாட்ட இந்த ஆதராத்தை காதியானிகள் பாமரர்களிடம் இன்றும் முன்வைத்து, தமது அறியாமையை நிலைநாட்டி, அப்பாவிகளை இஸ்லாத்தை விட்டும் வழிகெடுத்துக் கொண்டிருக்கின்றனர்.

عَنْ ابْنِ جُرَيْجٍ قَالَ أَخْبَرَنِي أَبُو الزُّبَيْرِ أَنَّهُ سَمِعَ جَابِرَ بْنَ عَبْدِ اللَّهِ يَقُولُا سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ لَا تَزَالُ طَائِفَةٌ مِنْ أُمَّتِي يُقَاتِلُونَ عَلَى الْحَقِّ ظَاهِرِينَ إِلَى يَوْمِ الْقِيَامَةِ قَالَ فَيَنْزِلُ عِيسَى ابْنُ مَرْيَمَ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَيَقُولُ أَمِيرُهُمْ تَعَالَ صَلِّ لَنَا فَيَقُولُ لَا إِنَّ بَعْضَكُمْ عَلَى بَعْضٍ أُمَرَاءُ تَكْرِمَةَ اللَّهِ هَذِهِ الْأُمَّةَ (صحيح مسلم)

எனது சமுதாயத்தவரில் ஒரு குழுவினர் மறுமை நாள்வரை சத்தியத்தில் நிலையாய் இருந்து போராடிக் கொண்டிருப்பார்கள். மர்யமின் மகன் ஈஸா (அலை) அவர்கள் இறங்குவார்கள். அவர்களின் தலைவர் வாருங்கள்! எமக்காக தொழுகை நடத்துங்கள் என வேண்டிக் கொள்வார். அதற்கவர் இல்லை. உங்களில் சிலர் மற்றும் சிலருக்கு தலைமை தாங்குவது இந்த சமுதாயத்திற்கு அல்லாஹ் அளித்துள்ள சங்கைளாகும். எனக் கூறவார்கள். (முஸ்லிம்)

மறுமைய நாளின் அடையாளமாக தஜ்ஜால் என்பவன் வருவதைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் மிகத்தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்கள். அவனைப் பற்றி நீண்ட செய்தியில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

....فَبَيْنَمَا هُوَ كَذَلِكَ إِذْ بَعَثَ اللَّهُ الْمَسِيحَ ابْنَ مَرْيَمَ فَيَنْزِلُ عِنْدَ الْمَنَارَةِ الْبَيْضَاءِ شَرْقِيَّ دِمَشْقَ بَيْنَ مَهْرُودَتَيْنِ وَاضِعًا كَفَّيْهِ عَلَى أَجْنِحَةِ مَلَكَيْنِ إِذَا طَأْطَأَ رَأْسَهُ قَطَرَ وَإِذَا رَفَعَهُ تَحَدَّرَ مِنْهُ جُمَانٌ كَاللُّؤْلُؤِ (مسلم)

(அந்நத நிலையில்) அவர்கள் அவ்வாறு இருந்து மர்யமின் மஹன் மஸீஹை அல்லாஹ் அனுப்புவான். டெமஷ்கஸிற்கு கிழக்குப்பகுதியில் அமைந்திருக்கும் 'அல்மனாரத்துல் பைளா' என்ற வெள்ளைக் கோபுரத்தில் அவர்கள் வரஸ் என்ற குங்குமம் கலந்த ஆடையோடு தனது இரு மணிக்கட்டுக்ளையும் இரு வானவர்களின் இறக்கையில் வைதடதவர்களாக இறங்குவார்கள். அவர்கள் தனது தலையை சாய்த்தால் (பணித்தால் அதிலிருந்து) நீர் சொட்டும். அதை உயர்த்தினால் முத்துக்களைப் போன்ற வெள்ளி நிறம் போன்று உதிரும். என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

மேலே வந்துள்ள ஆதாரபூர்வமான நபிமொழிகளை சிந்தித்தால் முஸ்லிம்களின் மஸீஹ் ஈஸா (அலை) அவர்கள் என்பதையும், காதியானிகளின் மஸீஹ் மிர்ஸா என்பதையும் அறியலாம். முஸ்லிம்கள் நம்புகின்ற மஸீஹ் வானத்தில் இருந்து மறுமையின் அடையாளமாக டமஷ்கஸில் இன்ஷா அல்லாஹ் இறங்குவார். ஆனால் காதியானி மஸீஹ் பூமியில் பிறந்து, மரணித்து விட்டார். ஈஸா மஸீஹ் எனக்குர்ஆன் குறிப்பிடுகின்றது. அதை நபி மொழி உண்மைப்படுத்துகின்றது. ஆனால் காதியானி மஸீஹை அவ்விரண்டுமே பொய்யன் என்கின்றது. வாதத்திற்காக அவனை மஸீஹ் என ஏற்றுக்கொண்டால் அவன் இருந்த போது அவர் மஹ்தி என்பவர் இருந்தாரா? கொஞ்சமாவது சிந்தக்கவேண்டாமா?

## காதியானிகளின் வாதம்.

இந்த ஹதீஸை எடுத்துக் கூறிய மாத்திரம் இரண்டெழுத்து தவ்ஹீத் தாயி ஹதீஸ்களை மறுப்பது போன்று காதியனிகளும் பின்வரும் குர்ஆனுன் வசனத்திற்கு இந்த ஹதீஸ் முரண்படுவதாகக் கூறி மறுக்கின்றனர்.

[34 : الأنبياء] وَمَا جَعَلْنَا لِبَشَرٍ مِنْ قَبْلِكَ الْخُلْدَ أَفَإِنْ مِتَّ فَهُمُ الْخَالِدُونَ (நபியே!) உமக்கு முன் சென்ற எந்த மனிதருக்கும் நாம் நிரந்தர வாழ்வை ஏற்படுத்தவில்லை. நீர் மரணிக்க அவர்கள் தொடர்ந்து (உயிருடன்) இருப்பவர்களோ (அல்அன்பியா. வச: 34).

**தெளிவு:** இது மரணம் விதியாகிவிட்டவர்கள் பற்றிப் பேசுகின்ற வசனமாகும். காதியானிகள் கூறுகின்ற கருத்தைக் கூறவில்லை. ஈஸா நபி (அலை) அவர்கள் இன்னும் மரணிக்கவில்லை என்று அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது.

[159 : النساء] وَإِنْ مِنْ أَهْلِ الْكِتَابِ إِلَّا لَيُؤْمِنَنَّ بِهِ قَبْلَ مَوْتِهِ ' நிச்சயமாக வேதக்காரர்களில் இருந்து ஒரு சாரார் (ஈஸாவாகிய) அவர் மரணிப்பதற்கு முன்னால் அவரை நம்பிக்கை கொள்வர். (அந்நிஸா: 159).

[61 : الزخرف] وَإِنَّهُ لَعِلْمٌ لِلسَّاعَةِ فَلَا تَمْتَرُنَّ بِهَا وَاتَّبِعُونِ هَذَا صِرَاطٌ مُسْتَقِيمٌ ' நிச்சயமாக (ஈஸாவாகிய) அவர் மறுமையின் அடையானமாகும். அதைப் பற்றி நீங்கள் சந்தேகம் கொள்ள வேண்டாம். நீங்கள் என்னையே பின்பற்றுங்கள், இதுவே நேரிய வழியாகும். (அஸ்ஸு க்ருப். வச: 61)

இந்த இரண்டு வசனமும் ஈஸா (அலை) அவர்கள் மறுமையிக் அடையாளமாக வருவார்கள் என்பதை உறுதி செய்கின்ற வசனங்களாகும். அந்த வசனங்களின் முன், பின் அமைப்பை சிந்தித்தால் இதை இலகுவாகப் புரிந்து கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்களுக்கு முன் வாழ்ந்த 'யஃஜூ த், மஃஜூ ஜ்' சமுதாயத்தவர் பற்றி குர்ஆன் குறிப்பிடுவதை இந்த வசனத்திற்கு முரண்படுவதாகக் கூறி அதைப் பொய் என்றல்லவா காதியானிகள் வாதிட வேண்டும். இதன் மூலம் ஈஸா (அலை) அவர்களின் வருகை பற்றி அறிவிக்கும் நபிமொழியை இந்த வசனங்கள் இன்னும் உண்மைப்படுத்துகின்றன என்பதைத்தான் அறிந்து கொள்ள முடியும்.

## மற்றொரு வாதம்:

[55 : آل عمران] إِذْ قَالَ اللَّهُ يَا عِيسَى إِنِّي مُتَوَفِّيكَ وَرَافِعُكَ إِلَيَّ ஈஸாவே நான் உன்னைக் கைப்பற்றி, என்பக்கம் உன்னை உயர்திக் கொள்வேன். (அல்அன்ஆம். வச:55) இதில் **'முதவஃப்பீக்க'** என்று இடம் பெறும் சொல் மரணிக்கச் செய்வேன் என்ற பொருளைத்தருவதால் ஈஸா மரணித்துவிட்டார்.

## மறுப்பு:

குர்ஆனுக்கு அரபு மொழிய அறிவில்லாத காதியானிகள் தருகின்ற விளக்கத்தை விட அது இறக்கியருளப்பட்ட அல்லாஹ்வின் தூதர் தரும் விளக்கமே ஏற்புடையது என்பதைக் முதலில் முஸ்லிம்கள் கருத்தில் கொள்ள வேண்டும்.

பல பொருட்களைக் கொண்ட **'தவஃப்பா'** என்ற சொல்லுக்கு இந்த வசனத்தில் உயிரைக்கைப்பற்றுதல் என்று தன்னிச்சையாக பொருள் கொள்வது அரபிமொழி பற்றிய அறிவீனமாகும். இது வழிகெட்ட பிரிவுகளின் சிறப்பம்சமும் இந்த அறியாமைதான்.

تـوفى என்ற வார்த்தை முழுமையாக உடலுடன் ஒருவரைக்கைப்பற்றவும், உயிரைக்கைப்பற்றவும், உறக்கத்தை ஏற்படுத்தவும் அரபியில் பாவிக்கிப்படும் சொற்களில் ஒன்றாகும். உறக்கத்தை தருவேன், உன்னை என்னளவில் உயர்த்திக் கொள்வேன் என்பதே இதன் பொருள். இதை (அல்அன்ஆம். வச: 60 ) (அஸ்ஸுமர்: வச: 42 ) உறுதி செய்கின்றன.

காதியானிகள் மிர்ஸாவை தமது நபியாக ஏற்றுக் கொண்டதற்காக மாத்திரம் இந்தக் கருத்தைக் கூறவில்லை. வாக்களிக்கப்பட்ட மஸீஹ் ஈஸா நபி அல்ல. மாறாக மிர்ஸாதான் என்பதை நம்பிக் கொள்வதால் இந்தக் கருத்தைக் அழுத்தமாகக் கூறுகின்றனர்.

பாவம் காதியானிகள். எவனோ ஒருவனை ஈஸா மஸீஹ் என்றும், வாக்களிக்கப்பட்ட 'மஹ்தி' என்றும் மக்களிடம் பிரச்சாரம் செய்து இறுதி நபி (ஸல்) அவர்களை நிராகரித்து நரக வாழ்க்கைக்குத் தம்மையும், பிறரையும் தயார் செய்து கொண்டிருக்கிறார்கள். மஹ்தி பற்றிய ஹதீஸ்கள் இந்தப் பொய்யனைக் குறிக்கவே குறிக்காது.

## மிர்ஸா வாக்களிக்கப்பட்ட மஹ்தியா? அல்லது எச்சரிக்கப்பட்ட பொய்யர்களில் ஒருவனா?

ஈஸா நபி (அலை) அவர்கள் மரணித்துவிட்டார்கள் என்பதைக் கூறுவதன் மூலமும் மிர்ஸாவுக்கு நபிப்பட்டம் வழங்க காதியானிகள் முற்படுகின்றனர். பொய்யன் மிர்ஸாவின் அடியாட்கள் ஈஸா நபி (அலை) அவர்கள் குறித்து முன்னறிவிப்புச் செய்யப்பட்ட நபிமொழிகளைத் திசை திருப்பி, அவை மிர்ஸாவைக் குறிக்க வந்தவையாகப் இதைக்காரணமாக வைத்தப் பிரச்சாரம் செய்கின்றனர்.

இந்த வழிகேட்டைப் புரிந்து கொள் வேண்டுமானால் மறுமையின் அடையாளமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பரம்பரையில் வரவிருக்கின்ற மஹ்தி (அலை) அவர்களைப் பற்றிய தெளிவு நம்மிடம் தேவை என்ற காரணத்தால் சுருக்கமாக அவர் பற்றி இங்கு எடுத்தெழுதப்படுகின்றது.

عَنْ أَبِي نَضْرَةَ عَنْ أَبِي سَعِيدٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْ خُلَفَائِكُمْ خَلِيفَةٌ يَحْثُو الْمَالَ حَثْيًا لَا يَعُدُّهُ عَدَدًا وفي رواية مسلم أيضا: يَكُونُ فِي آخِرِ الزَّمَانِ خَلِيفَةٌ يَقْسِمُ الْمَالَ وَلَا يَعُدُّهُ وفي روايته أيضا: قَالَ قُلْتُ لِأَبِي نَضْرَةَ وَأَبِي الْعَلَاءِ أَتَرَيَانِ أَنَّهُ عُمَرُ بْنُ عَبْدِ الْعَزِيزِ فَقَالَا لَا (صحيح مسلم )

உங்கள் கலீபாக்களில் ஒருவர் செல்வத்தை வாரி வாரி வழங்குவார். அதை எண்ணிக் கொண்டு இருக்கமாட்டார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்) மற்றொரு அறிவிப்பின்படி 'இறுதிக்காலத்தில் ஒரு கலீபா இருப்பார் (வருவார்). அவர் செல்வத்தை தாராளமாக வழங்குவார். அதை கணக்கிட்டுக் கொண்டிருக்கமாட்டார் எனக் கூறினார்கள். இந்த நபிமொழியைக் செவிமடுத்த நபித்தோழர் கூறுகின்றார், அவர் உமர் பின் அப்தில் அஸீஸ் அவர்கள் என நீங்கள் நினைக்கிறீர்களா என நான் அபூ நள்ராவிடமும், அபுல்அலாவிடமும் கேட்டேன இல்லை என்று அவர்கள் இருவரும் கூறினார்கள். (முஸ்லிம்).

**முஸ்லிம்கள் நம்புகின்ற மஹ்தி இன்னும் பிறக்கவில்லை. மறுமையின் அடையாளமாகவும், நீதியை நிலைநாட்டுபவராக அவர் வர இருக்கின்றார் என்று இந்த நபிமொழி தெளிவுபடுத்துகின்றனது. ஆனால் காதியானிகளின் பொய்யன் வந்து, மடிந்து பல ஆண்டுகள் கழிந்து விட்டன.**

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الْمَهْدِيُّ مِنِّي أَجْلَى الْجَبْهَةِ أَقْنَى الْأَنْفِ يَمْلَأُ الْأَرْضَ قِسْطًا وَعَدْلًا كَمَا مُلِئَتْ جَوْرًا وَظُلْمًا يَمْلِكُ سَبْعَ سِنِينَ (سنن أبي داود / كتاب المهدي)

**மஹ்தி என்னைச் சார்ந்தவர். அகன்ற நெற்றியுடையவர். அவர் இந்தப் பூமி அநீதி, அக்கிரமத்தால் நிரம்பிக் கிடந்ததைப் போன்று அதை அவர் நீதி, நியாயத்தால் நிரப்புவார் என்று நபிகள் நயாகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத்-அத்தியாயம். மஹ்தி).**

காதியானிகளின் வாக்களிக்கப்பட்ட மஹ்தி காதியானில் பிறந்த பச்சைப் பொய்யன். மும்தாஜ் என்ற பெண்ணைக் காதலித்த கயவன். மலக்குளியில் விழுந்து செத்துப்போனவன்.

இவனது முதல்நூலான **'பராஹீன் அஹ்மதிய்யா'** வில் யூத, கிரிஸ்தவர்களை எதிர்த்துப் பிரச்சாரம் செய்து முஸ்லிம்களின் கவனத்தை தன்பக்கம் ஈர்த்தான். பின்னர் தான் அந்த நூற்றாண்டின் சீர் தருத்தவாதி என்றான். அதன் பின்னர் தானே மஹ்தி என்றான், பின்னர், மஸீஹ் என்றான்.

**'ஸபருல் ஹாலை'** என்ற சவூதி அரேபிய அறிஞர் குறிப்பிடுவது போன்று இவனுக்கு வஹி அல்லாஹ்விடம் இருந்து வரவில்லை. மாற்றமாக லன்டனில் இருந்துதான் வஹி வந்தது.

## மஹ்தி (அலை) அவர்களை நிராகரிப்பதற்காக கூறப்படும் ஆதாரமற்ற ஹதீஸ்

1- **'**தீய மனிதர்கள் மீதுதான் மறுமை நாள் உண்டாகும். மஹ்தி என்பர் மர்யமின் மகன் ஈஸாதான்**'.** இப்னு மாஜாவில் இடம் பெறும் இந்தச் செய்தியில் பின்வரும் காரணங்களின் அடிப்படையில் ஹதீஸ்கலை அறிஞர்களால் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளது.

1- இதன் அறிவிப்பாளர் தொடரில் **'முஹம்மத் பின் ஹாலித் அல்ஜன்தி'** என்பவர் இடம் பெறுகின்றார். அவர் யார் என அறியப்படாதவர் என்ற காரணத்தால் பலவீனமானவர் என முடிவு செய்யபட்டுள்ளார்.

2- இவர் ஹதீஸ் அறிவிப்பதில் குழப்பமுடையவர். அதாவது, அறிவிப்பாளர்களை மாற்றி, மாற்றி அறிவிப்பார். ஒருமுறை **'அபான் பின் ஸாலிஹ்'** வழியாக அறிவிக்கின்றார், மற்றொரு முறை **அபான் பின் அபீ அய்யாஷ்** என்பவர் வழியாக அறிவிக்கின்றார். இதனால் இவர் அறிஞர்களால் கைவிடப்பட்டுள்ளார்.

3- அனஸ் (ரழி) அவர்களுக்கும். இதில் இடம் பெறும் அறிவிப்பாரளரான ஹஸன் என்பவருக்கு தொடர்பு அறுந்த நிலை காணப்படுகின்றது. இது போன்ற காரணங்களை அடிப்படையாகக் கொண்டு ஹதீஸ்கலை அறிஞர்கள் இந்தச் செய்தியை தள்ளுபடி செய்துள்ளனர்.

### சில நிமிடம் சிந்தியுங்கள்.

/ காதியானிகளின் சிந்தனைக்கும் தரீக்காவதிகள், ஷீஆக்கள், போராக்கள், பாபியாக்கள், பஹாயியாக்கள், போன்றோரின் சிந்தனைகளுக்கும் இடையில் தொடர்புகள் உள்ளனவா? இல்லையா ? சிந்தியுங்கள்.

/ ஷீஆக்கள் நம்பும் மஹ்திக்கும், காதியானிகள் நம்பும் மஹ்திக்கும், அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களாகிய நாம் நம்பிக்கை கொள்ளும் மஹ்திக்கும் இடையில் என்ன வேறுபாடுகள்.? சிந்தியுங்கள்.

/ ஜிஹாத் பற்றி இடம் பெறும் இறைமறைவசனங்களுக்கு தவாறான வியாக்கியானம் தரும் தப்லீக்வாதிகளுக்கும், அது பற்றிய காதியானிகளின் தலைவரின் சிந்தனைக்கும் இடையில் உடன்பாடுகள் உள்ளனவா? சிந்தியுங்கள்.

/ ஷீஆக்கள் நம்பும் மஹ்தி தோன்றி, மறைந்து ஆயிரம் வருடங்கள் கழிந்துவிட்ட நிலையில் காதியானிகள் நம்பும் மஹ்தி தோன்றி மரணித்தும் விட்டான். ஈற்றில்

இருவரும் பொய்யாகவும், கற்பனைனயாகவும் மஹ்திகளாக சித்தரிக்கப்படுபவர்களா? இல்லையா? சிந்தியுங்கள்.

/ மிர்ஸா ஒரு நபி என்பதை நிலைநாட்டிட இறுதி வேதமாகிய அல்குர்ஆனையும், இறுதி நபியின் பொன்மொழிகளையும் திரித்தும், இருட்டடிப்புச் செய்தும் ஆதாரமாக முன்வைக்கும் காதியானிகளின் விளக்கத்திற்கும் வழிதவறிய ஷீஆக்களின் விளக்கத்திற்கும், சூபிகளின் விளக்கத்திற்கும் இடையில் வேறுபாடுகள் உள்ளனாவா? உடன்பாடுகள் உள்ளனவா? சிந்தியுங்கள்.

## மிர்ஸாவின் இறுதி முடிவு.

பொய்யன் மிர்ஸா தனது காலத்தில் இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்த பேரிஞர் 'தனாவுல்லாஹ் அல்அம்ரஸ்தரி' (ரஹ்) அவர்களோடு முபாஹலா (அழிவுச் சத்தியம்) செய்து கொண்டான். தான் உயிருடன் இருக்கின்ற போதே தனது கண்ணுக்கு முன்னால் தனாவுல்லாஹ்' மரணிப்பார் என அடித்துக் கூறினான்.

பரிதாபம். பொய்யன் மிர்ஸாதான் சத்தியம் செய்து ஒருவருடத்தில் அதாவது (மேமாதம், 1906-ல்) அதற்கு இலக்காகி, காளரா நோயினால் பீடிக்கப்பட்டு மலசலகூடத்தில் விழுந்து மரணித்தான் என்பதே அவனைப்பற்றிய தகவல்.

தன்னைப் பற்றி ஒரு நபியாக வாதிட்டவன் இவ்வாறு மரணித்தது பற்றியும், அவனை மகா பொய்யன் எனவாதிட்டவர் அவனது மரணத்தின் பின்னால் ஏறக்குறைய நாட்பது ஆண்டுகள் அல்லாஹ்வின் அருளால் உயிர்வழ்ந்தது பற்றியும் அவனது சீடர்களே சிந்திக்க வேண்டும்.

# نشأة الخوارج ، ومنهجهم

# ஹவாரிஜ்களின் தோற்றமும், சிந்தனையும்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 11-ல் ஒரு ரபீஉல் அவ்வல் மாதம் ஒரு திங்கட்கிழமை தினம் இவ்வுலகுக்கு விடை கொடுத்தார்கள். அவர்களுக்குப் பின் வந்த கலீபாக்களான அபூ பக்கர் ஸித்தீக், உமர்பின் கத்தாப், உஸ்மான் பின் அப்பான், அலி பின் அபீதாலிப், ஹஸன் பின் அலி, முஆவியா பின் அபீ சுப்யான் (ரழி) ஆகிய நபித்தோழர்கள் இஸ்லாமிய ஆட்சித்தலைவர்களாக விளங்கினார்கள்.

நபி (ஸல்) அவர்களால் **'ஷஹீத்'** என முன்னறிவிப்புச் செய்யப்பட்ட மூன்றாம் கலீபாவான உஸ்மான் பின் அப்பான் (ரழி) அவர்களின் ஆட்சியில் குழப்பத்திற்கு வித்திட்ட 'ஹவாரிஜ்கள்' இறுதியில் அவர்களைக் கொலை செய்தது ஐக்கியமாக வாழ்ந்த சமூகத்தின் மீது பேரிடியாக அமைந்து விட்டது.

**'யார் அநியாயமாக கொலை செய்யப்படுகின்றாரோ அவரது பொறுப்பாளருக்கு (கொலையாளியை) (மன்னிக்கும், அல்லது தண்டிக்கும்) அதிகாரத்தை வழுங்கியுள்ளோம். கொலையில் அவர் எல்லைமீற வேண்டாம். நிச்சயமாக அவர் உதவி செய்யப்படுவராக இருக்கின்றார். (அல்இஸ்ரா. வச: 33)**

இந்தக் குர்ஆன் வசனத்தை ஆதாரமாகக் கொண்டு மூன்றாம் கலீபாவின் கொலையாளிகளை தண்டிக்கின்ற, அல்லது ஒப்படைக்கின்ற வரை தானோ, தனது ஆழுகையின் கீழ் இருக்கும் முஸ்லிம்களோ நான்காம் கலீபாவாக மதீனாவில் தெரிவு செய்யப்பட்டிருக்கின்ற அலி (ரழி) அவர்களுக்கு 'பைஅத்' உறுதி மொழி தரமாட்டோம் என உஸ்மான் (ரழி) அவர்களின் தந்தையின் சகோதரரின் மகனாகிய முஆவியா (ரழி) அவர்கள் கூறியதன் விளைவாகவும், இன்னும் சில காரணிகளையும் அடிப்படையாகக் கொண்டும் முஸ்லிம்கள் முஆவியா அணி, அலி அணி என இரண்டு பிரிவாக மாறினர். முஆவியா (ரழி) அவர்கள் அப்போது சிரியா மாகாண கவர்னராக இருந்தார்கள் என்பது குறிப்பிடக்கதக்கதாகும்.

‘எனது இந்தப்பேரர் (ஹஸன்) மூலம் அல்லாஹ் மாபெரும் இரு முஸ்லிம் அணிகளுக்கிடையில் சமரசத்தை ஏற்படுத்துவான்’ (புகாரி) என்று நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்புச் செய்திருந்தார்கள். தனது தந்தை அலி (ரழி) அவர்களுக்குப் பின்னால் ஆட்சிக்கு வந்தார்கள்.

அவர்கள் தனது தாராளத்தன்மை, விட்டுக்கொடுப்பு, சமரஸச் உணர்வு ஆகிய பண்பாடுகள் மூலம் இரு அணிகளாக பிரிந்து சிதறுண்டு கிடந்த முஸ்லிம்கள் முஆவியா (ரழி) அவர்களின் தலைமத்துவத்தின் கீழ் ஹிஜ்ரி 41- ம் ஆண்டு ஒரே அணியினராகினர். இதனால் இவ்வாண்டை **‘ஆமுல் ஜமாஅ’ ‘ஐக்கிய ஆண்டு’** என இஸ்லாமிய வரலாற்று ஆசிரியர்கள் அழைக்கின்றனர்

ஹவாரிஜ்களின் இந்த பிரிவினையைத் தொடர்ந்து (நபித்தோழர்களை மதம் மாறியோராக, மோசடிக்காரர்களாக சித்தரிக்கும் ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்கள், (அமல்கள் அவசியமற்றது. நம்பிக்கை மாத்திரம் போதுமானது என வாதிடும்) முர்ஜியாக்கள், (விதியை மறுக்கும்) கத்ரிய்யாக்கள், (அல்லாஹ் அனைத்து இடங்களிலும் உள்ளான், குர்ஆன் படைக்கப்பட்டது என்ற கொள்கையுடைய) ஜஹ்மிய்யாக்கள் போன்ற பிரிவுகள் கூபாவில் தோற்றம் பெற்றன.

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ افْتَرَقَتْ الْيَهُودُ عَلَى إِحْدَى أَوْ ثِنْتَيْنِ وَسَبْعِينَ فِرْقَةً وَتَفَرَّقَتْ النَّصَارَى عَلَى إِحْدَى أَوْ ثِنْتَيْنِ وَسَبْعِينَ فِرْقَةً وَتَفْتَرِقُ أُمَّتِي عَلَى ثَلَاثٍ وَسَبْعِينَ فِرْقَةً (سنن أبي داود ، مسند أحمد)

**யூதர்கள் எழுபத்தி ஒரு கூட்டம ாகவும், கிரிஸ்தவர்கள் எழுபத்தி இரண்டு கூட்டமாகவும் பிரிந்தனர். எனது சமுதாயம் எழுபத்தி மூன்றாக பிளவுபடும் என நபிகள் நாயகம் (ஸ) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத், முஸ்னத் அஹ்மத்).**

عنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ رَأَيْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُشِيرُ إِلَى الْمَشْرِقِ فَقَالَ هَا إِنَّ الْفِتْنَةَ هَا هُنَا إِنَّ الْفِتْنَةَ هَا هُنَا مِنْ حَيْثُ يَطْلُعُ قَرْنُ الشَّيْطَانِ (صحيح البخاري)

**மதீனாவின் கிழக்குப்பக்கமாக (ஈராக்பக்கமாக) சைகை செய்து கவனியுங்கள்! ஷைதானின் கொம்பு உதயமாகும் பகுதியான இங்கிருந்துதான் குழப்பங்கள் தோன்றும் எனக் கூறினார்கள்.** (புகாரி, முஸ்லிம்) .

மேற்படி செய்திகளைக் கவனித்தால் புனித மதீனா நகர் உண்மை மார்க்கத்தின் பிறப்பிடமாகக்காணப்படும். அங்கோ, அதைச் சூழவிருந்த பகுதிகளிலோ வழிகெட்ட பிரிவுகள் தோற்றம் பெற சாத்தியமில்லை என்பதை அறியலாம். வரலாறும் அதைத்தான் உறுதி செய்கின்றது.

வழிகெட்ட சகல பிரிவுகளும் கூபாவில்தான் தோற்றம் பெற்றன. அங்குதான் ‘ஸிப்ஃபீன்’ ‘ஜமல்‘ போன்ற போர்கள் நடை பெற்றன. அங்கிருந்தான் கத்ரிய்யாக்கள், முர்ஜிய்யாக்கள், ஜஹ்மிய்யாக்கள், ஹவாரிஜ்கள், ஷீஆக்கள் போன்ற பல பிரிவுகள் தோன்றினர். இதை நாமாகக் கற்பனை செய்து கூறவில்லை. இமாம் இப்னு ஹஜர், இமாம் ஹத்தாபி போன்ற அறிஞர்கள்தாம் இக்கருத்தை குறிப்பிடுகின்றனர்.

அவரது விளக்கமே சரியானதும், வரலாற்றிற்கு முரண்பாடில்லாத விளக்கமாகும். இந்தச் செய்தி **‘நஜ்த்’** தேசத்தில் பிறந்த முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் என்ற ஓர் அறிஞரைத்தான் குறிக்கும் எனவாதிடுவது அறியாமையாகும்.

## ஹவாரிஜ்களின் வருகை.

இஸ்லாமிய வரலாற்றில் தோற்றம் பெற்ற வழிகெட்ட அனைத்து இயக்கங்களும் அல்குர்ஆனிய வசனங்களையும், நபி (ஸல்) அவர்களின் பொன்மொழியினையும் முன்வைத்தும், அவற்றைத் தவறாக விளங்கியும், வியாக்கியானம் செய்துமே வழி கெட்டன.

இந்தப் பிரிவுகள் தமது பகுத்தறிவின் மூலம் அல்குர்ஆனுக்கு விளக்கம் தரமுற்பட்டதும், தமது நோக்கத்திற்கு ஆதாரங்களை வளைத்ததும் இதற்கான பிரதான காரணிகளில் ஒன்றாக விளங்குகிறது. **'ஹவாரிஜ்கள்'** எனப்படுவோரும் இதில் இருந்து விதிவிலக்கானவர்கள் அல்லர்.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் ஸகாத் கொடுக்க ஒரு கூட்டம் மறுத்தது.

خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيهِمْ بِهَا وَصَلِّ عَلَيْهِمْ إِنَّ صَلَاتَكَ سَكَنٌ لَهُمْ وَاللَّهُ سَمِيعٌ عَلِيمٌ [التوبة : 103]

(நபியே) அவர்களிடம் இருந்து ஸகாத் என்ற ஸதகாவை எடும். அது அவர்களைப் பரிசுத்தப்படுத்தி, அவர்களைத் தூய்மைப்படுத்தும். அவர்களுக்காக பிரார்த்தனை செய்யும். நிச்சயமாக உமது பிரார்த்தனை அவர்களுக்கு அமைதியைத்தரும். அல்லாஹ் யாவற்றையும் செவியுறுவன், நன்கறிந்தவன். (அத்தவ்பா. வச: 103).

இந்த வசனத்தை ஆதாரம் காட்டி அல்லாஹ்வின் தூதரிடம்தான் ஸகாத் கொடுக்க வேண்டும். அவர்கள் செய்யும் பிரார்த்தனையே உள அமைதியைக் கொண்டுவர வல்லது. உங்கள் பிரார்த்தனை அல்ல என்ற தத்துவம் கூறி ஸகாத் கொடுக்க மறுத்தனர்.

இவர்களுக்கெதிராகவும், மதம் மாறியோருக்கு எதிராகவும், முஸைலமா, ஸஜாஹ், அல்அஸ்வத் அல் அனஸி போன்ற பொய் நபிமார்களுக்கு எதிராகவும் முதலாவது லீபா அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்கள் போர் தொடுத்து. அதில் வெற்றியும் கண்டார்கள்.

உமர் (ரழி) அவர்களின் ஆட்சி காலத்திலும் ஒரு சில குழப்பவாதிகள் குர்ஆனில் வரும் சிலவசனங்களைக் கொண்டு மக்களை குழப்பிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஸபீஹ், அல்லலு ஸு பைஹ் என்பவன் முக்கியமானவன். இவன் மக்களை குர்ஆனில் இடம் பெறும் சில வசனங்களை மற்ற வசனங்களுடன் முரண்படுவதாகக் கூறி மக்களை குழப்பினான்.

இதை அறிந்த உமர் (ரழி) அவர்கள் அனவனை அழைத்துவரச் சொல்லி அவனை அடித்துத் தண்டித்தார்கள். பின்னர் அவனை பஸராவிற்கு நாடு கடத்தினார்கள். அவனுடன் ஓட்டி உறவாட வேண்டாம் என மக்களுக்குப் பணித்தார்கள் என்ற செய்தியைப்பார்க்கின்றோம்.

**'ஹவாரிஜ்கள்',** மற்றும் பொய் நபித்துவ வாதாட்டக் கும்பல் போன்ற வழிகெட்ட பிரிவுகளின் சிந்தனைகள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் துளிர்விட ஆரம்பித்தாலும், நபி (ஸல்) அவர்களின் காலத்திலோ, அல்லது இரண்டு கலீபாக்களின் ஆட்சி காலத்திலோ அவர்களால் எதையும் சாதிக்கவோ, கொள்கைகளைப் பரப்புச் செய்யவோ முடியாதிருந்தது என்பதே உண்மை. அதைத்தான் வரலாறு பதிவு செய்துள்ளது.

இருந்தாலும் **'கத்ரை' அல்லாஹ்வின் விதியை'** மறுத்தல், குர்ஆனுக்கு முரண்படும் ஹதீஸ்களை தள்ளுபடி செய்தல், அஸ்மாஸிபாத்தை (அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளை) மறுக்கும் ஜஹ்மிய்யாக்களின் வருகை, போன்ற வழிகேட்டு சிந்தனைகள் ஆங்காங்கு இருக்கவே செய்தன. அவைதான் பிற்காலத்தில் வழிதவறிய பிரிவுகளின் பிறப்பிடமாகவும் மாறின.

இஸ்லாமிய ஆட்சிக்கு எதிராக கிளர்ச்சி செய்தோர் ஹவாரிஜ்கள் என்றழைக்கப்படுகின்றனர். அவர்கள் ஒரு அணியாக ஆகுவதற்கு முன்னர் அவர்களின் சிந்தனை காணப்பட்டது என்பதே உண்மை.

ஷீஆ சிந்தனையை தோற்றுவிப்பதற்குக் காரணமாக இருந்த **அப்துல்லா பின் ஸபஃ** (இப்னு ஸபஃ) என்றழைக்கப்படும் எமனைச் சேர்ந் யூதனின் பங்களிப்பு மிகக் அதிகமானாகும். இவன் உஸ்மான் (ரழி) அவர்களின் ஆட்சியில் நயவஞ்சகத்தனமாக இஸ்லாத்தில் நுழைந்தான். கலீபா அவர்களும், அவர்களின் ஆளுர்னர்கள் போன்றோரினதும் சாதராண குறைகள் பற்றி அதிகமதிகம் அலட்டிக் கொண்டான்.

இவன், ஹிஜாஸ், இராக், சிரியா, எகிப்து போன்ற பிரதேசங்களில் கலவரங்களின் முக்கிய சூத்திரதாரி என்று இனம் காணப்பட்ட போது மதாயினுக்கு நாடு

கடத்தப்பட்டான். கலீபாவிற்கு எதிரான இவனது சிந்தனைகளை ஏற்றுக் கொண்டோர் கலீபாவின் நடவடிக்கையில் குறைகண்டனர். அதற்கு எதிரான கிளர்ச்சியில் இறங்கினார்கள். இது இறுதியாக உஸ்மான் (ரழி) அவர்களைக் கொலை செய்வதுடன் நின்றுவிடவில்லை.

மாற்றமாக, ஜமல், ஸிப்பீன் போன்ற பல அழிவுப்போர்களுக்கும் வித்திட்டது. இஸ்லாமிய சமுதாயத்தில் பல்வேறுபட்ட சிந்தனைகள் உருவாகவும் காரணமாக அமைந்தது.

இந்தக்கும்பலே உஸ்மான் (ரழி) அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்ய நியாமற்ற காரணிகளைத் தேடிக்கொண்டு, அவர்களின் ஆட்சியில் தமது கைவரிசையைக் காட்ட திட்டம் தீட்டினர். இதன் விளைவு கலீபா உஸ்மான் (ரழி) அவர்களின் அநியாமான கொலையில் முடிந்தது.

இதைத் தொடர்ந்து ஹிஜ்ரி: 35-ல் ஆட்சிக்கு வந்த அலி (ரழி) அவர்களின் ஆட்சியில் ஒரு நிகழ்வின் பின்னணியில் (அது பற்றி பின்னர் விளக்கப்படும்) இவர்கள் பெரும் சக்தியாகத் திகழ்ந்தார்கள். இவர்களுடன் ஆறாயிரத்திற்கும் அதிகமான எண்ணிக்கையினர் காணப்பட்டுள்ளனர் என்பதை வரலாற்றை ஆய்வு செய்வதன் மூலம் தெரிந்து கொள்ளலாம். ஒரு சில அறிஞர்கள் பல்லாயிரக்கணக்கானோர் எனக் குறிப்பிடுகின்றனர். இது பற்றி விளக்கும் இப்னு (ரஹ்) அவர்கள்

فَإِنَّ اِبْتِدَاء أَمْر الْخَوَارِج كَانَ عَقِب التَّحْكِيم ، وَكَانَ التَّحْكِيم عَقِب اِنْتِهَاء الْقِتَال بِصِفِّينَ.... فتح الباري لابن حجر – (ج 21 / ص 162)

**'ஹவாரிஜ்களின் விவகாரத்தின் ஆரம்பம், 'தஹ்கீம்' (சமரச உடன்படிக்கை நிகழ்வு' ஏற்பட்ட பின்னரே ஆரம்பமானது. தஹ்கீம் நிகழ்வு ஸிப்பீன் போரின் பின்னர் நடந்தேறியது'** எனக் குறிப்பிடுகிறார்கள். **(பார்க்க: பத்ஹுல் பாரி. மக்தபா ஷாமிலா இலத்திரணியல் நூலகம்)**

அலி (ரழி) அவர்களுக்கு முஆவியா (ரழி) அவர்கள் பைஅத் தரமறுத்ததால் முஆவியா (ரழி) அவர்களுக்கும், அலி (ரழி) அவர்களுக்கும் இடையில் ஹி -36ல் முஹர்ரம் முதல்பத்தில்ஸிப்பீனில் பாரிய போர் நடந்தது. பல்லாயிரம் பேர் இதில் கொல்லப்பட்டதாக இஸ்லாமிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

முஆவியா (ரழி) அவர்களின் அணியில் கலந்து கொண்ட நபித்தோழர் அம்று பின் ஆஸ் (ரழி) அவர்களின் ஆலோசனையின் பேரில் படி நடுவில் அல்குர்ஆன் உயர்த்தப்பட்டது சண்டை முடிவுக்கு வந்தது. இரு அணிகளும் தமக்கிடையில் சமரஸம் செய்வதென உடன்பட்டனர்.

இங்குதான் ஹவாரிஜ்கள் தமது தவறான ஆதாரங்களை முன்வைத்து வெளியேறினர். இதன் பின்னர் முஆவியா (ரழி) அவர்கள் ஸிரியாவிற்கு திரும்பினார்கள். அலி (ரழி) அவர்கள் கூபாவிற்குத்திரும்பி ஹவாரிஜ்களைக் களை எடுத்தார்கள். முஆவியா (ரழி) அவர்கள் இதுவரை தான் ஆட்சி செய்து வரும் ஸிரியாவின் தலை நகர் டமஸ்களை ஆட்சித்தலைமயகமாக எடுத்து செயல்பட்டார்கள். அலி (ரழி) மதீனாவில் இருந்து வந்த தலைமையை மாற்றி கூபாவில் செயல்பட்டு வந்தார்கள். (பத்ஹுல்பாரி).

## 'ஹவாரிஜ்' என்பதன் பொருள்.

'ஹாரிஜ்' என்ற சொல்லின் பன்மைச் சொல்லே 'ஹவாரிஜ்' என்பது. இது 'ஹரஜ "خَرَجَ" 'வெளியேறினான்' 'கிளர்ச்சி செய்தான்' போன்ற பொருளில் அமைந்த இறந்த கால வினையில் இருந்து பெறப்பட்டதாகும்.

'ஹாரிஜீ ' என்று ஒருமையாகவும், 'ஹவாரிஜ்' என்று பண்மையாகவும் இஸ்லாமிய அறிஞர்கள் பிரயோகிப்பர். அதாவது முஸ்லிம் ஜனாதிபதியைக் குறை கண்டு,

அவரைக்காபிராக்கி, அவர் செய்கின்ற இஸ்லாமிய ஆட்சிக்கு எதிராக கிளர்ச்சி செய்வோர் என்ற காரணத்தினால் இந்தப் பெயர் கொண்டு அழைக்கப்பட்டனர்.

## தோற்றம்.

'ஹவாரிஜ்கள்' என்போரை அறிமுகப்படுத்தும் அறிஞர்கள் ' அலி (ரழி) அவர்களின் ஆட்சியில் நடை பெற்ற **'கிஸ்ஸதுத் தஹ்கீம்'** எனப்படும் **சமரச நிகழ்வுப் பேச்சுவார்த்தை** மனித தீர்ப்பாகும். மனிதர்களிடம் தீர்ப்பை வேண்டுவது குப்ர என அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது. ஆகவே அதனை ஏற்கமுடியாது எனக் காரணம் கூறியதுடன், உஸ்மான், அலி, தல்ஹா, சுபைர், அம்று பின் ஆஸ், அபூமூஸா அல்அஷ்அரியி, அன்னை ஆயிஷா (ரழி) போன்ற பெரும் நபித்தோழர்களைக் காபிர்கள் எனக் கூறியும் இஸ்லாமிய ஆட்சித்தலைவரான அலி (ரழி) அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்தவர்களை **'ஹவாரிஜ்கள்'** என வகைப்படுத்துகின்றனர்.

## ஹவாரிஜ்கள் பற்றிய முன்னறிவிப்புக்கள்.

இவர்கள் அலி (ரழி) அவர்களின் ஆட்சியில் தோற்றம் பெற்றதாக கூறப்பட்டாலும் உண்மையில் நபி (ஸல்) அவர்களின் காலத்திலேயே முளைக்கத் தொடங்கிவிட்டனர் என்பதை பின்வரும் நிகழ்ச்சியின் மூலம் உறுதி செய்து கொள்ளலாம்.

அல்லாஹ்வின் தூதர் ஹு னைன் போரை முடித்து திரும்பும் வழியில் **'கனீமத்தை' (போரில் கடைத்த பொருட்களை)** பங்கீடு செய்தார்கள். 'துல்குவைஸரா' என்பவன் அவர்களின் பங்கீட்டை ஆட்சேபித்தவனாக 'முஹம்மதே! நீதியாக நடவும்' எனக் கூறினான். உடனே நபி (ஸல்) அவர்கள் ' நீ நாசத்தைத் தழுவ வேண்டும்! நான் நீதியாக நடக்காவிட்டால் இப்புவியில் யார்தான் நீதியாக நடப்பார்' எனக் கேட்டுவிட்டு, நான் அவ்வாறு செய்யாவிட்டால் நான் நஷ்மடைந்தவன் என்றும் கூறிய பின் 'மூஸாவுக்கு அல்லாஹ் அருள் செய்வானாக! இதைவிடவும் அதிகம் கொடுமைப்படுத்தப்பட்டுள்ளார் என (ஆறுதல்) கூறிக் கொண்டார்கள். இதைக்கேட்ட நபித்தோழர் உமர் (ரழி) அவர்கள் ' அவனது கழுத்தை துண்டிக்க எனக்கு உத்தரவிடுங்கள்' என வேண்டியபோது ' வேண்டாம் ' இவனுடன் இன்னும் நண்பர்கள் இவனுக்கு இருப்பர். உங்களின் தொழுகையை அவர்களின் தொழுகையுடன், நோன்பை அவர்களின் நோன்புடன் ஒப்பிட்டு அற்பமாகக்கருதுவீர்கள். (அதாவது வணக்கத்தில் வல்லவர்கள்). இருந்தாலும் அவர்களின் ஓதுதல் அவர்களின் தொண்டைக் குழியைத்தாண்டாது, வில்லில் இருந்து ஈட்டி பாய்வது போல் மார்க்கத்தை விட்டும் வெளியேறுவார்கள். இவர்களின் அடையாளம் ஒரு கறுப்பு நிறமனிதன். அவனது இருமார்பகங்களும் பெண்ணின் மார்கபங்களைப் போன்றது. **மக்கள் (முஸ்லிம்கள்) பிரிந்திருக்கும் தருணத்தில் வெளிப்படுவார்கள். இவன் 'ஹவாரிஜ்கள்' அணியில் கொலை செய்யப்பட்டுக் கிடந்ததை எனது கண்களால் கண்டேன் என இந்தச் செய்தியை அறிவிக்கும் அபூ ஸயீத் அல்குத்ரி (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.** (புகாரி, முஸ்லிம்). மேற்படி செய்தியில் பல உண்மைகள் புலப்படுகின்றது.

1- ஹவாரிஜ்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்திலேயே விஸ்வரூபம் பெற்றுவிட்டனர். ஆனால் அவர்களின் ஆதிக்கம் அலி (ரழி) அவர்களின் ஆட்சியில்தான் வெளிப்படையாக தெரியவந்துள்ளது.

2- இதை இருமார்கங்கள் பெருத்த ஒரு மனிதன் அலி (ரழி) அவர்களுக்கு எதிராக நடை பெற்ற (ஸிப்பீன்) போரில் கொலையுண்ட நிலையில் கண்டுபிடிக்கப்பட்டதை இந்த ஹதீஸ் அறிவிப்பாரளிரான 'அபூஸயீத் அல்குத்ரிய்யி' (ரழி) அவர்கள் கூறும் சாட்சியத்தின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

3- தமக்கு 'பைஅத்' செய்யாத முஸ்லிம்களை காபிர்கள் என கூப்பாடு போடும் கூட்டத்திற்கும் ஹவாரிஜ்களுக்கும் இடையிலான உடன்பாடு.

4- முஸ்லிம்களை காபிர்களாக சித்தரிக்கும் நாடகம் 'ஹவாரிஜ்கள்' அரங்கேற்றிய பழைய நாடகமாகும். 'எனது பேரரான ஹஸன் இரு முஸ்லிம்

அணிகளுக்கிடையில் சமரசம் செய்து வைப்பார்' (புகாரி) என நபி (ஸல்) அவர்கள் கூறிய செய்தியின் மூலம் இதை உறுதி செய்து கொள்ளலாம்.

5- உஸ்மான் (ஸல்) அவர்களைக் கொலை செய்தோர் 'ஹவாரிஜ்கள்' தாம் என்பதை உறுதி செய்தல்.

6- வணக்கத்தில் வல்லவர்களாக இருப்பது இஸ்லாமிய கோட்பாட்டை முழுமையாகப் பேணுவதாகாது.

7- எல்லை மீறிய சிந்தனை வழிகேட்டை உருவாக்கும்.

8- தற்காலத்தில் முஸ்லிம்கள் பல பிரிவுகளாக பிரிந்திருப்பது, குப்ர் மற்றும் வழிகேட்டு பட்டம் வழங்கும் அளவு குற்றமல்ல. அதையும் மீறி குப்ர் பட்டம் வழங்குவதே வழிகேடாகும்.

9- இஸ்லாமிய ஆட்சியாளர் செய்கின்ற சில தவறுகளைக் காரணமாகக் கொண்டு அவர்களுக்கெதிராக கிளர்ச்சி செய்வது 'ஹவாரிஜிய சிந்தனையின் தாக்கமாகும். போன்ற பல அம்சங்கள்

## 'ஹவாரிஜ்கள்' ஏன் தோன்றினார்கள்.

இஸ்லாமிய வரலாற்றில் வழிகெட்ட பிரிவுகள் அல்குர்ஆனையும், அஸ்ஸுன்னாவையும் விளங்கவதற்கு தமெக்கென ஒரு வழிமுறையையும், விதிகளையும் தத்தெடுத்துக் கொண்டு அதன் அடிப்படையில் ஆதாரங்களை அனுக முற்றபட்டதன் விளைவே இவர்களின் தோற்றமும், வெளிப்பாடும் என்பதை ஆய்வின் முடிவில் அறிந்து கொள்ளலாம். ஹவாரிஜ்களும் இந்தச் சக்கரத்தில் சுழல்பவர்கள்தாம். அந்த அடிப்படையில் இவர்களின் தோற்றத்திற்கான காரணிகளைப் பின்வருமாறு பட்டயலிட முடியும்.

## ∃ நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு.

இவர்களின் வருகை பற்றி முன்னறிவிப்புச் செய்த நபி (ஸல்) அவர்கள், 'வில்லில் இருந்து ஈட்டி பாய்வது போல் மார்க்கத்தை விட்டும் இவர்கள் வெளியேறுவார்கள். இவர்களின் அடையாளம் ஒரு கறுப்பு நிறமனிதன். அவனது இருமார்பகங்களும் ஒரு பெண்ணின் மார்கபங்களைப் போன்றது. **<u>மக்கள் . (முஸ்லிம்கள்) பிரிந்திருக்கும் தருணத்தில் வெளிப்படுவார்கள்.</u>** (புகாரி,முஸ்லிம்). என அறிவிக்கும் அபூ ஸயீத் அல்குத்ரி (ரழி) அவர்கள் அலி (ரழி) அவர்களின் ஆட்சியில் இவர்களுக்கு எதிரான போரில் இவன் 'ஹவாரிஜ்கள்' அணியில் கொலை செய்யப்பட்டுக் கிடந்ததை தான் கண்ணால் கண்டதாகக் குறிப்பிடுகிறார்கள். (புகாரி, முஸ்லிம்).

## ∃ அல்குர்ஆனையும், அஸ்ஸுன்னாவையும் தவறாக விளங்கியமை.

இது அல்குர்ஆனையும், சுன்னாவையும் விட்டு தூர விலகிச் சென்ற ஒவ்வொரு பிரவின் பரிதாப நிலையாகும். வணக்கத்தில் வல்லவர்களான ஹவாரிஜ்களையும் இது விட்டு வைக்கவில்லை. எனது சமுதாயம் இருபிரிவாக இருக்கும். அவ்விரண்டிற்கு மத்தியிலும் இருந்து ஒரு கூட்டம் வெளியேறும். சத்தியத்திற்கு மிக நெருக்கமான ஒரு அணி இவர்களைக் கொலை செய்யும். (முஸ்லிம்).

'எனது இந்தப்பேரர் (ஹஸன்) இரு பெரும் முஸ்லிம் அணிகளுக்கிடையில் செய்து வைப்பார்' (புகாரி) என்ற செய்தியையும் ஒரு முஸ்லிம் ஆழமாக பரிசீலனை செய்தால் இது ஒரு முன்னறிவிப்புடன் தொடர்புடையது என்பதையும், அது ஹஸன் (ரழி) அவர்கள் உயிருடன் இருக்கும் போது நடந்தேறியாகும் என்பதை அறிந்து கொள்வான்.

இதை உண்மைப்படுத்தும் விதமாக அலி (ரழி) ஆட்சியில் சிரியாவை ஆட்சி செய்த முஆவியா (ரழி) அவர்கள் தனது பார்வைக்குப் பட்ட நியாயமான சில காரணங்களின் அடிப்படையில் அலி (ரழி) அவர்களுக்கு 'பைஅத்' தர மறுத்தார்கள்.

இதனால் சிரியா தேசத்தின் ஜனாதிபதியாக தன்னைப் பிரகடனம் செய்யும் நிலை ஏற்பட்டது. மதீனாவின் ஆட்சியாளராக அலி (τ) அவர்கள் இருந்து வருகிறார்கள்.

அலி (ரழி) அவர்களுக்கு 'பைஅத்' தர மறுத்த முஆவியா (ரழி) அவர்களுக்கும், அலி (ரழி) அவர்களுக்கும் இடையில் நடைபெறவிருந்த சமரச முயற்சியை சில நாசகார சக்தியால் சீர்குலைக்கப்பட்டதைத் தொடர்ந்து அந்த இரு அணிகளுக்கும் இடையில் உக்கிரமான போர் மூண்டது, பல உயிர்கள் பலியாகின. இறுதியில் 'தஹ்கீம்' எனப்படும் 'சமரச உடன்படிக்கை நிகழ்வு' நடை பெற்றது.

மனிதர்கள் சட்டத்திற்காக தெரிவு செய்யப்படலாம் என்பதை அனுமதிக்கும் (அந்நிஸா: 35வது வசனம்), (அல்அன்பியா 78-வசது வசனம்), (அல்மாயிதா: 95வது வசனம்), ஆகிய இன்னும் பல வசனங்களின் விளக்கங்களை ஓரம்கட்டிவிட்டு மனிதர்கள் சட்டம் கூறுபவர்களாக இருக்கக் கூடாது என்பதற்கு ' சட்டமேற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது' என்ற திருமறை வசனத்தை ஆதாரமாகக் கொண்டு 'தஹ்கீம்' நிகழ்வை நிரகாரித்தனர்.

**ஹவாரிஜ்களின் பெயர்கள்.**

ஹவாரிஜ்கள் பல பெயர்களைக் கொண் அழைக்கப்படுகின்றனர். அவற்றில் முக்கிய பெயர்கள் பின்வருமாறு.

**1) முஹக்கிமா. ஷு ராத்.** அலி (ரழி) அவர்களுக்கும், முஆவியா (ரழி) அவர்களுக்கும் இடையில் அம்று பின் ஆஸ் (ரழி) அவர்களை, முன்னிறுத்தி தஹ்கீம் என்ற (சமஸ நிகழ்வு) ஏற்படுத்தப்பட்டதை நிராகரித்த வெளியேறியதன் காரணமாக இந்தப் பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றனர். இவர்களில் ஒருவன் தஹ்கீம் நிகழ்வின் அலி (ரழி) அவர்களின் அணியில் இருந்து ஒரு முஸ்லிமையும், முஆவியா (ரழி) அவர்களின் அணியில் இருந்து ஒரு முஸ்லிமையும் கொலை செய்த பின் தான் அவ்விருவரையும் விட்டும், அவர்களின் சட்டங்களில் இருந்தும் விலகிக் கொள்வதாக அறிவித்தான்.

**2) ஹரூரிய்யா.** அலி (ரழி) அவர்கள் ஸிப்பீனிலிருந்து திரும்பி வந்த பின்னால் இவர்களில் பன்னிரெண்டாயிரம் பேர் **ஹரூரா** என்ற இடத்தில் முகாமிட்டுக் கொண்டனர். அதனால் அந்தப் பெயருடன் இணைத்து **ஹரூரிய்யா** என அழைக்கப்படுகின்றனர்.

**3) மாரிகா.** இந்த சமுதாயத்தில் இருந்து ஒரு கூட்டம் வெளியாகும் என்ற சொல்லைக் குறிக்க பயன்படுத்தப்படும் அரபி வாசகத்தில் இருந்து இது பெறப்பட்டதாகும்.

**4) ஹவாரிஜ்.** இஸ்லாமிய ஆட்சியாளரைக்குறை கண்டு அவருக்கு எதிராக கிளர்ச்சியில் ஈடுபடுவதால் இந்தப் பெயர் கொண்டு அழைக்கப்பட்டனர்.

**5) நவாஸிப்.** அஹ்லுல்பைத்களை விரோதிகளாக நோக்குவதால் நவாஸிப் என்றழைக்கப்படுகின்றனர்.

**6) அஸாரிகா. நாபிஃ பின்அஸ்ரக்** என்பவனை ஏற்று, அவன் பின்னால் போனதனால் இந்தப் பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றனர்.

**7) நஜ்திய்யா.** யமாமா பிரதேசத்தில் வாழ்ந்த **நஜ்தா பின் ஆமிர்** என்பவனுடம் இணைந்து செயல்பட்டதனால் இந்தப் பெயர் வந்தது. காலப்போக்கில் இவர்கள் அஸாரிக்கா பிரிவுடன் இணைந்து கொண்டனர்.

## 'தஹ்கீம்' சமரச நிகழ்வு

முஆவியா (ரழி) அவர்களுக்கும், அலி (ரழி) அவர்களுக்கும் இடையில் காணப்பட்ட அந்த கசப்பான நிகழ்வால் இரு அணிகளுக்கும் இடையில் ஹிஜ்ரி 37-ல் 'ஸிப்பீன்' போர் ஏற்பட்டது. பல உயிர்கள் கொலை செய்யப்படவும் காரணமாக அமைந்தது. போரின் நடுவில் முஆவியா (ரழி) அவர்களின் அணியில் இருந்தவர்கள் 'அல்குர்ஆனை'

உயர்த்தினார்கள். போர் முடிவுக்கு வந்தது. முடிவில் **'சமரச'** உடன்படிக்கைக்கு வருவதாக இரு அணிகளும் சம்மதித்தனர்.

அலி (ரழி) அவர்களின் தரப்பில் இருந்து அபூ மூஸா அல்அஷ்அரி (ரழி) அவர்களும், முஆவியா (ரழி) அவர்களின் தரப்பில் இருந்து அம்ரு பின் ஆஸ் (ரழி) அவர்களும் சமாதான தூதர்களாக நியமிக்கப்பட்டனர். இதற்கே **'தஹ்கீம்' 'சமரச நிகழ்வு' என வரலாற்றில் பதியப்பட்டுள்ளது.**

இரு மனிதர்கள் சட்டவல்லுனர்களாக நியமிக்கப்படுவதா? 'சட்டமியற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்கே' என்ற திருமறை வசனத்தையும், அதன் பொருளில் அமைந்த மற்றும் சில வசனங்களையும் தவறாக விளங்கியும், பிரச்சாரம் செய்தும், கோஷமிட்டும் ஹிஜ்ரி 36-ல் அலி (ரழி) அவர்களை விட்டும் கிட்டதட்ட ஆறாயிரம் பேர்வரை வெளியேறி 'நஹ்ருவான்' எனும் இடத்தில் குழுமினர்.

இவர்களின் கூற்று, **உண்மையானது ஆனால் அதன் மூலம் அசத்தியம் நாடப்பட்டுள்ளது.** எனக் கூறிய அலி (ரழி) அவர்கள் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரழி) அவர்களை அவர்களிடம் அனுப்பி விவாதம் செய்தார்கள். அதன் மூலம் தெளிவு பெற்று, இரண்டாயிரம் பேர்வரை மீண்டும் முஸ்லிம்களுடன் இணைந்து கொண்டார்கள். மற்றவர்களுக்கு எதிராக அலி (ரழி) போர் செய்தார்கள். அதில் வெற்றியும் பெற்றார்கள். நபி (ஸல்) அவர்களால் முன்னறிவிப்புச் செய்யப்பட்ட ஹவாரிஜ்களின் தலைவனான மார்பங்களையுடையவன் என்ற பொருளில் கூறப்பட்ட 'துஸ்ஸத்யா' காணப்பட்டதைக் கண்ணுற்ற அலி (τ) அவர்கள் அல்லாஹ்வுக்கு நன்றி கூறி 'சுஜூ த்' செய்தார்கள். (அல்பிரக் பைனல் பிரக்).

## ஹவாரிஜ்களின் கொள்கை கோட்பாடுகள்

### ∃ பெரும்பாவம் செய்தவர் நிரந்தரமாக நரகில் இருப்பார்

உலகில் பாவம் செய்யாத முஸ்லிம்கள் இல்லாமல் இல்லை. அதற்கு பரிகாரம் இல்லாமலும் இல்லை. பாவத்தை சிறிய, பெரிய பாவங்கள் எனப் பிரித்து நோக்கும் இஸ்லாம் இணைவைத்தல் என்ற கொடிய பாவத்தை செய்த நிலையில் மரணிப்பதைத் தவிர ஏனைய பாவங்களுக்கான மன்னிப்பை அல்லாஹ்வின் நாட்டத்தின் கீழ் சாட்டி விடுகின்றது. அவன் நாடினால் அதனை மன்னிப்பான். இல்லை என்றால் தண்டிப்பான் இதுவே குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் சரியான கோட்பாடாகும்.

யார் அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கின்றானோ நிச்சயமாக அல்லாஹ் அவன்மீது சுவனத்தை ஹராமாக்கிவிடுவான். அவன் ஒதுங்குமிடம் நரகமாகும். அக்கிரமக்காரர்களுக்கு எந்த உதவியாளரும் இல்லை. (அல்மாயிதா, வச: 72).

நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை கற்பிக்கப்படுவதை மன்னிக்கவேமாட்டான். அதுவல்லாததை தான் நாடுவோருக்கு மன்னிப்பான். (அந்நிஸா. வச: 48, 116) என அல்லாஹ் குறிப்பிடுவதையும், 'ஆதமின் மகனே இந்தப்பூமி அடங்லாக தீமைகள் செய்து விட்டு, எனக்கு இணை கற்பிக்காது என்னை நீ சந்தித்தால் அதன் பிரமாண அளவு மன்னிப்பால் என்னை நீ கண்டு கொள்வாய்? (திர்மதி) 'யாருடைய இதயத்தில் கடுகளவு ஈமான் இருக்கின்றதோ அவரையும் நரகில் இருந்து காப்பாற்றுங்கள்' (புகாரி, முஸ்லிம்). என அல்லாஹ்வின் தூதர் கூறுவதை கவனித்தால் இதன் உண்மை நிலையைப் புரிந்து கொள்ளலாம்.

### ∃ இஸ்லாமிய ஆட்சித் தலைவர் தவறுக்கு அப்பாற்பட்டவராக இருக்க வேண்டும்

இது **ஹவாரிஜ்கள்** உருவாக்கிக் கொண்ட கோட்பாட்டு விதியாகும். அல்லாஹ்வால் மன்னிக்கப்படும் குற்றங்கள் செய்யும் முஸ்லிம் ஆட்சியாளர்களை விட்டும் விலகி, அவர்களை காபிர்கள் என வாதிடுவதற்கும், அவர்களுக்கு கட்டுப்படுவது **'குப்ர்'** எனக் குறிப்பிடவும், அவர்களைக் **காபிர்கள்** என வாதிடவும் இந்தக் கோட்பாடு வழி வகுத்தது.

அது மாத்திரமின்றி உள்நாட்டுப் போர்கள் வெடிக்கவும், ஆயிரக்கான உயிர்கள் பலியாகவும் காரணமாக அமைந்தது. ஷீஆக்களின் இமாமத் என்ற நம்பிக்கைக்கு நேர் முரணான நம்பிக்கை.

உஸ்மான் (ரழி) அவர்களின் ஆட்சியிலும், அலி (ரழி) அவர்களின் காலத்திலும் நடை பெற்ற நிகழ்வுகள், நடவடிக்கைகள் ஹவாரிஜ்களின் நிலைப்பாட்டைப் மிகத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அதனால்தான் உஸ்மான் (ரழி) அவர்களைக் குறைகண்டது மாத்திரமல்லாது அவர்களைக் கொலை செய்யவும் துணிந்தார்கள். அவர்களின் கொலையே **'ஜமல்' 'ஸிப்பீன்'** போன்ற யுத்தங்களை உருவாக்க காரணமாக அமைந்தது.

ஹவாரிஜ்களைப் பொறுத்த வரை தவறு செய்யும் இமாமுக்கு (தலைவருக்கு) எதிராகப் போராடுவார்கள், அவர்களுடன் இணைந்து தொழமாட்டார்கள், **ஹஜ்** செய்யமாட்டார்கள், அப்படியானதொரு கூட்டமைப்புடன் சேர்ந்து செயல்படவே ஒத்துழைப்புத் தரவோ மாட்டார்கள், குப்ர், ஷிர்க் அல்லாத, சாதாரண தவறுகள் செய்யும் இஸ்லாமியத் தலைவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்வது அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் கொள்கை அல்ல.

### ∃ஸஹாபாக்களைக் குறைகாணுதல்.

நபி (ஸல்) அவர்களையே குறைகண்டவர்களுக்கு அவர்களின் அருமைத்தோழர்களான ஸஹாபாக்களைக் குறைகாணுவது மிக எளிதான ஒன்றாகவே தெரியும்.

நபி (ஸல்) அவர்கள் மூலம் **'ஷஹீத்'** என்று முன்னறிவிப்புச் செய்யப்பட்ட உஸ்மான் (ரழி) அவர்கள், காபிர்கள் என்றும், அவர்கள் கொலை செய்யப்பட்டது சரிதான் என்றும் கூறிவந்த இந்தக் கும்பல் **'தஹ்கீம்'** உடன்படிக்கை நிகழ்வுவரை அலி (ரழி) அவர்களுடன் இணைந்திருந்தார்கள்.

**தஹ்கீம்** நிகழ்வு நடை பெற்று முடிந்ததும் அது மனித சட்டம். மனிதனுக்கு கட்டுப்படுவது கூடாது எனக் காரணம் கூறினர். பின்னர் அலி (ரழி) அவர்களின் ஆட்சியை விட்டும் பிரிந்து சென்றதுடன், அவர்களைக் 'காபிர்' என்றும் கூறினார்கள். (பத்ஹு ல்பாரி. பாகம்: 12. பக்கம்: 153).

முஆவியா (ரழி) அவர்களின் அணியில் இருந்து சமாதனாத்திட்ட **(தஹ்கீம்)** நிகழ்வில் பங்கேற்ற அபூ மூஸா அல்அஷ்அரிய்யி (ரழி) அவர்களை விவேகமற்றவர் என ஷீஆக்கள் எனப்படும் ராபிழாக்களுக்கும், ஹவாரிஜ்களும் விமர்சனம் செய்வதால் நபித்தோழர்களைத் தூற்றுவதில் இவ்விரு பிரிவினர்களுக்கும் இடையில் காணப்படும் முழுமையான உடன்பாட்டை அறிந்து கொள்ளலாம். **(மேலதிக தகவல்களுக்கு: பார்க்க: பத்ஹு ல்பாரி. பாகம்: 12. பக்கம்: 153).**

### ∃ சுன்னாவை நிரகாரித்தல்.

அல்குர்ஆனுக்கு அதிகப்படியான விளக்கத்தை சுன்னா கொண்டிருக்குமாயின் குர்ஆனை விட அதிகமானது என்ற காரணம் காட்டி சுன்னாவை நிராகரிக்கும் இவர்கள், அல்குர்ஆனுக்கு மாற்றமாக சுன்னாவில் கூறப்படும் சகல சட்டங்களையும் நிராகரிக்கின்றனர். இதற்கு அவர்களின் வாழ்வில் நடைபெற்ற பல நிகழ்வுகள் சான்றாகும். ஹவாரிஜ்களின் சிந்தனைத்தாக்கம் பெற்ற ஒருவரின் வாக்குமூலம் இதோ!

**'யஸீதுல் ஃபகீர்'** என்பவர் கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின் தோன்றிய) ஹவாரிஜ்களின் சிந்தனைத் தாக்கம் பெற்றவனாக நான் இருந்தேன். நான்

சிலருள் இணைந்து ஒரு குழுவாக ஹஜ் செய்து விட்டு மதீனா வந்தடைந்தோம். அங்கு நபித்தோழர் ஜாபிர் (ரழி) அவர்கள் (மஸ்ஜிதுன் நபவியின் சுவர் ஒன்றின் பக்கம் அமர்ந்தவராக) மக்களுக்கு நபிமொழிகளை போதிப்பதை அவதானித்தோம். அப்போது அவர்கள் நரகத்தில் இருந்து இறுதியாக வெளியேறும் நரகவாசிகள் பற்றிய நபிமொழியைக் கூறினார். உடனே நாம் அல்லாஹ்வின் தூதரின் தோழரே! என்ன ஹதீஸ் அறிவிக்கிறீர்கள்! அல்லாஹ் கூறுகின்ற ' நீ நரகில் நுழைவிப்போரை நிச்சயமாக இழிவுபடுத்தி விட்டாய்' (அத்: ஆலுஇம்ரான். வச: 192 ). என்ற வசனத்திற்கும், அவர்(நரகவாசி)கள் அதிலிருந்து வெளியேற நினைக்கும் போதெல்லாம் மீண்டும் அதில் தள்ளப்படுவார்கள்' (அத்: அஸ்ஸஜ்தா. வச: 20) என்ற வசனத்திற்கும், மாற்றமாக இருப்பதாக எண்ணி அவரிடம் விபரம் கேட்டபோது உடனே அவர் நீர்! அல்குர்ஆனைப் படித்திருக்கிறீரா ? எனக் கேட்டார். ஆம்! எனப்பதில் கூறினேன். பின்னர் அவர் 'மகாமுன் மஹ்மூத்' என்ற ஓர் இடத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா ? எனக் கேட்டார். நான் ஆம் என்றேன். அப்போது அவர் 'அதுதான் முஹம்மத் (ஸல்) அவர்களின் **'மகாமுன் மஹ்மூத்'** (புகழுக்குரிய இடம்,பதவி). அதன் மூலம் அல்லாஹ் (நரகில் இருந்து) வெளியேற்றவேண்டியவர்களை வெளியேற்றுவான். எனப்பதிலளித்தார்கள். (முஸ்லிம். 320)

அல்குர்ஆனிய வசனத்திற்கு நேர்முரணாக அமைந்துள்ள செய்தியை பார்த்தால் ஹவாரிஜ்கள் கூறுவதைப் போன்று நரகில் இருந்து வெளியேற முடியாது. நரகில் நுழைவிக்கப்பட்ட முஸ்லிம்கள் வெளியேற்றப்படுவார்கள் என்ற செய்தி இவ்வசனத்தில் இருந்து விதிவிலக்களிக்கப்பட்டுள்ள சட்டமாகக் கொள்ளப்படல் வேண்டும் என்பதை நபித்தோழர் ஜாபிர் (ரழி) அவர்களின் பதிலிருந்து அறிய முடிகிறது.

குர்ஆனுக்கு எதிராக இருப்பதாகக் காரணம் காட்டி ஹதீஸ்களை மறுக்கும் ஹவாரிஜ்களின் நோய் சாதராண பொதுமக்களையும் இன்று தொற்றிக் கொண்டதால் நவீன காலத்தில் பல ஹதீஸ்கள் ஓரங்கட்டப்படும் நிலை உருவாகி இருக்கின்றது.

### ∃ ஷஃபாஅத்தை மறுத்தல்.

வானவர்களும், நபி (ஸல்) அவர்களும், இறை நம்பிக்கையாளர்களும் பாவம் செய்த முஸ்லிம்களுக்காக மறுமையில் அல்லாஹ்வின் உத்தரவுக்கிணங்க செய்யும் **'ஷபாஅத்'** சுன்னாவில் கூறப்பட்டுள்ளது.

இந்தக் கோட்பாடு, 'எங்கள் இரட்சகனே யாரை நீ நரகில் நுழைவித்தாயோ அவரை நிச்சயமாக இழிவுபடுத்தி விட்டாய் ' (அத்: ஆலுஇம்ரான். வச: 192 ). என்ற வசனத்திற்கும், (நரகவாசிகளான) அவர்கள் அதிலிருந்து வெளியேற நினைக்கும் போதெல்லாம் மீண்டும் அதில் தள்ளப்படுவார்கள்' (அத்: அஸ்ஸஜ்தா. வச: 20) என்ற வசனத்திற்கும், மாற்றமாக அமைவதால் அதனை ஏற்றுக் கொள்ள முடியாது என வாதிடுகின்றனர்.

### ∃ மனிதர்களை நீதிபதிகளாக ஏற்பது குப்ர் என வாதிடுதல்.

ஹவாரிஜ்கள் உருவாகுவதற்கு முக்கிய காரணமாக அமைந்தது இந்தத் தத்துவமே! **தஹ்கீம்** நிகழ்வில் பிரதம அதிதிகளாகக் கலந்து கொண்ட ஸஹாபாக்களையும், அதற்காக ஏற்பாடு செய்தவர்களையும், அதைப் பெருந்திக் கொண்டவர்களையும் காபிர்கள் என வாதிடுவதற்கு பின்வரும் திருமறை வசனங்களைத் இந்தக் கூட்டம் தலை கீழாகப் புரிந்ததே காரணம்.

அல்மாயிதா. அத்தியாயத்தில் இடம் பெறும் 44, 45, 47) வசனங்களைப் படியுங்கள். அல்லாஹ்வின் சட்டத்தை இஸ்லாமிய அரசு நிறைவேற்ற வேண்டும் என்ற கூறப்படுவதை அறிவீர்கள். அந்த வசனங்களை மாத்திரம் ஒரு தலைப்பட்சமாக எடுத்துக் கொண்ட இவர்கள், ஆமனிதர்களை நீதிபதிகளாக ஏற்றுக் கொள்ளலாம் என்ற (அந்நிஸா: 35), அல்மாயிதா 95, போன்ற வசனங்களையோ, ஹு தைபியாவிலும், வேறு நிகழ்வுகளின் போதும் ஸஹாபாக்கள் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டதையோ

கவனிக்காது அல்குர்ஆனையும், ஹதீஸையும் தலைகீழாக விளங்கி, மக்களுக்கு விளக்கியதால் ஸஹாபாக்களைக் கூட காபிர்கள் எனக் கூறத்தலைப்பட்டனர்.

இஸ்லாத்தின் பெயரால் முளைத்த இலங்கை, புத்தளம், ஏத்தாளை உமர் அலி ஜமாத்தும் இவ்வாறு விளக்கம் தருவதைப் பார்க்கின்றோம். அதாவது அந்நிய நாடொன்றில் சிறுபான்மை முஸ்லிம்களாக வாழ்வோர் ஒரு அமீரைத்தலைவராகக் கொண்டு பைஅத் செய்து இஸ்லாமிய ஆட்சியைக் கொண்டு வரவேண்டும். அல்லது நாடுதுறந்து ஹிஜ்ரத் செல்ல வேண்டும் போன்ற குருட்டுத் தத்துவங்கள் மூலம் அப்பாவி முஸ்லிம்கள் வழிகெடுக்கப்படுகின்றனர்.

**∃ அல்குர்ஆனில் திருமணம் செய்வதற்கு தடை செய்யப்பட்டவர்கள் நீங்கலாக ஏனயவர்களைத் திருமணம் முடிக்கலாம் என வாதிடுதல்.**

குர்ஆனுக்கு முரண்பாடாக தெரிகின்ற ஸஹீஹான ஹதீஸ்கள் நிராகரிக்கப்பட வேண்டும் என்ற கிறுக்குத் தத்துவத்தினால் உருவானதே இந்த நிலை. உதாரணமாக உடன் பிறந்த சகோதரன், மற்றும் சகோதரிகளின் பெண்மக்களைத் திருமணம் செய்வதை அல்குர்ஆன் நேரடியாக தடுத்துள்ளது. இதை மாத்திரம் தடை என ஏற்றுக் கொள்வார்கள். இந்த சட்டத்துடன் சகோதரியின் மகளின் மகளைத் திருமணம் முடிப்பதை மார்க்கம் தடை செய்துள்ளதாகவும் புரிய வேண்டும். உதாரணமாக உங்கள் அன்னையரைத் திருமணம் செய்ய வேண்டாம் என்றால் அன்னையரின் அன்னையர் அந்தக்கட்டளைக்குள் உள்ளடக்கப்படுவர். இந்த விதியை ஹவாரிஜ்கள் மறுக்கின்றனர்.

**∃ அல்குர்ஆனிய வசனங்களை எல்லைமீறிச் சிந்தித்தல்.**

எல்லை மீறிய சிந்தனையை இஸ்லாம் வன்மையாகக் கண்டிக்கின்றது. **நடவடிக்கையில் பயங்கரவாதம் இருப்பது போல சிந்தனையிலும் பயங்கவாம் இருக்குமாக இருந்தால் அது காரியங்கள் அனைத்திரும் எல்லைமீறி சிந்திப்பதாகவே இருக்கும்.** ‘நீங்கள் எல்லை மீறி நடப்பதை நான் எச்சரிக்கின்றேன். உங்களுக்கு முன்னால் வாழ்ந்தவர்களையும் அந்த எல்லை மீறல்தான் அழித்தது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

உங்களில் எவரும் தனது அமல்களால் பாதுகாப்புப் பெற முடியாது என நபி (ஸல்) அவர்கள் கூறிய போது நீங்களுமா? அல்லாஹ்வின் தூதரே! (இதில் உள்ளடக்கம்) என ஸஹாபாக்கள் கேட்டார்கள். ஆமாம். நானும்தான். அல்லாஹ் என்னையும் (அவனது) அருளைக் கொண்டு போர்த்திக் கொள்ள வேண்டும். நீங்கள் ஒருவருக்கொருவர் நட்புறவுடன் இருந்து கொள்ளுங்கள், காலையிலும், மாலையிலும், இரவில் ஒரு பகுதியிலும் அமல் செய்து கொள்ளுங்கள். **நடுநிலையைக் கைக்கொள்ளுங்கள், நடுநிலையைக் கைக்கொள்ளுங்கள். நோக்கத்தை அடைவீர்கள்** எனக் கூறினாரகள். (புகாரி).

இந்த நிலையில் இருந்து தடம் புரண்டவர்கள்தாம் **ஹவாரிஜ்கள்.** ஆனால் அவர்கள் நல்ல வணக்கசாலிகள். அவர்களின் தொழுகை, நோன்பு, இன்னபிற அமல்களையும், நமது அமல்களையும் ஒப்பிட்டுப் பார்த்து நாம் நம்மைக் குறைகண்டுகொள்வோமாம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, எனினும் அவர்களது தொழுகைகள் அவர்களின் தொண்டைக் குளியைக் கடக்காது என எச்சரித்தார்கள் (புகாரி, முஸ்லிம்). இந்த நிலைக்குக் காரணமாக எல்லைமீறிய போக்கே காரணமாக இருந்தது.

# ஷீஆ மதம் ஓர் அறிமுகம்

தொலைக்காட்சிகள், வானிலொலிகள், பத்திரிக்கைகள், மற்றும் ஊடகங்கள் பலவற்றின் ஊடாக ஷீஆக்கள், சுன்னிகள் என்ற பெயரை அடிக்கடி நாம் கேள்விப்படுகிறோம்.

இந்த ஷீஆக்கள் யார்? ஏன்? எப்போது? தோற்றம் பெற்றார்கள்? இவர்கள் உண்மையான முஸ்லிம்களா? அல்லது இஸ்லாத்தின் பெயரால் மக்களை ஏமாற்றுபவர்களா? இவர்கள் என்ன சித்தாந்தங்களை போதிக்கிறார்கள்? கடைப்பிடிக்கிறார்கள் , அவர்களின் மார்க்க மூலாதரா நூல்களுக்கும் நமது நூல்களுக்கும் இடையில் காணப்படுகின்ற வேறுபாடுகள் போன்ற முக்கிய பல தகவல்களை இங்கு நாம் ஆதராத்துடன் முன்வைக்க முணைகின்றோம்.

## நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தனது மரணத்தின் பின்னர் தோன்றவிருக்கும் வழிகெட்ட இயக்கங்கள் பற்றியும், குழப்பங்கள் பற்றியும் முன்னறிவிப்புச் செய்திருந்தார்கள். அந்தப்பிரிவில் ஹவாரிஜ்கள் எனப்படும் இஸ்லாமிய ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்வோர் தெளிவாகவும், ஏனைய பிரிவுகளும் சூசகமாகவும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

ஹு தைபா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: உமர் (ரழி) அவர்களிடம் நாம் அமர்ந்தவர்களாக இருந்தோம். அப்போது பிற்காலத்தில் (வரவிருக்கும்) குழப்பமான நிலை பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை உங்களில் மனனம் செய்தவர் யார்? எனக் கேட்டார்கள். அதற்கு நான், அது ஒரு மனிதது குடும்பத்தில், அவனது பொருளாதாரத்தில், அவனது குழந்தைகள் விஷயத்தில், அவனது அண்டைய அயலவர் விஷயத்தில் ஏற்படும் சாதாரண குழப்பம். அதற்கு தொழுகை, நோன்பு, தர்மம், நன்மையை ஏவி, தீமையை தடுப்பது போன்றவைகள் பரிகாரமாக அமையும் எனக் கூறினேன். உடனே உமர் (ரழி) அவர்கள் 'நான் அது பற்றி உம்மிடம் வினவவில்லை. மாறாக கடல் அலைபோல் வீசும் குழப்பம் பற்றியே விசாரிக்கின்றேன் என்றார்கள். அமீருல் முஃமினீன் அவர்களே! அதற்கும், உங்களுக்கும் இடையில் மூடப்பட்ட வாயில் உள்ளது. நீங்கள் அது பற்றி அலட்டிக் கொள்ள வேண்டியதில்லை எனக் கூறினேன். 'அந்த வாயில் உடைக்கப்படுமா? அல்லது மூடப்பட்டதாகவே இருக்குமா? என மீண்டும் கலீபா அவர்கள் வினவினார்கள். அது உடைக்கப்படும். அப்படியானால் அது எப்பொழுதும் மூடப்படாது போலும் எனக் கூறினார்கள். அந்த வாயில் பற்றி உமர் (ரழி) அவர்கள் அறிவார்களா? என நாம் ஹு தைபா அவர்களிடம் வினவியதற்கு ஆம். இன்று இரவு கழிந்தததும் நாளை என்பது நிச்சயம் என்பது போல் அறிபவராக இருந்தார்கள் என பதிலளித்தார்கள். (புகாரி).

இதன் விளக்கம் என்ன ? நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் தோன்றும் சகலவிதமான குழப்பங்களுக்கும் சாவுமணி அடிக்கும் வீரராக உமர் (ரழி) அவர்கள் திகழ்வார்கள் என்பதைத் தவிர வேறு என்ன விளக்கமாக இருக்க முடியும்! இதனால்தான் உமர் (ரழி) அவர்களின் சிறப்பு பற்றி எடுத்தெழுதும் இமாம் ஸஹபி என்பவர் 'தத்கிரதுல் ஹு ப்பாழ்' எனும் அவரது நூலில் ' உமர் அவர்கள் குழப்பங்களுக்கு அணையாகவும், பூட்டாகவும் காணப்பட்டார்கள்' எனக் குறிப்பிட்டுள்ளதைப்பார்க்கின்றோம்.

இந்த மாவீரர் ஈரானைச் சேர்ந்த நெருப்பு வணங்கிகளில் ஒருவனான அபூ லுஃலுஅதில் மஜூ ஸி என்பவனால் ஹி: 23ல் கொலை செய்யப்பட்டார்கள். இவனைப் பாராட்டும் முகமாக இன்றும் ஷீஅக்கள் 'பாபா அபூலுஃலுஆ' என்ற பெயரில் திருவிழாக் கொண்டாடுவதைப்பார்க்கின்றோம். அந்த இடம் இராக்கில் இருக்கின்றது.
அப்பா நாயகத்தின் அடிவருடிகளுக்கும், ஷீஆக்களின் அடிமைகளுக்கும் வேண்டுமானால் இது பற்றிய அறிவு இல்லாதிருக்கலாம். ஆனால் அந்தக் கயவர்களின் வரலாற்றைப் படித்த உண்மையான ஒவ்வொரு சுன்னி முஸ்லிமும் இது பற்றி அறிந்தே வைத்துள்ளான்.

## ஷீஆக்களின் பார்வையில் முதல் கலீபாத் தெரிவு:

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் முஸ்லிம்கள் ஒரே தலைமைத்துவத்தின் கீழ் வாழ்ந்து வந்தார்கள். ஹிஜ்ரி 11ல் நபி (ஸல்) அவர்கள் மரணமானபோது

நம்பகத்தன்மையில் உச்சநிலையில் காணப்பட்ட ஸஹாபாக்கள் நபி (ஸல்) அவர்களின் நற்சான்றையும், நன்மதிப்பையும் பெற்று, அவர்கள் மூலம் சொர்க்கத்தைக் கொண்டு நன்மாராயமும் கூறப்பட்ட அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களை ஏகமனதாக ஏற்றுக் கொண்டார்கள் என்பதே உண்மை வரலாறு. ஷீஆக்கள் இத்தெரிவை ஏற்றுக் கொள்வதில்லை.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின் அலி (ரழி) அவர்களுக்கும், அவர்களின் வழித்தோன்றிலில் வந்த பன்னிரண்டு இமாம்களுக்கும் (அவர்கள் பற்றிய விபரம் பின்னர் தரப்பட்டுள்ளது) கைமாற வேண்டி இருந்த தலைமைத்துவத்தை நபித்தோழர்கள் பலாத்காரமாக அபகரித்து, அபூபக்கர் என்பவரிடம் ஒப்படைத்து, அலி அவர்களும், அவரது பரம்பரையினருக்கம் துரோகம் இழைத்துள்ளார்கள். இதற்கு உமர் (ரழி) அபூஉபைதா (ரழி) ஆகிய இருவரும் முக்கிய காரணிகளாக செயல்பட்டார்கள். **'சமூகத்துரோகிகளான இவர்களை கலீபாக்கள் எனக் கூற முடியாது, ஏனெனில் மதம் மாறியோருடன் சேர்ந்து இவர்களும் மதம் மாறிவிட்டனர்'** என்றெல்லாம் ஷீஆக்கள் தமது மத நூல்களில் எழுதிவைத்துள்ளனர்.

இவர்களைப்பழி தீர்ப்பதற்காக **'சுர்ர மன்ரஆ'** எனப்படும் இடத்தில் 1200 வருடங்களுக்கு முன்னால் அலி (ரழி) அவர்களின் பரம்பரையில் பிறந்து, மாயமாய் மறைந்து வாழ்ந்து வரும் **'ஹஸனுல் அஸ்கரி'** என்பவர் ஷீஆக்களின் **'மஹ்தி'** பிற்காத்தில் வெளிப்பட்டு வருவார். அவர், அலி (ரழி) அவர்களுக்கு ஆட்சியை கொடுக்காது துரோகம் செய்த அபூபக்கர், உமர் (ரழி) ஆகிய பெரிய நபித்தோழர்களை அவர்களின் மண்ணறையில் இருந்தும் எழுப்பி **'ஹத்'** தண்டனை நிறைவேற்றுவார் என்றெல்லாம் இன்றும் உளருகின்றனர். இது அவர்களின் நம்பிக்கைப்படி **'ரஜ்ஆ'** எனப்படும். இவர் ஹத்தை நிறைவேற்றாது ஏன் இவ்வளவு காலமும் தாமதப்படுத்துகின்றாரோ தெரியவில்லை.!

## 'ஷீஆ' என்பதன் பொருள்.

கோஷ்டி, அணி, குழு, என்பதும் 'ஷீஆ' என்ற அரபுச் சொல்லின் பொருளாக காணப்படுகிறது. அல்குர்ஆனில் இப்பொருளில் ஆளப்பட்டுள்ள வசனங்களை அடிப்படையாகக் கொண்டு குர்ஆன் தம்மைப்பற்றியே பேசுவதாக ஷீயாக்களோ, அவர்களின் அடிவருடிகளோ எண்ணுவார்களாயின் அதுவே அவர்களின் மடைமையின் உச்சத்தை நிரூபிக்க போதுமான சான்றாகும். ஏனெனில் இஸ்லாமிய ஆட்சியின் பிற்பகுதியில்தான் இவர்கள் தோற்றம் பெற்றார்கள்.
இவர்கள் ஸஹாபாக்களைச் துட்சமாக மதிப்பவர்களாக இருப்பதால் இவர்களை 'ராபிழாக்கள்' உதறித்தள்ளியவர்கள், உதாசீனம் செய்வோர் என்ற பொருளில் அழைப்பதே சிறந்தது என அஹ்லுஸ்ஸு ன்னா அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

## இவர்கள் வழிகேடர்களா?

இவர்கள் அல்குர்ஆனில் குறை இருப்பதாகவும், நபி (ஸல்) அவர்களின் மனைவியரையும், நபித்தோழர்களையும் மதம்மாறியவர்களாக போதிப்பதாலும், தகாத வார்த்தைகளால் அவர்களை தூற்றுவதாலும், ஷீஆக் கொள்கைக்கு எதிரான முஸ்லிம்களை காபிர்கள், வழிகெட்டவர்கள் எனக்கூறுவதாலும் அறிஞர்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் இல்லாத வழிகெட்ட இயக்கங்களின் வரிசையில் உள்ளவர்களாவர்.

## ஷீஆக்களின் தோற்றம்.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின் நபித்தோழர்களான அபூபக்கர் ஸித்தீக், உமர்பின் கத்தாப், உஸ்மான் பின் அஃப்பான், அலி பின் அபீதாலிப், ஹஸன் பின் அலி, முஆவியா பின் அபீசுப்யான் ஆகிய ஆறு பேர் ஆட்சி செய்தார்கள். இவர்களில் ஹஸன் (ரழி) அவர்கள் அலி (ரழி) அவர்களின் மரணத்தின் பின் ஆட்சிக்கு வந்தார்கள்.

அலி (ரழி) ஆட்சியிக்கு வந்த போது உஸ்மான் (ரழி) அவர்களைக் கொலை செய்தோரை தண்டிக்கும் விஷயத்தில் சிரியாவின் கவர்னாக இருந்த முஆவியா (ரழி) அவர்களுக்கும், அலி (ரழி) அவர்களுக்கும் இடையில் கருத்து முரண்பாடு தோன்றியது.

முஆவியா (ரழி) அவர்களிடம் பைஅத் வேண்டிக் கொண்டு, அவர்களை ஸிரியாவின் கவர்னப்பதவியிலே அமர்த்திக் கொள்ளும்படி இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அலி (ரழி) அவர்களிடம் கேட்டுக் கொண்டார்கள். ஜமல் (ஒட்டகப்) போர் முடிந்த பின் ஜரீர் பின் அப்தில்லாஹ் அல்பஜலி (ரழி) அவர்களை முஆவியா (ரழி) அவர்களிடம் பைஅத் வேண்டிட அலி (ரழி) அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.

உஸ்மான் (ரழி) அவர்கள் தனது தந்தையின் சகோரரின் மகன் என்பதால் கொலையாளிகளைத் தண்டிக்காத வரை அலி (ரழி) அவர்களுக்கு பைஅத் தரமறுத்தார்கள். இந்தக் கருத்தில் அவர்கள் உறுதியாகவும் இருந்தார்கள். பின்னர் அபூ முஸ்லிம் அல்குராஸானி அவர்களை அனுப்பினார்கள். அதற்கும் முஆவியா (ரழி) அவர்கள் இசைந்து கொடுக்கவில்லை.

கால சூழல் சரியாக இடம் தராததைக் காரணம் காட்டி கொலையாளிகளை இப்போது தண்டிக்க முடியாது என அலி (ரழி) அவர்கள் அதனைத் தள்ளி வைத்தார்கள்.

இந்தக் கருத்து முரண்பாடு ஒரு ஆட்சியாளரின் கீழ் வாழ்ந்து வந்த முஸ்லிம்கள், **(ஷீஅத்து அலி, ஷீஆத்து முஆவியா)** அலி (ரழி) அவர்களின் அணி, முஆவியா (ரழி) அவர்களின் அணி என இரு அணிகளாகப் பிரிய வழிவகுத்தது.

மட்டுமின்றி முஆவியா (ரழி) அவர்களுக்கும், அலி (ரழி) அவர்களுக்கும் இடையில் ஹி -36ல் முஹர்ரம் முதல்பத்தில் பாரிய போர் வெடிக்கவும் வெடித்தது. அதில் பல உயர்கள் பலியாகின. முஆவியா (ரழி) அவர்களின் அணி சார்பாகக் கலந்து கொண்ட நபித்தோழரான அம்று பின் ஆஸ் (ரழி) அவர்களின் ஆலோசனையின் பேரில் போரில் நடுவில் முஆவியா (ரழி) அவர்களின் அணியில் இருந்து அல்குர்ஆன் உயர்த்தப்பட்டது. உடனே போரும் நிறுத்தப்பட்டது. இறுதியில் இரு அணிகளும் சமரஸம் செய்வதென உடன்பாட்டிற்கு வந்தனர். இங்குதான் ஹவாரிஜ்கள் குர்ஆன் வசனங்களுக்கு தவறான விளக்கங்களை முன்வைத்து வெளியேறினர். (பத்ஹுல் பாரி).

இந்தப் பிரிவினையின் போது முஸ்லிம்கள் அலி (ரழி) அவர்களின் அணியினர் என்று அறியப்படுவதற்காக **'ஷீஅத்து அலி'** என்றும், முஆவியா (ரழி) அவர்களின் என்று அறியப்படுவதற்காக **'ஷீஅத்து முஆவியா'** என்றும் அழைக்கப்பட்டனர்.

**இது ஒரு அடையாளப் பெயராகவே இருந்தது. நவீன ஷீஆக்களைப் போன்று இஸ்லாத்திற்கு மாற்றமான நம்பிக்கைகளோ, கொள்கைளையோ பிரதிபலிக்கின்ற** ஒன்றாக இருக்கவில்லை. ஸஹாபாக்கள் எந்த கொள்கைகோட்பாடுகளில் வளர்க்கப்பட்டார்களோ அதே கொள்கை கோபட்பாடுகளிலேயே இவர்களும் காணப்பட்டனர். ஆனால் அணியாகப் பிரிந்து காணப்பட்டனர்.

இது ஸஹாபாக்கள் மத்தியில் காணப்பட்ட பிரிவினையாகும். ஹிஜ்ரி 39- நடுப்பகுதியில் இப்னுல் முல்ஜிம் என்பவன் மூலம் அலி (ரழி) அவர்கள் கொலை செய்யப்பட்டார்கள். அவர்களின் மரணத்தின் பின் அவர்களின் மூத்த மகன் ஹஸன் (ரழி) அவர்கள் ஆட்சிக்கு வருகிறார்கள். ஹிஜ்ரி 40 வரை ஆட்சியில் இருந்தார்கள்.

முஸ்லிம்கள் மத்தியில் பல வருடங்களாக எரிந்து கொண்டிருந்த போர் நெருப்பை சமரசத்தின் மூலம் அணைத்தார்கள். அவர்கள் ஒரு சமாதானப் புறாவாக செயல்பட்டதால் தனது தந்தை அலி (ரழி) அவர்களுக்குப்பின் முடிசூடிக் கொண்டாலும், தனது முழு அதிகாரத்தையும் முஆவியா (ரழி) அவர்களுக்கு விட்டுக் கொடுத்ததன் மூலம் முஸ்லிம்கள் மத்தியில் அலி அணி, முஆவியா அணி என்றிருந்த நிலைமாறியது.

இந்த நிகழ்வை இஸ்லாமிய வரலாற்றாசிரியர்கள் **‘ஆமல் ஜமாஆ ‘ஐக்கிய ஆண்டு** என அழைக்கின்றனர். (ஹஸன் (ரழி) அவர்களின் இந்தச் நடவடிக்கையை விரும்பாத ஷீஆக்களில் ஒரு பிரவினர் இவரை தமது துரோகியாகவும் சித்தரித்தனர்.

## வேறுபாடு என்ன?

அலி (ரழி) அவர்களின் ஆட்சியின் போது அவர்களின் அணியில் இருந்த ஸஹாபாக்கள் இப்போது ஷீஆக்கள் முன்வைக்கின்ற கருத்துக்களைப் போன்று ஒருவர் கூட முன்வைக்கவில்லை. மாற்றமாக முஆவியா (ரழி) அவர்களின் அணியினரை தமது சகோதர முஸ்லிம்கள் என்றே கருதினர். இதனால்தான் ‘இவர்கள் நமது சகோதரர்கள், நம்மீது அத்துமீறியவர்கள். அவர்களுடன் போர் செய்து நாம் அவர்களை நல்வழிப்படுத்துகின்றோம் என்ற கருத்தைக் கூறினார்கள். (பத்ஹுல் பாரி).

இப்போதுள்ள ஷீஆக்களுக்கும், ஆரம்ப கால ஷீஆக்களுக்கும் இடையில் பல வேறுபாடுகள் உண்டு. அது பற்றிய பின்னர் அறிந்து கொள்வீர்கள்.

## ஷீஆ சிந்தனையின் நாயகன்

**இப்னு ஸபஃ** என்ற யூதனே தற்போதைய ஷீஆக்களின் சித்தாந்தத்திற்கு வித்திடவன். அவனே அலி (ரழி) அவர்கள் குதிரையில் வானத்திற்கு உயர்த்தப்பட்டார்கள், நபி (ஸல்) அவர்களின் **வஸிய்யாக** இருக்கின்றார்கள், (நபியின் மரணத்தின் பின் ஆட்சி செய்ய வேண்டும் என்ற அறிவிப்புச் செய்யப்பட்டவர்), ஸஹாபாக்கள் ஆட்சியில் அவரைத் தெரிவு செய்யாது அவருக்குத் துரோகம் இழைத்தார்கள், அஹ்லுல் பைத் எனபப்படும் அலி, பாத்திமா குடும்பத்தினருக்கு துரோகம் செய்தவர்கள் போன்ற கருத்துக்களை முன்வைத்து பாமர மக்களை வழிகெடுத்தான்.

இவனைப்பற்றிக் குறிப்பிடுகின்ற இமாம் தஹபி (ரஹ்) அவர்கள் ‘அப்துல்லாஹ் பின் ஸபஃ’ தீய, வெறித்தனம் பிடித்த ஷீயியாகும். அவன் வழிகேட்டு. பிறரையும் வழிகெடுத்தவன் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். இவனது நம்பிக்கைகளே ஷீஆக்களால் இன்று விரிவுபடுத்தப்பட்டுள்ளது. இது அலி (ரழி) அவர்களின் காலத்தில் அவர்களுக்குத் தெரியாமலே உருவாக்கப்பட்ட தத்துவமாக இருந்தது. அலி (ரழி) அவர்களைக் கடவுள் நிலைக்கு உயர்த்திப் பேசிய போது இவனை தீயிட்டுக் கொழுத்துமாறு பணித்தார்கள். அதிலிருந்து மதாயின் நகருக்கு தப்பினேன், பிழைத்தேன் என ஓடிய பின்பும், அவனது தீய சிந்தனைகளை அவன் விட்டதாக இல்லை. **‘ஷீஆக்களின் பவுள்’ என்று இவனை இனம் காட்ட முடியும்.**

அலி (ரழி) அவர்களுக்கும், முஆவியா (ரழி) அவர்களுக்கும் இடையில் நடை பெற்ற சமாதான பேச்சை சீர்குலைத்து பலர் கொலை செய்யப்படக் காரணமாக இருந்தவனும் இவனே! அலி (ரழி) அவர்கள் ‘இப்னுல் முல்ஜிம்’ என்பவனால் கொலை செய்யப்பட்ட போது அவர்கள் மரணிக்கவில்லை. மாறாக வானுலகுக்கு உயர்த்தப்பட்டுள்ளார்கள். மீண்டும் உயிர்த்தெழுந்து வருவார்கள் என்ற ஹிந்து மத நம்பிக்கையை புகுத்தியவன். இவ்வாறு பல புதிய சித்தாந்தங்களையும், கொள்கைளையும் உடைய வழிகெட்ட இந்த அமைப்பு தோற்றம் பெற்றது.

முஆவியா (ரழி) அவர்களின் மரணத்தின் பின்னால் வந்த ஆட்சியாளர்களால் ஐக்கியம் உருக்குலையத் தொடங்குகிறது. ஆட்சிக்கு வரும் தலைவர்களை தலைவர்களாக ஏற்காது அடம்பிடித்ததால் ஆங்காங்கு சிற்றரசுகள் உருவாகி, போர்களும் நடைபெற்றது.

ஹஸன் (ரழி) அவர்களுக்கும் முஆவியா (ரழி) அவர்களுக்கும் இடையில் ஏற்பட்ட சமாதான நிகழ்வைப் பொருந்திக் கொள்ளாத கூபா நகர ஷீஆக்கள் ஹுஸைன் (ரழி) அவர்களைத் தலைவராக ஏற்றுக் கொள்வதாகக் கூறி, அங்குவருமாறு அழைத்தனர். இறுதியில் கொடிய அரசன் என்று வர்ணிக்கப்டும் யஸீதின் ஆட்சியில் இப்னு ஸியாத் என்பவனிடம் மாட்வைத்து, நடுக்கடலில் தத்தளிக்க விடப்பட்டு அவர்களையும் கொலை செய்தனர்.

இது தமது முன்னோர்களான ஷீஆக்களின் மிகப் பெரும் துரோகம் என்பதை நவீன கால ஷீஆக்கள் அறிவார்கள். அதனால்தான் இதற்காகப் பரிகாரம் தேடி முஹர்ரம் பத்தில் துக்க நிகழ்வுகளையும், அனுஷ்டானங்களையும் இன்றும் பக்திப்பரவசத்தோடு அரங்கேற்றுகின்றனர்.

## ஷீஆக்களின் இமாம்கள்.

நமது கலீபாக்கள் இஸ்லாமிய சமுதாயத்தில் சிறந்த மக்களால் தெரிவு செய்யப்பட்டவர்கள். நமது கலீபாக்களை ஷீஆக்கள் இஸ்லாமியத் தலைவர்களாக ஏற்றுக் கொள்ள வில்லை. மாத்திரமின்றி மார்க்கத்தின் துரொகிகளாகவும் எழுதி வைத்துள்ளனர். அவர்களின் நம்பிக்கைப் பிரகாரம் கலீபாக்கள் பின்வருமாறு இடம் பெற வேண்டும் என வாதிடுகின்றனர்.

இதை முஸ்லிம் சமூகத்தில் நிலவும் கருத்து முரண்பாட்டிற்கு உதாணரமாகக் காட்டுகின்ற இஸ்லாமிய அழைப்பாளர்கள் அல்ல (அழிப்பாளர்கள்) நம்மில் இருக்கின்றனர். இவர்கள் நாட்டில் பிரபல்யமான கலா நிலையங்களில் இஸ்லாமியத்துறை விரிவுரையாளர்களாக இருக்கின்றார்கள். சிலர் பல்லின சமூகங்களின் இணைப்பதிகாரகளாக இருக்கின்றனர். முஸ்லிம்களிடம் முற்போக்கு சிந்தனைவாதிகளாகவும் தம்மை இனம் காட்டிக் கொள்கின்றனர். பரிதாபம். இந்த அழைப்பாளர்கள். சரி இனி ஷீஆக்களின் இமாம்கள் விஷயத்திற்கு வருவோம்

**1- அலி பின் அபீதாலிப். (ரழி) (அல்முர்தளா- பிறப்பு: ஹி. 23- மரணம். 40)**

**2- அபுல் ஹஸன் என்றழைக்கப்படுவரும், ‘அஸ்ஸகி’ என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான ஹஸன் பின் அலி (ரழி) (50- 52)**

**3- அபூ அப்தில்லாஹ் என்றழைக்கப்படுபவரும், செய்யிதுஷ்ஷு ஹதா என்ற. சிறப்புப் பெயர் பெற்றவருமான ஹு ஸைன் பின் அலி. (ஹி:3-61)**

**4- அபூ முஹம்மத் என்றழைக்கப்படுபவரும், சைனுல் ஆப்தீன் என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான அலி பின் ஹு ஸைன் (ஹி: 38- 95).**

**5- அபூ ஜஃபர் என்றழைக்கப்படுபவரும், அல்பாகிர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான முஹம்மத் அலி. (ஹி: 57- 117).**

**6- அபூ அப்தில்லாஹ் என்றழைக்கப்படுபவரும், ‘அஸ்ஸாதிக்’ என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான ஜஃபர் பின் முஹம்மத். (ஹி: 83- 148).**

**7- அபூ இப்ராஹீம் என்றழைக்கப்படுபவரும், ‘அல்காழிம்’ என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான மூஸா பின் ஜஃபர் (ஹி: 128- 183).**

**8- ‘அர்ரிழா’ என்ற சிறப்புப் பெயர் பெற்ற அபுல்ஹஸன் அலி பின் மூஸா. (ஹி: 248-203)**

**9- ‘அல்ஜவாத்’ என்ற சிறப்புப் பெயர் பெற்ற அபூஜஃபர் முஹம்மத் பின் அலி (ஹி:195-220)**

**10- ‘அல்ஹாதி’ என்ற சிறப்புப் பெயர் பெற்ற அபூஹஸன் அலி பின் முஹம்மத். (ஹி:232-260)**

**11- ‘அல்அஸ்கரி’ என்ற சிறப்புப் பெயர் பெற்ற அபூமுஹம்மத் அல்ஹஸன் பின் அலி( ஹி: 232-260)**

**12- ‘அல்மஹ்தி’ என்ற சிறப்புப் பெயர் பெற்ற அபுல்காஸிம் முஹம்மத் பின் அல்ஹஸன். (ஹி: 256) இவர் (ஹி: 256- ல், சிறுவருவத்தில் மரணமடைந்ததாகக் கூறும் ஷீஆக்கள், இவர் இன்றுவரை மறைந்து வாழ்வதாக நம்புகின்றனர்.**

**கவனிக்க:**

இவர்களில் அஹ்லுஸ்ஸு ன்னாக்களாகிய நாம் நம்புகின்ற கலீபாக்களான அலி (ரழி) அவர்களும், அவர்களின் புதல்வர்களான ஹஸன் (ரழி), ஹு ஸைன் (ரழி)

அவர்களும் இடம் பெறுகின்றனர். அதே போன்று அவர்களுக்குப் பின்னால் இடம் பெறும் மூவர் ஹதீஸ் நூல்களில் நம்பகமானவர்களாகவும், அறிஞர்களாகவும் போற்றப்படுகின்றனர்.

ஷீஆக்கள் இவர்களையும், மற்றும் சிலரையும் தமது கலீபாக்களாகவும், இமாம்களாகவும், இவர்களின் நடைமுறையிலும், தீர்ப்பிலும் எவ்வித தவறும் நிகழாது என்றும், மலக்குகள், நபிமார்களைவிட மாபெரும் அந்தஸ்துக்குரியவர்கள் என்றும் நம்புகின்றனர்.

அவ்வாறு நம்புவது ஷீஆ மதக் கோட்பாடுகிளில் ஒன்றாகும். அவர்களின் மத நூல்களே இதை உறுதி செய்கின்றன. இதைக்காரணமாகக் கொண்டும் ஷீஆக்கள் **'இமாமிய்யா'** என்ற மற்றொரு பெயர் கொண்டும் அழைக்கப்படுகின்றனர்.

وإن من ضروريات مذهبنا أن لأئمتنا مقاما لا يبلغه ملك مقرب، ولا نبي مرسل ( الحكومة الإسلامية: ص:52)

**நமது இமாம்களுக்கு இருக்கும் அந்தஸ்தை நெருக்கத்திற்குரிய மலக்கோ, அல்லது தூதராக அனுப்பப்பட்ட நபியோ அடைந்து கொள்ளமாட்டார்கள் என்பது நமது மதக் கொள்கையில் அவசியம் அறிந்திருக்க வேண்டியவைகளில் உள்ளதாகும். பார்க்க குமைனியின் அஸ்லாமிய அரசு. பக்கம். 52).**

## ஷீஆக்களின் நம்பிக்கைகளில் இருந்து ...

(1) நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பிறகு அலி (ரழி) அவர்களும், அவர்களின் பரம்பரையில் வந்த (ஷீஆக்களின் நம்பிக்கைப்படி) பன்னிரெண்டு இமாம்களுமே ஆட்சி செய்ய தகுதி வாய்ந்தவர்கள்.

**(2)** நபித்தோழர்கள் அல்குர்ஆனை ஒன்று திரட்டிய போது அலி (ரழி) அவர்களின் ஆட்சியை அறிவுறுத்தும் இறங்கி இருந்த அத்தியாயங்களான **'அல்விலாயா', 'அந்நூரைன்'** என்ற இரு அத்தியாயங்களையும் திட்டமிட்டே மறைத்துள்ளனர்.

மாத்திரமின்றி, **'அலம் நஷ்ரஹ்'** அத்தியாயத்தில் (وجعلنا عليًا صهرك) **'வஜஅல்னா அலிய்யன் லக்க ஸிஹ்ரக்'** ' அலியை உமது மருமனாக ஆக்கினோம்) என்ற வசனத்தையும், இன்னும் ஏராளமான வசனங்களையும் இருட்டடிப்புச் செய்துள்ளனர். பதினேழாயிரம் வசனங்கள் கொண்ட பாதிமாவின் (முஸ்ஹப்) குர்ஆன் நம்மிடம் உண்டு. உங்களிடம் இருப்பதோ அதில் மூன்றில் ஒரு பகுதிதான் என வாதிடுதல்.

இதை நாம் வெறும் ஊகமாகக் கூறவில்லை. இது பற்றி ஷீஆக்கள் தலைமேல் வைத்துப் புகழும் அவர்களின் இமாம்களான 'முஹம்மத் பின் யஃகூப் அல்குலைனி' என்பவர் தனது 'அல்காஃபி' என்ற நூலிலும், ' அத்தபர்ஸி ' என்பவர் 'பஸ்லுல் கிதாப்' என்ற நூலிலும் இதை உறுதி செய்துள்ளனர். அதை உறுதிப் படுத்தும் ஆவணம் பின்னர் தரப்படுகின்றது.

**(3)** அலி (ரழி) அவர்களிடம் அறிவுப்புதையல்கள் பல இருந்துள்ளன. அவை பற்றி நபித்தோழர்கள் யாரும் அறியாதிருந்துள்ளனர். அறிவு ஞானத்தின் கருவூலமாகவும், மறைவான பல இரகசியங்களின் உரிமையாளராகவும் அவர்களே இருக்கின்றார்கள்.

(4) நபித்தோழர்களில் அலி, ஹஸன், ஹு ஸைன், மிக்தாத், அம்மார் பின் யாஸிர், ஸல்மானுல் பாரிஸீ, சுஹைப், பாத்திமா (ரழி) அவர்களுடன் மற்றும் சில நபித்தோழர்கள் போக, ஏனைய அனைவர்களும் இஸ்லாத்தை விட்டும் மதம் மாறியோராகினர் என போதித்தல். இதை அவர்களின் நூல்களே உறுதி செய்கின்றன.

**(5)** நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தில் அவர்களின் மனைவியர் இடம் பெறமாட்டார்கள் என பிரச்சாரம் செய்தல். (அப்பா நாயகத்தின் பக்தர்கள் வெளியிடும் அஞ்சானப் பேழையில் இது தெளிவாகக் கூறப்பட்டுள்ளது)

**(6)** அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் தகாத நடத்தையுடைய பெண் என்பதாக இன்றும் விமர்சித்தல். (இது பற்றி குமைனியின் நூற்களிலும் கூறியுள்ளார்).

**(7)** நபியின் மரணத்தின் பின்னால் அலி (ரழி) அவர்களுக்கு கைமாற வேண்டிய ஆட்சியை அபூபக்கர் (ரழி), உமர் (ரழி) ஆகியோர் தமது தந்திர புத்தியால் தமதாக்கிக் கொண்டனர் என்பதும்,

(8) நபித்தோழர்களும், அவர்கள் வழிவந்த இமாம்களும், நபிவழி நடக்கும் சுன்னத் வல்ஜமாஅத்தினரும், காபிர்கள், அசுத்தமானவர்கள் (நஜீஸ்கள்), தவாஃப் செய்யும் போது சுன்னி முஸ்லிம் ஒருவர் பட்டுவிட்டால் உழு செய்ய வேண்டும் என்று ஷீஆ மதத் தலைவர் **அலி சிஸ்தானி** என்பவனது மார்க்க தீர்ப்பு வழங்கி இருந்தான்.

**(9) அர்ரஜ்ஆ.** இது இந்து மதத்தில் உள்ள மறுபிறவிக் கோட்பாட்டை ஒத்தது. ஷீஆக்களின் நம்பிக்கைப்பிரகாரம் ஹி: 265ற்குப் பின் பிறந்து அதாவது பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கும் மேலால் மறைந்தவராக அவர்களால் இன்றும் நம்பபப்பட்டு வரும் இமாமாகிய **'அல்மஹ்தி '** என்ற இவர்களின் பன்னிரண்டாவது இமாமானவர் மறுமையின் அடையாளமாக **'ஸாமிர்ரா'** எனப்படும் நகரத்தில் இருந்து வெளிப்பட்டு, பூமியை நீதியால் நிரப்புவார், சொத்துக்களை சரியாகப்பங்கீடு செய்வார், பிரஜைகளை நீதியாக நடத்துவார், வேதங்கள் கொடுக்கப்பட்டோருக்கிடையில் நீதியான தீர்ப்பை வழங்குவார், புதியதொரு மார்க்கத்தை தோற்றுவிப்பார் இதையே ஷீஆக்கள் **'இமாமத்' அல் இமாமா.** என போதிக்கின்றனர்.

ஷீஆக்கள் இவரையே மஹ்தியாகவும் நம்புகின்றனர். (நமது நம்பிக்கை அதுவல்ல. இது மாத்திரம் ஷீஆக்கள் காபிர்கள் என்பதற்கு போதுமான சான்றாகும்).

அத்துடன் அந்த மஹ்தி இமாம் வெளிப்பட்டு நபித்தோழர்களான அபூபக்கர் (ரழி) மற்றும், உமர் (ரழி) ஆகியோர் நபித்தோழர்களுடன் இணைந்து அலி (ரழி) அவர்களுக்கு ஆட்சி விஷயத்தில் இழைத்த துரோகத்திற்காகவும், அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் மாரியத்துல் கிப்திய்யா (ரழி) அவர்கள் பேரில் அவதூறு கூறியதற்காகவும் 'ஹத்' எனப்படும் மார்க்க சட்டத்தை நிறைவேற்றுவார் என்பதை நம்புதல். **அப்பப்பா அற்புதமான சட்ட அமுலாக்கல் முறை. அற்புதம்! அற்புதம்!**

(10) <u>**அல்கைபா.**</u> **அதாவது தமது இமாம் அல்அஸ்கரி அவர்கள் பல நூறு வருடங்கள் மறைவாக வாழ்கின்றார்கள் என்ற நம்பிக்கை.** இந்த இமாமைப்பற்றி தமது நூல்களில் இவர் மறைந்து வாழ்கின்றார், அவர் நம்மை பார்த்துக் கொண்டிருக்கின்றார், நாம் அவரைக்காண முடியாது என்றும், இவரது வருகையை அல்லாஹ் அவசரப்படுத்த வேண்டும் என்பதைக் குறிக்க தமது அவற்றில் (عج) **'அஜ்'** என்ற வாசகத்தை பொறித்திருப்பர். **'அஜ்ஜலல்லாஹு ஃபரஜஹு '** (عج– عجل الله فرجه) **'அவரது வருகையை அல்லாஹ் விரைவுபடுத்துவானாக'** என்ற பொருள் தொனிக்கும் வாசகத்தின் சுருக்கமாகும். **தற்போதைய ஈரானிய அதிபர் அஹ்த் நஜாத் அவர்களும் இந்த நம்பிக்கையாளரே!**

**இன்றும் ஈராக்கில்** இந்த இமாமின் பெயரில் இயங்கும் **'ஜைஷு ல் மஹ்தி'** யினர் 'அஹ்லுஸ்ஸு ன்னா' முஸ்லிம்களை தாறுமாறாகக் கொலை செய்தும், அஹ்லுஸ்ஸு ன்னாப் பெண்களை கற்பழித்தும் வருகின்றனர் என்பது உலக அறிந்த உண்மையாகும். ஆனால் நமது நாட்டிலுள்ள ஷீஆ அடிவருடிகள் இந்தக் கொடுமைகள் பற்றி அலட்டிக் கொள்ளமாட்டார்கள்.

'நமது இமாமின் மறுபிரவேசத்தை நம்பாதவரும், நாம் கடைப்பிடிக்கும் **'முத்ஆ'** தற்காலிக திருமணத்தையும் நம்பாதவரும் நம்மைச் சார்ந்தவரல்ல' என **'அல்ஆமிலி'** என்ற ஷீஆ மத அறிஞர் தனது **'வஸாயிலுஸ் ஷீஆ, இலா தஹ்ஸீலி மஸாயிஸ் ஷரீஆ'** என்ற நூலில் 438 வது பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார்கள்.

**இது பற்றிக் குறிப்பிடும் குமைனி தனது இஸ்லாமிய அரசு எனும் நூலில்: 26-வது பக்கத்தில்**

" وقد مر على الغيبة الكبرى لإمامنا المهدي أكثر من ألف عام... وقد تمر ألوف السنين قبل أن تقضى المصلحة قدوم الإمام المنتظر ( الحكومة الإسلامية. ص:22)

**'நமது இமாம் மஹ்தி அவர்களின் பெரும் மறைவிற்கு ஆயிரத்திற்கும் அதிகமான ஆண்டுகள் கழிந்து விட்டன. எதிர்பார்க்கப்பட்ட அந்த மஹ்தி வருவதற்கு இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் போகலாம்'.**

இவர்கள் குறிப்பிடும் இநத் மஹ்தி தஜ்ஜாலாகத்தான் இருக்க முடியும். ஏனெனில் பல்லாயிரணம் ஆண்டுகள் கழிந்த பின்னால் வருகை தரும் இருவரில் ஒருவர் ஈஸா (அலை) அவர்கள், மற்றவன் 'தஜ்ஜால்' என இஸ்லாத்தில் கூறப்படும் அடிப்படைக்கு மாற்றமாக இந்த நம்பிக்கை அமைந்திருக்கின்றது.

(11) **துக்யா, அல்லது 'தக்யா' எனப்படும். நயவஞ்சகம்.** அஹ்லுஸ்ஸு ன்னாக்களுடன் வெளிப்படையில் நல்லவர்களாகவும், உள்ரங்கத்தில் ஷீஆக் கொள்கையுடனும் காணப்படும் நடைமுறைக்கே தக்யா எனப்படும். இதனால்தான் **'தக்யா இல்லாதவர் உண்மையான ஷீஆவாக இருக்க முடியாது'** என்று தத்தும் போதிக்கின்றனர்.

(12) கர்பலாவை சந்திப்பது க∴பாவை சந்திப்பதை விட சிறந்தது என நம்புதல்.

(13) ஒரு பெண்ணை தாராளமாக அனுபவித்தல். இதற்கு **'முத்ஆ'** தற்காலிக திருமணம் எனப்படும்.

(14) முஹர்ரம் முதல் பத்தில் துக்கம் அனுஷ்டித்தல். 'ஆஷு ரா' நோன்பை நோற்காது குழந்தைகளின் முகங்களிலும், மேனிகளிலும் இரும்புக் கம்பிகளால் தாக்கி, கத்திகளால் குத்தி இரத்தக் காயங்களை ஏற்படுத்துவடன், தாமும் அதைக் கடைப்பிடித்தல். அதே மாதத்தில் கர்பலாவில் ஹு ஸைன் (ரழி) அவர்களின் பெயரில் மண்ணறை போன்ற உருவத்தை தயாரித்து, அதை அலங்காரப்படுத்தி துக்கம் அனுஷ்டித்தல். அந்த நாட்களில் பெண்கள் தமது ஆபரண, அணிகலன்களை அணியாதிருப்பார்கள். வீதிகள் எங்கும் **யாஹு னைன்! யாஹு ஸைன்** என்று சப்பதிமிட்டுச் செல்லித் திரிவார்கள்.

**15)அல்பதாஆ. அல்லாஹ்வின் அறிவில் குறை உள்ளதாக நம்புதல்.** அதாவது ஒரு செயல் நடந்த பின்புதான் அது பற்றி அல்லாஹ் அறிகிறான் என்பது. ஒரு சட்டத்தை அல்லாஹ் மாற்றியமைக்கின்றான் என்றால் அது பற்றிய ஆரம்ப அறிவு அவனிடம் இல்லை என்ற பொருள். அல்லது ஆரம்பத்தில் நினைத்தற்கு மாற்றமாக பின்னர் நடப்பது இருக்கும் என் நம்புதல்.

16) பெரும்பவம் செய்தவர் தவ்பா இன்றி மரணித்தால் அவர் நரகில் நிரந்தரமாக இருப்பார். ( இது ஹவாரிஜ், மற்றும் மு∴தஸிலாக்களின் கொள்கை என்பதை அறிவீர்கள்). (பத்ஹு ல்பாரி)

17) ஸகாத் கொடுக்க மறுத்த முஸ்லிம்களுடன் போர் செய்து, அவர்களை முதல் முதலின் சிறைப்பிடித்தவர் அபூபக்கர் ஸித்தீக் அவர்கள்தான் என்ற வாதாட்டம்.

இவர்கள் ஏற்றுக்கொள்கின்ற அலி (ரழி) அவர்களின் புதல்வர்களில் ஒருவரான முஹம்மத் பின் ஹனபிய்யா என்பவர் பனீஹனீபா கோத்திரத்திற்கு எதிரான போரில் பிடிபட்ட ஹனபிய்யா என்ற ஒரு அடிமைப் பெண்ணுக்கு பிறந்தவர். இந்தப்போர் யாருக்கு எதிராக நடைபெற்றது என்பதைக்கூட மறந்து விட்டார்கள் போலும்.

## ஷீஆக்களின் மறு பெயர்கள்.

ஷீஆக்களுக்கு பல பெயர்கள் உண்டு. அவற்றைப் பற்றி இங்கு காரணத்துடன் தரப்படுகின்றது.

**1) ஷீஆ.** இது அலி (ரழி) அவர்களின் அணியில் இருந்த முஸ்லிம்களை ஆரம்ப காலத்தில் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. பின்னர் ஒரு மதத்தை, ஒரு கொள்கையைப் பிரதி பலிக்கும் ஒரு கூட்டத்தைக் குறிக்கப்பயன்டுத்தப்படுகின்றது.

**2) ராபிழாக்கள்.** இந்தப் பெயர் கொண்டு இஸ்லாமிய அறிஞர்களால் அதிமாக அழைக்கப்படுகின்றனர். அவர்களின் இமாம்களில் ஒருவரான ஸைத் பின் அலி (ரஹ்) அவர்களிடம் முதல் இரண்டு கலீபாக்களில் இருந்தும் விலகுமாறு கேட்டுக்கொண்டனர். அவர் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் அவரை விட்டும் அவர்கள் ஒதுங்கிச் சென்ற போது **'புறக்கணித்தீர்கள்'** என்று அவர் கூறிய வார்த்தை மூலம் புறக்கணித்தவர்கள் என்ற பெயர் கொண்டு அன்று முதல் அழைக்கட்டனர். இது ஹிஜ்ரி 121,122. காலப்பகுதியில் நடை பெற்றதாக இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் சுட்டிக்காட்டுகின்றார்கள். இந்த நிகழ்வைக் காரணமாக வைத்து ஷீஆக்கள், **ராபிழாக்கள், ஸைதிய்யாக்கள்** என்ற இரு பிரிவாகப் பிரிந்தனர்.

**3) இமாமிய்யா.** இது ஷீஆக்களின் பன்னிரண்டு இமாம்கள் மாத்திரம் ஆட்சிக்குத் தகுதியானவர்கள் என நம்பிக்கை கொள்ளும் கூட்டத்தைக் குறிக்கப்பயன்படுத்தப்படுவது போல, அலி (ரழி) அவர்கள்தான் முதலாவது இமாம் தலைமைப் பதவிக்குத் தகுதியானவர் என்பதை நம்பிக்கை கொள்வதைக் குறிக்கவும் பயன்படுத்தப்படுகின்றது.

**4) இஸ்னை அஷரிய்யா.** பன்னிரண்டு இமாம்களும் தவறுக்கு அப்பாற்பட்டவர்கள் என்றும், அவர்கள் அல்லாஹ்வின் தூதரால் முன்னறிவிப்புச் செய்யப்பட்டவர்கள் என்றும், அவர்களின் தீர்ப்பில் எவ்வித தவறும நிகழாது என்றும் நம்புதல்.

5) **அலவிய்யா.** அலி (ரழி) அவர்களை நேசிப்பதன் பேரில் உருவாக்கப்பட்ட ஷீஆ சித்தாந்தம்.

6) **பாதிமிய்யா.** பாதிமா (ரழி) அவர்களின் பேரைப் பயன்படுத்தி, அவர்கள் மீது நேசத்தைக் காட்டி ஷீஆக் கொள்கையைப் பரப்புதல்.

**7) உபைதிய்யா, உபைதிய்யூன்.** ஷீஆக் கொள்கையைப் பரப்பக் காரணமாக இருந்த உபைதுல்லாஹ் என்ற ஷீஆ ஆட்சியாளனின் பெயரிலும் இவ்வாறு அழைக்கப்படுவர்.

**8) ஸைதிய்யாக்கள்.** ஜமல் ஸிப்பீன் போரில் கலந்து கொண்ட ஸஹாபாக்களைக் காபிர்கள் எனக் கூறுவதில்லை. அபூபக்கர், உமர், உஸ்மான், ஆகிய மூவரையும் அலி (ரழி) அவர்களுடன் காணப்பட்டவர்களையும் காபிர்கள் எனக் கூறுகின்றனர். ஷீஆக்களின் நிலைப்பாடு பற்றி நீங்கள் அறிந்ததே!

## ஷீஆப் பிரிவுகள்.

ஷீஆக்கள் மத்தியில் பல பிரிவுகள் காணப்படுகின்றன. அவற்றில் மேலே நாம் குறிப்பிட்ட பெயர்களுக்குச் சொந்தக்காரர்களாக இருப்பவர்கள் அந்தப்பரிவாகவும் அழைக்கப்படுகின்றனர். உதாரணமாக. இமாமிய்யா, ஸைதிய்யா, இஸ்னை அஷரிய்யா, இவர்களில் கராமிதா, இஸ்மாயீலிய்யா, போரா, ஸபயிய்யா, குலாத் (எல்லை மீறியோர்), ஸப்பாபா (திட்டுவோர்), முபள்ளிலா, (கலீபாக்களைச் சிறப்பித்துக் கூறுவோர். ஸைதிய்யாக்கிளில் ஒரு பிரவினர்), அலவிய்யா, பாதிமிய்யா, உபைதிய்யா, போன்ற பிரிவுகள் காணப்படுகின்றன. இவை அனைத்தும் அஹ்லுல் பைத்துகள் (நபியின் குடும்பத்தினர்) பெயரால் முளைத்தவைகள். எல்லாமே ஷீஆப்பிரிவுகள்தான். இவைகளுக்கு மத்தியில் பெரிய வேறுபாடுகள் இல்லை.

## முஸ்லிம்களை வழிகெடுப்பதில் ஷீஆக்களிள் வழிமுறைகள்.

அப்பாவி முஸ்லிம்களை வழிகெடுப்பதில் ஒருவிமான வழிமுறையும், படித்தவர்களை வழி கெடுப்பதில் மற்றொரு வழிமுறையும் ஷீஆக்களிடம் காணப்படுகின்றது.

உண்மையான அஹ்லுஸ்ஸுன்னாக் கொள்கையில் இருந்து அப்பாவி முஸ்லிம்களை திசை திருப்பிடவிடவும். ஸஹாபாக்களைத் திட்டுவதையும், குர்ஆனில் குறை இருப்பதாகக் கூறுவதை மறைத்திடவும், அஹ்லுஸ்ஸுன்னாக்களை வஹ்ஹாபிகள், நபியை நேசிக்காதவர்கள், அவ்லியாக்களை அவமதிப்பவர்கள், இமாம்களைத் திட்டுபவர்கள், சியோனிஸத்தின் காவலர்கள், பாலஸ்தீனைப் பற்றிக் கவலை அற்றவர்கள், அமெரிக்காவின் அடிவருடிகள், யூத ஏஜன்டுகள் போன்ற குற்றச்சாட்டுகளை முன்வைப்பதைப்பார்ப்பீர்கள்.

அஹ்லுல்பைத்தினரை நேசித்தல் என்ற பெயரில் ஐம்பெரும் மௌலித்களை உருவாக்கி ரபீவுல் அவ்லில் பாடல் படித்தல், மீலாத் விழா எடுத்தல், முஹர்ரம் ஆஷுரா (அஷ்ரேபராத்) உரூஸ் வைபவம் நடாத்தி, கொண்டாட்டம் போன்ற அநாச்சாராங்களை அரங்கேற்றுதல்.

இதற்கு முன்னணி நாடாக ஈரான் விளங்குகின்றது. சடங்கு சம்பிராதயங்கள், போலிப் பெயர்கள், அலங்கார வார்த்தைகள் மூலம் அப்பாவி முஸ்லிம்களைக் கவர்ந்து தம்பக்கம் இழுத்தல். மார்க்கத்தின் அடிப்படை அறிவு அறவே இல்லாத பொது மக்களுக்கு இவ்வளவு போதுமானது. கொழும்பிலுள்ள ஈரான் தூதரகம் வெளியிடும் அஹ்லுல்பைத்கள் பற்றிய நூல்களும், மிலேனியம் நிறுவனத்தினர் வெளியிடும் இதழ்களும் இதை நிரூபிக்கப் போதுமான சான்றாகும்.

படித்தவர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி, அவர்களின் நம்பிக்கையில் சந்தேகங்களை உண்டு பண்ணிய பின்னரே பெரும்பாலும் அவர்களை வழிகெடுப்பர். அதுவும் சரிவராவிட்டால் குர்ஆன் போட்டி, (ஹதீஸ்கள் ஸஹாபாக்களால் அறிவிக்கப்பட்டுள்ளதால் அதில் போட்டி என்பது கிடையவே கிடையாது), ஈரானின் கலை, இலக்கிய, கலாசார நிகழ்ச்சிகள், ரபீவுல் அவ்வல் மாதத்தில் குர்ஆன் மத்ரஸா மாணவ, மாணவியருக்கு ஹிஜாப் ஆடை வழங்குதல், மீலாத் கிராமம் அமைக்க நிதி உதவி, ஈரானுக்கு காரிகளை அனுப்புதல், மார்க்க அறிவற்ற படித்தவர்களை கௌரவ விருந்தினர்களாக அழைத்து கௌரவித்தல் போன்ற முக்கிய சில நிகழ்ச்சி நிரல்கள் மூலம் ஊடுருவுதல்.

இவை இலங்கையில் நமது கண்முன்னே மவ்லவிகளின் அங்கீகாரத்துடன், அவர்களின் அரபிக் கல்லூரிகளில் வருடாவருடம் சர்வ சாதராணமாக அரங்கேற்றப்படுகின்றன. இவை தற்கால நடை முறைகளாகவும், எழுதப்பட்ட வழிமுறைகளாகவும் மாறிவிட்டன. ஆரம்ப காலத்தில் பின்வரும் நடைமுறை கடைப்பிடிக்கப்பட்டிருந்திருக்கின்றது. இருப்பினும் அவை புதியவைகளுடன் பிரச்சாரத்திற்காக நாளடைவில் இணைத்துக் கொள்ளப்படுகின்றது என்பதே உண்மை. அவை பற்றிப்பார்ப்போம்.

## 1) அலி (ரழி) அவர்கள் அபூபக்கர் ஸித்தீக் அவர்களுக்கு பைஅத் தர மறுத்ததாகப் பிரச்சாரம் செய்தல்.

இது பற்றி விளக்குகின்ற இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள், இது பற்றி இவர்களின் உளரல்கள் தெரிந்ததுதான். அபூபக்கர் (ரழி) அவர்களுக்கு அலி (ரழி) அவர்கள் ஆரம்பத்தில் பைஅத் தந்தார்கள் என்பதற்கு இப்னு ஹிப்பானில் அபூஸயீத் (ரழி) அவர்களின் மூலம் அறிவிக்கப்படும் செய்தியில் ஆதாரம் உள்ளது. எனக் குறிப்பிட்ட பின்னர்,

وَأَمَّا مَا وَقَعَ فِي مُسْلِم " عَنْ الزُّهْرِيّ أَنَّ رَجُلًا قَالَ لَهُ لَمْ يُبَايِع عَلِيٌّ أَبَا بَكْر حَتَّى مَاتَتْ فَاطِمَة ، قَالَ : لَا وَلَا أَحَدٌ مِنْ بَنِي هَاشِم " فَقَدْ ضَعَّفَهُ الْبَيْهَقِيُّ بِأَنَّ الزُّهْرِيَّ لَمْ يُسْنِدْهُ ، وَأَنَّ الرِّوَايَةَ الْمَوْصُولَةَ عَنْ أَبِي سَعِيد أَصَحّ ((فتح الباري لابن حجر – (12 / 55)

பாத்திமா (ரழி) அவர்கள் மரணிக்கின்ற வரை அபூபக்கர் ஸித்தீக் அவர்களுக்கு அலி (ரழி) அவர்கள் பைஅத் தரமறுத்ததாக இடம் பெறும் செய்தி சுஹ்ரி இமாம் அவர்களால் அறிவிப்பாளர் முழுமைப்படுத்தப்படாததாக அறிவிக்கப்பட்டுள்ளதைக் காரணம் காட்டி இமாம் பைஹகி அவர்கள் அதை பலவீனப்படுத்தி உள்ளார்கள். அபூஸயீத் (ரழி) அவர்கள் மூலம் அறிவிக்கப்படுவது மிகச்சரியானதாகும்.

அது மாத்திரமின்றி முஸ்லிமில் இடம் பெறும் அதே அறிவிப்பில் அலி (ரழி) அவர்கள் **அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களுக்கு பைஅத் தந்ததாகவும். அதை மக்கள் பாராட்டிப் பேசியதாகவும் இடம் பெற்றுள்ளது.**

## அலி (ரழி) அவர்கள் வஸிய்யாக ஆட்சிக்கு வழிமொழியப்பட்டவர்.

இதுவும் ஷீஆக்களின் பொய்களில் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் ஆட்சிக்கு வருவது யார் என்பது பற்றி அலி (ரழி) அவர்களும், அப்பாஸ் (ரழி) அவர்களும் தமக்குள் பேசிக்கொண்ட போது அது பற்றி விசாரித்த பின்னால் நபி (ஸல்) நமக்குததர மறுத்துவிட்டால் பின்னர் மக்கள் நமக்கு தரவே மாட்டடார்கள் என்ற காரணத்தால் அவர்கள் அது பற்றிய விசாரிக்கவே முன்வரவில்லை என்றிருக்கின்ற போது வஸிய்யாக வருவார் எனக் கூறி இருப்பார்களா?

∃ அல்லாஹ்வின் தூதரே! உங்களின் வஸிய் யார் எனக் கேட்டேன். அவர் அலி பின் அபூதாலிப்தான். அவர் எனது வஸிய்யும், எனது இரகசியக் காப்பகமும், எனக்குப் பின்னால் எனது குடும்பப் பிரதி நிதியும், நான் விட்டுச் செல்பவர்களில் மிகச் சிறந்தவருமாவார்.

∃ ஒவ்வொரு நபிக்கும் அவரது மரணத்திற்குப் பின் (அதிகாரத்திற்கு வழிமொழியப் பட்டவரான) **வஸி** ஒருவர் இருப்பதுண்டு. எனது வஸி அலியாகும். நான் நபிமார்களில் இறுதியானவன். அலியோ அவ்ஸயாக்களில் இறுதியானவர். இவ்வாறு பல பொய்கள் இன்றும் ஷீஆ நூல்களில் இருந்து போதிக்கப்படுகின்றது.

இந்த உளரல் பற்றி விமர்சிக்கும் பேரறிஞர் இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள் இவை உகைலி இமாமவர்களின் **லுஅஃபா** என்ற நூலில் ஆதாரமற்ற செய்திகளின் பட்டடியலில் வந்துள்ளன. **இமாம் இப்னுல் ஜவ்ஸி என்ற** அறிஞர் இவற்றை **அல்மவ்ழூஆத்** (இட்டுக்கட்டப்பட்டவைகள்) என்ற அவரது கிரந்தத்தில் பதிவு செய்துள்ளதாக குறிப்பிடுகின்றார்கள். **(பார்க்க: பத்ஹு ல் பாரி, மக்கதபா ஷாமிலா)**

## வரலாறுகளைத் திரித்துக் கூறுதல்.

இதுவும் ஷீஆக்களின் கடைப்பிடிக்கும் மிகப்பெரிய வழிமுறைகளில் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்கள் ஹஜ் செய்தவற்கு முதலாவதாக உள்ள வருடத்தில் அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களை அனுப்பி, முஷ்ரிகீன்கள் (இணைவைப்பாளர்கள்), நிர்வானிகளாக தவாஃப் செய்வோர் வரும் ஆண்டில் இருந்து ஹஜ்ஜில் கலந்து கொள்ளக் கூடாது என்ற அறிவிப்பைக் கொடுக்கும்படி பணித்தார்கள். (புகாரி). முஸ்லிம்)

**'ஊஜ்னான்'** என்ற இடத்தை அடைந்த போது ஜிப்ரீல் (அலை) அவர்களின் உத்தரவுப் பிரகாரம் அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்கள் மாற்றப்பட்டு, அவர்களுக்குப் பதிலாக அலி (ரழி) அவர்கள் நியமிக்கப்பட்டதாக ஷீஆக்கள் கதைவிடுகின்றார்கள். இதை ஏற்றுக்கொள்ள முடியுமா என்றால் முடியாது. வாதத்திற்காக அதை ஏற்றுக்கொள்ளலாம் என எடுத்துக் கொண்டால் அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களுக்க துணையாக அலி (ரழி) அவர்கள் அனுப்பப்பட்டுள்ளதாகவே எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதே பொன்று நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் நடைபெற்ற கலீபாத்தெரிவு அநீதியான முறையிலும், சர்வதரிகாரத்தாலும் நடை பெற்றதாக போதிக்கின்றார்கள். புகாரியிலோ, ஆதாரபூர்வமான ஹதீஸ்களிலோ அப்படியானதொரு

அடக்குமறை நடை பெற்றதாக இல்லவே இல்லை. இவர்களாக கதை அளந்திருக்கின்றார்கள்.

இதற்காக செய்திகளை இருட்டிப்பச் செய்து, இட்டுக்கட்டிக்கூறும் ஷீஆக்களில் ஒருவனான **'லூத் பின் அபீ மிஹ்னப்'** என்பவன் வழியாக தபரியில் அறிவிக்கப்படும் ஆதாரமற்ற செய்திகளை ஆதாரமாக எடுத்துக் கொள்கின்றனர். இவன் இமாம்களால் புறக்கணிப்பட்டு, ஒதுக்கட்டவன் என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

## பொய்யான ஹதீஸ்களை உருவாக்குதல்.

பொய்யான செய்திகளைப் பரப்பிவடுவதன் மூலம் தமது பொய்க்கொள்கைக்கு பலம் சேர்க்க விரும்பிய இப்பரிவினர் பொய்யான ஹதீஸ்களை அலி (τ) அவர்கள் பேரிலும், நபி (ρ) அவர்களின் குடும்பத்தவர் பேரிலும் கட்டவிழ்த்து விட்டனர் இது பொதுவாக அசத்தியத்தில் இருப்போர் கடைப்பிடிக்கும் வழிமுறைகளில் ஒன்றுதான்.

நானும் அலியும் அல்லாஹ்வுடைய இரு பிரகாசங்களாக இருந்தோம். பின்னர் அவன் எம்மை ஆதமின் முதுகெலும்பில் (பாதுகாப்பாக) வைப்புச் செய்தான். பின்னர் எம்மை ஒரு முதுகந்தண்டில் இருந்து மற்றொரு முதுகந்தண்டுக்கு மாற்றிக் கொண்டே இருந்தான். இவ்வாறு அப்துல் முத்தலிபின் முதுகந்தண்டுவரை வந்து சேர்ந்தோம். பின்னர் அந்த அகிலங்களின் இரட்சகனின் ஒளியானது ஹஸன், ஹு ஸைன் ஆகிய இருவருக்கும் வந்து சேர்ந்தது. அலியின் மூலம்தான் அறிவு பங்கிடப்படுகின்றது. அவர் ஞானத்தின் வாசலாகும். நான்கு கலீபாக்களுக்குக் கூட அவரது அறிவில் இருந்ததான் கிடைத்துள்ளது என்ற கருத்தில் உள்ள பொய்யைக் கூறி அலி (ரழி) அவர்களின் சிறப்பைக் கூறுகின்றனர்.

இது இட்டுக்கட்டப்பட்ட செய்தியாகும். இருந்தாலும் காணும் பொருள் யாவும் கடவுளே, எல்லாம் அவனே எனக் கூறுவோரும் இப்படித்தான் கூறுகின்றனர் என்பதை அறிவீர்களா?

## குர்ஆனையும், ஹதீஸையும் தமது கொள்கைக்கு இசைவாக வளைத்தல்.

நபித்தோழர்கள் ஒன்று திரட்டிய குர்ஆனையும், ஹதீஸையும் ஏற்றுக் கொள்ளாத இந்த வழிகேடர்கள் தமது கொள்கைக்கு உகந்ததாகத் தெரிபவைகளை ஆதாரமாகக் கூறி மக்களை வழி கெடுப்பதில் மும்முரமாக ஈடுபடுவர்.

உதாரணமாக நபி (ρ) அவர்கள் ஹஜ்ஜில் இருந்து திரும்பும் போது மக்காவிற்கும், மதீனாவிற்கும் இடையில் உள்ள **'கதீர் ஹும்'** எனும் இடத்தில் வைத்து மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள்.

உண்மையில் அந்தச் செய்தியில் ஆட்சிபற்றிய ஒருதுரும்பும் கிடையாது. மாற்றமாக எனது மரணத்தின் பின்னால் எனது குடும்பத்தார் விஷயத்தில் நீங்கள் அல்லாஹ்வைப் பயந்து நடந்து கொள்ளுங்கள். அவர்களைக் கேவலப்படுத்திட வேண்டாம், அவர்களை கண்ணியமாக நடத்துங்கள் என்ற பொருளே அதில் உள்ளடங்கி இருக்கின்றது. அந்த ஹதீஸைத் தெளிவாகப் படியுங்கள். பல உண்மைகள் தெரியவரும். அதில் அல்லாஹ்வைப்போற்றிப் புகழ்ந்த பின்னால்,

أَمَّا بَعْدُ أَلَا أَيُّهَا النَّاسُ فَإِنَّمَا أَنَا بَشَرٌ يُوشِكُ أَنْ يَأْتِيَ رَسُولُ رَبِّي فَأُجِيبَ وَأَنَا تَارِكٌ فِيكُمْ ثَقَلَيْنِ أَوَّلُهُمَا كِتَابُ اللَّهِ فِيهِ الْهُدَى وَالنُّورُ فَخُذُوا بِكِتَابِ اللَّهِ وَاسْتَمْسِكُوا بِهِ فَحَثَّ عَلَى كِتَابِ اللَّهِ وَرَغَّبَ فِيهِ ثُمَّ قَالَ وَأَهْلُ بَيْتِي أُذَكِّرُكُمْ اللَّهَ فِي أَهْلِ بَيْتِي أُذَكِّرُكُمْ اللَّهَ فِي أَهْلِ بَيْتِي أُذَكِّرُكُمْ اللَّهَ فِي أَهْلِ بَيْتِي فَقَالَ لَهُ حُصَيْنٌ وَمَنْ أَهْلُ بَيْتِهِ يَا زَيْدُ أَلَيْسَ نِسَاؤُهُ مِنْ أَهْلِ بَيْتِهِ قَالَ نِسَاؤُهُ مِنْ أَهْلِ بَيْتِهِ ....(صحيح مسلم)

மனிதர்களே! நான் ஒரு மனிதன். எனது இரட்சகனின் தூதர் (மலக்குல்மவ்த்) மிக விரைவாக வந்து, நான் பதில் அளிக்க நேரலாம். நிச்சயமாக நான் உங்களிடம்

வலிமையான இரண்டை உங்களிடம் விட்டுச் செல்கின்றேன். அவ்விரண்டில் ஒன்று அல்லாஹ்வின் வேதமாகும். அதில் நேர்வழியும், பிரசகாசமும் இருக்கின்றது. எனவே அல்லாஹ்வின் வேதத்தைப்பற்றிக் கொள்ளுங்கள். அதை எடுத்துக் கொள்ளுங்கள். எனக் கூறி அல்லாஹ்வின் வேதத்தின் மீது ஆர்வமூட்டினார்கள். பின்னர் எனது குடும்பத்தார் விஷயத்திலும் அல்லாஹ்வை நினைவுபடுத்துகின்றேன். எனது குடும்பத்தார் விஷயத்திலும் அல்லாஹ்வை நினைவுபடுத்துகின்றேன். எனது குடும்பத்தார் விஷயத்திலும் அல்லாஹ்வை நினைவுபடுத்துகின்றேன். அதற்கு ஹுஸைன் (ரழி) அவர்கள் ஹதீஸை அறிவித்த ஸைத் பின் அர்கம் (ரழி) அவர்களிடம் அவர்களது மனைவியர் அவர்களின் அஹ்லுல் பைத்கள்தானே எனக் கேட்க, அவர்களது மனைவியர் அஹ்லுல்பைத்கள்தாம் என்று பதில் கூறினார்கள். (முஸ்லிம்)

இதை உறுதி செய்ய அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் பெயரில் முனாபிக்குகள் அவதூறு பரப்பிய போது

يَا مَعْشَرَ الْمُسْلِمِينَ مَنْ يَعْذِرُنِي مِنْ رَجُلٍ قَدْ بَلَغَنِي أَذَاهُ فِي أَهْلِ بَيْتِي فَوَاللَّهِ مَا عَلِمْتُ عَلَى أَهْلِي إِلَّا خَيْرًا

(صحيح البخاري)

முஸ்லிம்களே! எனது வீட்டுடையவர் (அஹ்லுல்பைத்) விஷயத்தில் எவனது தொல்லை என்னை அடைந்து விட்டதோ அவனை நான மன்னிப்பது எப்படி! அல்லாஹ்வின் சத்தியமாக எனது குடும்பத்தினர் விஷயத்தில் நான் நல்லதையே அறிவேன். (புகாரி) என இடம் பெறும் நபி மொழியில் அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களால் அஹ்லுல் பைத் எனப்பதியப்பட்டுள்ளதைப் பார்க்கின்றோம்.

எது எப்படியாக இருந்தாலும் அஹ்லுல் பைத்களைக் கண்ணியப்படுத்த வேண்டும் என்ற அடிப்படை விஷயத்தைப் புரிந்து கொண்டது போல, ஸஹாபாக்களின் இந்த அறிவிப்பை ஏற்றுக் கொள்கின்ற ஷீஆக்கள் அந்தக்காலத்தில் ஸஹாபாக்களால் தொகுப்பட்ட குர்ஆனை அல்லவா பின்பற்ற வேண்டும். அதில் முரண்படுவது என்?

மேலே உள்ள அந்த ஹதீஸில் நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் அலி (ரழி) அவர்களுக்குத்தான் ஆட்சி, அதிகாரம் கிடைக்க வேண்டும் என்பதாக எதன் அடிப்படையில் புரிந்தார்களே தெரியவில்லை. இந்தப் புரளியை முஸ்லிம் உலகில் உண்டு பண்ணிய இந்தக் கூட்டத்துடன் **அஹ்லுல் பைத் பேரில்** முளைத்த கப்று வணங்கிகளும், மௌலானாக்களும் இணைந்து கொள்வது ஆச்சரியமான ஒன்று அல்ல.

இவர்களின் வாதம் சரியானதுதான் என்பதை வாதத்திற்கு ஏற்றுக் கொண்டாலும் இப்படியானதோர் அனுகுமுறையினை **அபூதாலிப்** விஷயத்திலும், நபி (ஸல்) அவர்களின் பெற்றோர் விஷயத்திலும் ஷீஆக்களிடமோ, அவர்களின் கூஜா தூக்கிகளிடமோ காண முடியாதிருக்கின்றதே. இதற்கு மாற்றமான அனுமுறையைத்தான் காண முடிகின்றதே என்பதைப்பற்றி சிந்தியுங்கள்.

நபி (ρ) அவர்களின் சிறிய தந்தையான **அபூ தாலிபை** ஷீஆக்கள் முஸ்லிம் என வாதிடுகின்றனர். அதே போன்று, நபி (ஸல்) அவர்கள் பெற்றோர்கள், இறைத்தூதர்கள் வராத **-பத்ரா-** என்ற காலப் பகுதியில் மரணித்ததால் அவர்களையும் சுவர்க்கவாதிகள் என்கின்றனர்.

கப்று வணங்கிகளில் சிலர் ஷீஆக்களைப் போன்று அபூதாலிபை சுவர்க்கவாசியாக சித்திரிக்கின்றனர். நபி (ஸல்) அவர்களின் பெற்றொர்கள் இருவரும் கலிமாக் கூறாது மரணித்தார்கள், பின்னர் அவர்கள் உயிர் கொடுக்கப்பட்டு, மண்ணறையில் இருந்து எழுப்பப்பட்டார்கள், பின்பு மலக்குகளால் கலிமாச் சொல்லுமாறு பணிக்கப்பட்டார்கள். கலிமாவை மொழிந்ததும் மீண்டும் கப்ரில் போய் படுக்கும்படி கூறப்பட்டார்கள் என்று இன்றும் அரபு மத்ரஸாக்களில் போதிக்கப்படும் **நூறுள்ளலாம்** என்ற நூலில் எழுதப்பட்டுள்ளதைப் போதிக்கின்றார்கள்.

இவர்களின் நம்பிக்கைப்படி கப்ரில் இருந்து அவர்கள் இருவரும் எழுப்பப்பட்டு, கலிமாக் கூறும்படி கூறியதில் இருந்து அவ்விருவரும் காபிர்களாகவே மரணித்துள்ளார்கள் என்பதைக் கொஞ்சம் கூட சிந்திக்காது கதை அளந்து வைத்துள்ளார்கள்.

## ஷீஆக்களின் மார்க்க விளக்கங்கள்

### அல்குர்ஆன் வசனங்களுக்கு தவறான விளக்கம்.

ஷீஆக்கள் அல்குர்ஆனுக்கு பல இடங்களில் தவறான விளக்கம் செய்திருக்கின்றனர் என்பதை அவர்களின் விளக்கக்குறிப்புக்களை பற்றிப்படிக்கின்ற போது அறியலாம்.

அஹ்லுஸ்ஸு ன்னாக்களாகிய நாம் ஆதாரமாகக் கொள்கின்ற எந்த தப்ஸீரையும் அவர்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். அவற்றை அவர்கள் நம்புவதும் இல்லை. அவர்களின் அறிஞர் கும்மி என்பவர் எழுதிய தப்ஸீரையும், அவர்களின் வேறு சில அறிஞர்களின் தப்ஸீர்களையுமே ஆதாரமாகக் கொண்டு தமது விளக்கங்களைப் பெறுகின்றனர்.

கும்மி என்பவரின் குர்ஆன் விரிவுரையில் பல குளறுபடிகள் உண்டு என்பதை அஹ்லுஸ்ஸு ன்னா அறிஞர்கள் அடையாளம் காட்டியுள்ளனர். அவற்றில சிலவற்றை இங்கு கவனிப்போம்.

- அல்லாஹ் பசுவை அறுக்கும்படி கூறினான் என்பதை விளக்குகின்ற போது அந்தப்பசு என்பது ஆயிஷா (ரழி) அவர்களைத்தான் குறிக்கும் என விளக்கியுள்ளார்.

- பிர்அவ்ன், ஹாமான் என இடம் பெறும் வசனம் அபூபக்கர் ஸித்தீக், உமர்பாரூக் (ரழி) அவர்களையே குறிக்கின்றது.

- அந்நிஸா:3 வது வசனத்திற்கு ஒன்பதை பேர் வரை திருமணம் செய்து கொள்ளலாம் என்று அர்த்தம் கொள்கின்றனர். அதே வேளை அவர்களின் இமாம்களில் ஒருவரான **ஸைனுல் ஆபிதீன்** (ரஹ்) அவர்கள் அதை மறுத்துள்ளார்கள். இதை இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் பத்ஹு ல்பாரியில் சுட்டிக்காட்டி உள்ளார்கள்.

- எனது தந்தை எனக்கு உத்தரவிடுகின்ற வரை நான் இந்த இடத்திலே நின்று கொண்டிருப்பேன் (யூசஃப்: வச: 80) என யூசுப் நபியின் சகோதரர்களில் ஒருவர் கூறிய வார்த்தைக்கு அல்லாஹ்விடம் உயர்த்தப்பட்டிருக்கின்ற அலி (ரழி) அவர்கள் மீண்டும் இந்த பூமிக்கு திரும்பி வருவதை என நம்புதல் என விளக்கம் தருகின்றனர். (ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்).

- நீங்கள் இருவரும் தவ்பா செய்து மீண்டால் உங்கள் இருவரின் இதயமும் பொருந்திக் கொள்ளும் (சகித்துக் கொள்ளும்) (அத்தஹ்ரீம். வசனம் 4) என்ற வசனத்தை மஜ்லஸி என்பவர் விளக்குகின்ற போது 'உங்கள் இதயம் வழிகெட்டுவிட்டது' என விளக்கியதோடு, **'நிராகரித்தவர்களே! இன்றை தினம் மன்னிப்புக் கோராதீர்கள்.'** என்ற அதே அத்தியாத்தில் இடம் பெறும் ஏழாவது வசனத்தை ஆதாரமாகக் காட்டி ஆயிஷா, ஹப்ஸா (ரழி) ஆகிய இருவரும் நிராகரித்து விட்டனர் எனக் கூறுகின்றார்.

- பெண்களை வாடைகைக்கு அமர்த்துவது போன்ற முத்ஆ திருமண முறை ஷீஆக்களின் நடைமுறையில் இன்றும் இருக்கின்றது.

- உழுவின் இறுதியில் இரு கரண்டைக்கால்களையும் கழுவ வேண்டியதில்லை. தண்ணீரால் தடவினால் (மஸ்ஹ் செய்தால்) போதுமானது.

- அதான் (பாங்கு) கூறுகின்ற போது **அஷ்ஹது அன்ன முஹம்மதன் ரசூலுல்லாஹ்** எனக் கூறிய பின், **அஷ்ஹது அன்ன அலிய்யன் வலியுல்லாஹ்** (அலி ஆட்சிக்கு தகுதியானவர் என சாட்சி சொல்கின்றேன்) என அதிகப்படுத்திக் கூறுதல்.

- நோன்பு துறக்கின்ற போது நட்சத்திரங்கள் வானில் தோன்ற ஆரம்பிக்கின்ற போது யூதர்களைப் போன்று துறத்தல்.

- சுபஹ் தொழுகையில் இரு பெரும் கலீபாக்களைச் சபித்து பிரார்த்னை செய்தல். இதற்கு **'துஆவு ஸனமை குரைஷ்'** என்ற பெயர். இதனை குமைனி அதிமதிகம் கடைப்பிடிப்பவராக இருந்தார்.

- ஐவேளைத் தொழுகைகளையும் மூன்று நேரமாக்கி சேர்த்துத் தொழுதல். ளுஹர், அஸர் ஒரு வேளை, மக்ரிப், இஷா இரண்டாவது வேளை, சுபஹ் மூன்றாவது வேளை இவ்வாறாக.

- தமது இமாம்களால் கற்றுத்தரப்பட்ட துஆக்கள், திக்ர்களை மாத்திரம் ஓதிக் கொள்ளல். அவற்றில் அக்கிரமக்காரர்களைத் தண்டித்துவிடு என ஸஹாபாக்களை மறைமுகமாகச் சாடி பிரார்த்தித்தல்.

## வரலாற்று ஒழியில் ஷீயாக்கள் இழைத்த துரோகங்கள்.

ஷீஆக்கள் என்போர் இஸ்லாமிய உம்மத்தின் துரோகிகள் என்பதற்கு நூற்றுக்கணக்கான சான்றுகள் இருக்கின்றன. அவற்றில் மிக முக்கியமானதை மாத்திரம் இங்கு பதிய வைக்கின்றோம்.

∃ ஹஸன் (ரழி) அவர்கள் பற்றி முன்னறிவிப்புச் செய்த போது 'எனது இந்தப்பேரன் இரு முஸ்லிம் அணிகளுக்கிடையில் எதிர்காலத்தில் சமரசம் செய்து வைப்பான்' என கூறினார்கள். இவ்வாறு முன்னறிவிப்புச் செய்ததை ஹி. 41ம் ஆண்டு முஆவியா (ரழி) அவர்களுக்கு ஆட்சியைக் கைளித்ததன் மூலம் ஹஸன் (ரழி) அவர்கள் உண்மைப்படுத்தினார்கள்.

இது பற்றிக் குறிப்பிடும் 'ஷீஆக்கள்' நம்பிக்கையாளர்களை (ஷீஆக்களை) இழிவுபடுத்தியவர் எனக் கூறி தமது தொடைகளில் கூரிய கத்தியினால் குத்திக் கொள்கின்றனர்.

∃ கூபாவிற்கு ஹு ஸைன் (ரழி) அவர்களை வருமாறு கடிதங்கள் மூலம் கோரிக்கை விடுத்த ஷீஆக்களே அவர்கள் அங்கு சென்றதும் அவரைக் கைவிட்டனர், அவருக்கு எதிராக புரட்சி செய்தனர். பின்னர் அவரைக் கொலை செய்தனர். இவர்களின் துரோகத்தை அவதானித்த ஹு ஸைன் (ரழி) அவர்கள் இவர்களுக்கு எதிராக பிர்த்தனை செய்தார்கள்.

∃ கலீபா ஹாரூன் ரஷீத் அவர்களின் ஆட்சி காலத்தில் அலி பின் யக்தீன் என்ற ஷீஆ வாதி அஹ்லுஸ்ஸு ன்னா மக்கள் தங்கி இருந்த காவல் நிலையத்தின் முகட்டை அவர்கள் மீது உடைத்து அவர்கள் தலைமீது விழும்படி செய்ததில் அங்கிருந்தவர்களில் 500 பேர் கொலை மரணித்தனர்.

∃ பாதிமிய்யாக்கள் என்ற பொய்யான பேரில் நடந்த ஷீஆக்களின் ஆட்சியில் சுன்னாவை அழித்து, ஷீஆக் கொள்கையை பரப்புவதற்காக அரங்கேற்றப்பட்ட துரோகங்கள்தான் எத்தனை!

∃ புனித மக்கா மற்றும் மதீனாவின் இரு பள்ளிகளையும் தமது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வர வேண்டுமென்ற நப்பாஸை வழி கெட்ட ஷீஆக்களிடம் வரலாறு நெடுகிலும் காணப்படுகின்ற ஆதங்கம்.

∃ இவர்களில் கராமிதாக்கள் என்ற ஒரு பிரவினர் உள்ளனர். எல்லாம் ஒரு குட்டையில் ஊறிய மட்டைதான். ஹிஜ்ரி 317 காலப் பகுதியில் புனித மக்கா ஹரத்தில் புகுந்த இந்தக்கும்பல் ஹாஜிகளையும், உலமாக்கள் பலரையும் கொலை செய்து, பல பெண்களைக் கற்பழித்துடன், இரத்தக் கறைபடிந்த மாபெரும் வரலாற்றை ஹரத்தின் வளாகத்தில் தோற்றுவித்தது. அதுமாத்திரமின்றி ஹஜருல் அஸ்வத் கல்லையும் கழற்றிக் கொண்டு சென்று அதை தம்முடன் 22 வருடங்கள் வைத்திருந்து மீண்டும் அதை ஹி 339ல் மீட்டியது.

∃ இன்றைய ஷீஆக்களும் இதற்கு விதிலக்கானவர்கள் அல்லர் என்பதை குமைனியின் ஆட்சியின் போது 1983 காலப்பகுதியில் ஹரத்தில் ஜனாஸாவை சுமந்து செல்பவர்களைப் போன்று ஆயுதங்களுடள் நுழைந்து அரங்கேற்றிய கொடிய செயலையும், 20- 02- 2009 காலப்பகுதியில் பகீயில் நுழைந்து புரிந்து அட்டகாசங்களையும், 2009 பெப்ரவரி லண்டனில் மாபெரும் ஊர்வலம் ஒன்றை ஏற்பாடு செய்து புனித மக்காவையும், மதீனாவையும் ஐக்கிய நாடுகள் சபையின் கீழ் கொண்டுவருமாறு கோஷமிட்டதையும் பார்த்தால் ஸஹாபாக்கள் மீதுள்ள காழ்ப் புணர்ச்சியையும், இரு ஹரத்தின் மீதுள்ள மேலாண்மை ஆசையையும் புரிந்து கொள்ளலாம்.

∃ அப்பாஸியர் ஆட்சியில் முஜய்யிதுத்தீன் அபீதாலிக் முஹம்மத் பின் அஹ்மத் அல்கமி என்ற ஷீயி ஒருவன் தாத்தாரியப்படை பக்தாத் தலை நகரில் நுழைந்து முஸ்லிம்களின் இரத்த ஆறு ஓடுவதற்கு செய்தமை. **அந்தத் துரோகம் பற்றி இமாம் இப்னு கஸீர் அவர்கள் குறிப்பிடுவதைக் கொஞ்சம் கேளுங்கள்.**

அப்பாஸிய கலீபா அல்முஃதஸிம் பில்லாஹ் என்ற அஹ்லுஸ்ஸு ன்னா ஆட்சியாளரின் பிரதம மந்திரியாக ஷீஆ மத நம்பிக்கையில் ஊறிப்போன இப்னுல் அல்கமி என்பவன கலீபாவின் பிரதம அமைச்சராக இருந்தான். இருந்தான். அவனும், அவனது குடும்பமும் பக்தாதில் குர்ஹ் நகரத்தில் இருந்தனர். அஹ்லுஸு ன்னாக்கள் இவர்களுடன் கடுமையாக நடந்து கொண்டாலும் கலீபா தம்முடன் பாசமாக இருப்பதாகக் கூறிக் கொண்டனர். ஹிஜ்ரி 656ல் ஷீஆக்களுக்கும், சுன்னிகளுக்கும் இடையில் கடுமையான போர் வெடித்தது.

இதனால் ஷீஆக்களுக்கு சேதங்கள் ஏற்பட்டன. இதைப்பழி தீர்க்க நினைத்த அல்கமி அர்பீல் நகர அரசனுடன் திரைமறைவில் கள்ளத்தொடர்பை உண்டாக்கிக் கொண்டான். இவன் தாத்தாரியப்படைகள் மூலம் பக்தாதின் ஆட்சியைக் கைப்பற்ற முழுமையாக உதவினான்.

**இப்னுல்அல்கமி** அஹ்லுஸ்ஸு ன்னாப்படையிலுள்ள தினந்தோறும் ஆயிரக்கணக்கான முஸ்லிம்களை பதவி நீக்கம் செய்தான். ஒரு இலட்சம் படை வீரர்களில் இறுதியாக பத்தாயிரம் பேரே மிஞ்சினர். தாத்தாரியப்படைகளுக்கு இது பற்றி அறிவித்தான். அவர்கள் பக்தாதில் நுழைந்து அந்த நகரை துவம்சம் செய்து ஆலிம்களைக் கொலை செய்து, பெண்களைக்கற்பழித்தனர். பல்லாயிரக்கணக்கான இஸ்லாமிய நூல்கள் எரிக்கப்பட்டன. பல இலட்சம் உயிர்கள் பறிக்கப்பட்டன, அவைகள் கண்டம்துண்டமாக வெட்டப்பட்டு, தஜ்லா நதியில் கரைத்து நீருடன் கலக்கப்பட்டது. இரத்த ஆறு ஓடியது.

**இமாம் இப்னு கஸீர் அவர்கள் மேலும் குறிப்பிடுகின்ற போது** ஆண்கள், பெண்கள், வாலிபர்கள், வயோதிபர்கள், சிறுவர்கள் இயலாதவர்கள் என அனைவரும் கொலை செய்யப்பட்டதாகக் குறிப்பிட்டுள்ளார்கள். பள்ளிவாயில்கள், ரவாபித் எனப்படும் பொதுமக்கள் தங்குமிடங்கள் அனைத்தும் தீக்கறையாக்கப்பட்டன, யூதர்களும், கிரிஸ்தவர்களும், மற்றும் நாட்டில் சிறுபான்மை இனத்தவரும் (திம்மிக்கள்) பாதுகாக்கப்பட்டனர். அல்கமி இடம் தஞ்சமடைந்தோரின் சொத்துக்களை பறி முதல் செய்தபின்பே அவர்களுக்கு பாதுகாப்பு வழங்கினான்.

ஒரு முஹர்ரம் மாதத்தின் இறுதியில் இருந்து தொடராக நாட்பது நாட்கள் நடை பெற்ற இந்த இன ஒழிப்பு நடவடிக்கையில் மாத்திரம் **எட்டு இலட்சம் பேர்** மாண்டதாக சில அறிஞர்களும், பல்லாயிரக்கணக்கானவர்கள் என மற்றும் சிலரும் குறிப்பிடுகின்றனர்.

இந்தப் போரில் கலீபா முஸ்த∴ஸிமுடன், அவரது மூத்த மகனும், இரண்டாவது மகனும் கொல்லப்பட்டனர். இளையவர் சிறைபிடிக்கப்பட்டார். அவருடன் பாதிமா, கதீஜா, மர்யம் என்ற அவரது மூன்று உடன் பிறந்த சகோதரிகளும் சிறைபிடிக்கப்பட்டனர்.

இஸ்லாமிய கிலாபத்தின் போது மு∴ப்தி அபுல் ∴பரஜ் இமாம் இப்னுல் ஜவ்ஸி (ரஹ்) அவர்களும், அவர்களின் ஆண்மக்களும் கொல்லப்பட்டது இந்நிகழ்வில்தான்.

இஸ்லாமிய வரலாற்றில் கரைறபடிந்த இந்தக் கொடூரத்தை அரங்கேற்றிய ஷீஆமதவாதியான **அல்கமியின்** என்பவனின் நடவடிக்கையால் பல நாட்கள் பள்ளிவாயில்கள் பாழடைந்து கிடந்தன. குர்ஆனை மனனம் செய்தோர், ஆலிம்கள் என பல வர்க்கத்தினரும் திட்டமிட்டு அழிக்கப்பட்டதை நீங்கள் மோடி நடத்திய குஜ்ராத் கலவரம் என்று நினைக்காதீர்கள். ஈரானிய ஷீஆக்களின் வாரிசுகளில் ஒருவன் அரங்கேற்றிய அட்டகாசம்தான் இது. **(அல்பிதயா வன்னிஹாயா. பாகம்13- பக்கம். 215)**

இப்படியான குரூர நிகழ்வுகள் பற்றி இன்றை ஷீஆக்கள் அறியாதவர்களா? இவர்கள்தான் இன்றும் ஈராக்கில் ஆயிரக்கணக்கான அஹ்லுஸ்ஸு ன்னா (சன்னி) முஸ்லிம்களை தினந்தோறும் கொன்று குவிக்கின்றனர்.

யூதர்களை விட மோசமான சுபாவமுள்ள இந்தக் கும்பல் பலஸ்தீன முஸ்லிம்கள் மீது கவலைப்படுகின்ற அதே வேளை அண்டை நாடான ஈராக் மக்கள் மீது ஏன் கவலைப்படுவதில்லை. இது வெறும் கண்துடைப்புத்தான். வேறு ஒன்றும் கிடையாது.

இந்தப் பரிசுத்தவான்கள்தான் அறிஞர் முஹம்மத் பின் அப்தில் வஹ்ஹாப் (ரஹ்) அவர்கள் சவூத் மன்னருடன் இணைந்து பல்லாயிரம் பேரைக் கொலை செய்துள்ளார் இது நியாயமா? என்று கேட்டு ஊழையிடுகின்றனர்.

இந்த நெருப்பு வணங்கிக் கும்பல் ஈரானிய மன்னர் ஷாவை வீழ்த்துவதற்காகவும், ஷீஆ இசத்தை நிலைநாட்டவும் செய்திட்ட கொலைகள் எத்துணை! ஈரானில் இன்றும் கொலை செய்யப்படும் சன்னிகள் எத்தைனை! எத்தனை!

∃ ஹோலாகோ **ஹலப்** நகரத்தில் நுழைந்த போது அவனுக்கு சரணடையுமாறும், அவனுக்கு எதிராக போராடாதிருக்குமாறும் சுன்னி முஸ்லிம்களிடம் வேண்டிக் கொண்டதோடு அவன் இவர்களைக் கொன்று குவிக்க இரகசியமாக இருந்து செயல்பட்டமை.

∃ நஸீருத்தீன் அத்தூஸி என்பவன் அஹ்லுஸ்ஸு ன்னா முஸ்லிம்களை கொலை செய்தும், அவர்களின் சொத்துக்களை சூறையாடியும், அவர்களின் அறிவியல் பொக்கிஷங்கள் அழித்தும் மேற்கொண்ட பல மோசடிகள்.

∃ வீர மகன் ஸலாஹு த்தீன் அல்அய்யூபி (ரஹ்) அவர்களைக் கொலை செய்ய முயன்றமை.

∃ ஸல்ஜோகியர் (ஸலாஜிகா) என்ற ஷீஆப்பிரிவினர் சுன்னா ஆட்சிக்கு எதிராக சிலுவைப் போராளிகளுடன் இணைந்து ஒத்துழைப்புக் கொடுத்தமை.

**∃ ஸபவிய்யாக்கள் எனப்படும் ஷீஆக்களில் ஒருபிரிவினர் உஸ்மானியப் பேரரசுக்கு எதிராக கிருஸ்தவ உலகுடன் கைகோர்த்து இஸ்லாமிய கிலாபத்தை வீழ்த்திடச் செய்த சதிகள்.**

∃ லெபனானில் குறிப்பாக தென் லெபனானில் கிரிஸ்தவர்களுடன் கைகோர்த்து அஹ்லுஸ்ஸு ன்னாவை அழித்தொழித்தல். இதனை இன்றும் ஹிஸ்புல்லாக்கள் செய்து வருகின்றனர்.

∃ **'ஷீஆ இஸ்னை அஷரிய்யா'** (பன்னிரண்டு இமாம்கள் வழிபாட்டுடையவர்கள்) என்ற வழிகெட்ட ஷீஆக் கும்பல் இன்று வளைகுடாவில் குறிப்பாக ஈராக்கில் அமெரிக்கர்களுடன் செய்து கொண்ட ரகசிய ஒப்பந்தங்கள். கைச்சாத்துகள் சன்னி முஸ்லிம்களின் ஆயிரக்கணக்கான உயிர்கள் பறிக்கப்படக்காரணமானது. இன்றும் உயிருமன் வாழ்கின்ற ஷீஆ மதப்பெரியவர்களான அலி ஷீஸ்தானி, அப்துல் அஸீஸ் அல்ஹகீம் போன்றோரின் திருகுதாளங்களும், மோசடிகளும் இதற்கு வழிவகுத்துள்ளன.

∃ 2009 -02-15 ம் காலப்பகுதிகளில் மதீனா பகீயில் அடங்கப்பட்டிருக்கும் கண்ணியமிக்க ஸஹாபாக்களின் மண்ணறைகளையும், உம்முஹாத்துல் முஃமினீன்களின் மண்ணறைகளையும் தோண்டி அசிங்கப்படுத்த முயன்ற ஷீஆ வழிகேடர்களின் சூழ்ச்சி அல்லாஹ்வின் பெரும் கிருபையினால் மதீனா முஸ்லிம்களால் முறியடிக்கப்பட்டது. வழிகெட்ட சத்திராதிகள் சட்டத்தின் முன் நிறுத்தப்பட்டார்கள். (அல்ஹம்துலில்லாஹ்).

## ஷீஆ மதப் பெரியார்கள்

ஷீஆக்களில் ஆரம்ப கால அறிஞர்கள், நவீன கால அறிஞர்கள் என இருவகையினர் உண்டு. ஆரம்ப கால அறிஞர்கள் எனும் போது ஹிஜ்ரி: 50-ற்குப் பின் ஷீஆ சிந்தனையால் தாக்கம் பெற்றவர்களைக் குறிக்கும். இக்காலப்பகுதியில் இப்னு ஸபஃவுடைய சிந்தனைகள் பாரியளவு தாக்கம் செலுத்த வாய்ப்பிருக்கவில்லை என்பதே உண்மை.

ஸஹாபாக்களை மதம்மாறியோராகவும், அக்கிரமக்காரர்களாகவும் சித்தரித்து, திட்டித் தீர்ப்பவர்கள் என்ற ஒரு பிரிவும், அவ்வாறு விமர்சனம் செய்யாது அலி (ரழி) அவர்களுக்கு ஆட்சியைக் கொடுத்திருக்கலாம். அவர்களுக்குத் தகுதி இருந்தது என்று மாத்திரம் கூறுபவர்கள் என்ற மற்றொரு பிரிவினரும் உண்டு.

ஷீஆக்களின் மதத்தை வழி நடத்தியவர்கள் என்ற ஆளுமைகளில் அல்கும்மி, அல்குலனி, அல்மஜ்லிஸி, அல்ஹஜர்ருல் ஆமிலி, அத்தூஸி, அத்தபர்ஸி, நுஃமான் அல்ஜஸாயிரி போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களால் தொகுக்கப்பட் நூல்கள் ஷீஆக்களின் அழுகிப்போன கொள்கையை உறுதி செய்யக் கூடியவையாகவும், நாம் எடுத்துக் கூறுபவற்றை உண்மைப்படுத்தக் கூடியவையாகவும் இருக்கின்றன. மாதரிக்காக உங்களுக்கு சில தகவல்கள் அவர்களின் மூல நூல்களில் இருந்தே தரப்பட்டுள்ளது.

இவர்கள் அனைவரும் இஸ்லாமிய உம்மத்தல் ஏற்றுக் கொள்ளப்பட்ட அல்குர்ஆனையும், ஹதீஸ் நூல்களையும் குறைகண்டவர்கள். இவர்களே ஷீஆக் கொள்கையை வகுத்தவர்கள், இவர்களின் நூல்ளை ஆதாரமாகக் கொண்டே செய்திகளைத் தந்துள்ளோம்.

உண்மையில் இஸ்லாமிய மார்க்கத்தில் நுழைந்த மிகக் கெட்ட ஒரு பிரிவு என்று இவர்களை வர்னிக்க முடியும். இஸ்லாத்தில் தோன்றிய பிரிவுகள் தமெக்கென ஒரு குர்ஆனையோ, ஹதீஸ்களையோ இயற்றிக் கொள்ளவில்லை. அவ்விரண்டையும் தவறாகப் புரிந்தே அதிகமதிகம் வழிகெட்டிருக்கின்றன. ஆனால் இவர்களின் நிலை அவ்வாறல்ல இது பற்றி நீங்கள் வரும் தொடர்களில் விரிவாகக் காணலாம்.

ஆரம்பகால ஷீஆ அறிஞர்கள் ஷீஆ சிந்தனை உச்ச நிலையில் காணப்பட்ட ஹி: 200ற்குப் பின் தோன்றியவர்களின் கருத்துக்களை பிரதிபலிப்பவர்களாக நமது காலத்தில் வாழ்ந்து மரணித்தவர்களையும், வாழ்பவர்களையும் எடுத்துக் கொள்ளலாம். நவீன ஷீஆக்களிடம் வீரப்புருஷர்களாக மதிக்கப்படும் சிலரது கொள்கைகள் இங்கு தரப்படுகின்றது.

**குமைனி:** 1980 காலப்பகுதிகளில் முஸ்லிம் உலகில் விமர்சன நோக்குடனும். புழ்ந்தும், இகழ்ந்தும் பேசப்பட்டவர்களில் குமைனியும் ஒருவர். ஈரானில் புரட்சி செய்து, மன்னர் ஷாவின் ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்து ஈரானில் ஷீஆ இஸத்தைக் காப்பாத்தியவர். மௌலானா மௌதூதி (ரஹ்) போன்ற அறிஞர்கள் கூட அந்தப்புரட்சியை இஸ்லாமியப் புரட்சி என வர்ணித்தார், பின்னர் வாபஸ் பெற்றதாகக் கூறப்படுகின்ற பெரும் புரட்சி.

இந்த குமைனி ஷீஆக்களின் மஹ்தி என வர்ணிக்கப்பட்டவர். தனது தலைப்பாகையினால் தரீக்காவாதிகளிடம் இடம்பிடித்தவர், சூபிகளிடம் சர்வதேச தங்கள், வாப்பாநாயகம் போன்றவர்களின் நிலையில் வைத்து மதிக்கப்ட்டவர். அபூஜஹ்ல் போன்ற நீண்ட தாடியால் வெளிவேஷத்தை விரும்பும் பலரை வசீகரித்துக் கொண்டவர்.

மார்க்க அறிவற்ற படித்த பாமரர்களிடம் இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் புரட்சிவாதி என்ற பெயர் பெற்றவர். மறைமுகாக யூதர்களுக்கு உதவி செய்து கொண்டு சுன்னிகளைக் கருவறுத்தவர். தீய ஷீஆக் கொள்கை உடையவரான இவர் இஸ்ரவேலுக்கு எதிரான வெளிவேஷக் கொள்கையினால் முஸ்லிம் உலக வாலிபர்களின் கவனத்தை தன்பக்கம் ஈர்க்க முற்பட்டவர்.

ஈரானியப் புரட்சியைப் பயன்படுத்தி இஸ்லாமிய நாடுகள் இஸ்ரவேலினதும், அமெரிக்காவினதும் கைபொம்மைகள் என வர்ணித்தவர். மேலும் இரத்தம் சிந்துவது, போர் செய்வது, அக்கரிமம் புரிவது போன்ற செயல்கள் ஹராமாக்கப்பட்ட மக்கா ஹரத்தில் ஆயுதம் தாங்கி அதன் புனிதத்துவத்தைக் கெடுத்தவர்.

ஸஹாபாக்களை சத்திராதிகள், துரோகிகள், மதம்மாறிய முர்தத்துக்கள் என வாய்கூசாது வர்ணித்தவர். உம்முஹாத்துல் முஃமினீன்களை தகாத வார்த்தைகள் கொண்டு தூசித்தவர். அஹ்லுஸ்ஸு ன்னாக்களிலுள்ள இமாம்களையும், அறிஞர்களையும் காபிர்கள் என வர்ணித்தவர். முஸ்லிம்களை நஜீஸ் அசுத்தம் என அறிமுகப்படுத்தியவர். இஸ்லாமிய சட்டங்களுங்கது முரணான பல சட்டங்களை தனது நூல்களில் பதிவு செய்தவர். ஷீஆக்களின் நம்பிக்கைப்படி பல நூறு ஆண்டுகள் மறைந்து வாழும் பல நூறு அண்டுகள் வாழ்ந்து கொண்டிருப்பதாக அவர்கள் நம்பிக்கை கொள்ளும் மஹ்திக் கொள்கையைச் சரிகண்டவர்.

இவர் இஸ்லாத்திற்கு மாற்றமாக வெளியிட்டுள்ள கருத்துக்கள் சிலவற்றை இங்கு கவனிப்போம்.

**لقد جاء الأنبياء جميعا من أجل إرساء قواعد العدالة في العالم ، لكنهم لم ينجحوا، حتى النبي محمد (ع) خاتم الأنبياء الذي جاء لإصلاح البشرية، وتنفيذ البشرية، وتربية البشر لم ينجح في ذلك. وأن الشخص الذي سينجح في ذلك ويرسي قواعد العدالة في جميع أنحاء العالم في جميع مراتب إنسانية الإنسان وتقويم الانحرافات هو المهدي المنتظر ....(من خطاب الخميني بمناسبة ذكرى المولد الإمام المهدي في الخامس عشر من شهر شعبان 1400)**

நபிமார்கள் அனைவரும் உலகில் நீதியின் சட்டங்களை நிலைநாட்டவே வந்தனர். ஆனால் அவர்கள் வெற்றிபெறவில்லை. மனித இனத்தை சீரமைத்து, மனிதத்தை பரப்பி, மனிதர்களை சீர் செய்ய வந்த இறுதி நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் கூட இதில் வெற்றி பெறவில்லை. சகலவிதமான மனிதர்கள் மத்தியிலும் நீதியின் சட்டங்களை நிலை நிறுத்தி, கோணல்களை சரி செய்து வெற்றி பெறும் ஒருவர் இருப்பானால் அவர் மஹ்தி மாத்திரமே! என ஹி: 1400 ல் குமைனி இமாம் மஹ்தி பிறந்த தினகொண்டாட்டத்தில் தனது உரையில் தெரிவித்துள்ளார்.

**நபிமார்கள் பற்றிய குமைனியின் இந்த நிலைப்பாட்டை ஷீஆ சிந்தனையில் ஊறித்திழைத்த மிலேனிய வெளியீட்டாளர்கள் கண்டுகொள்வதில்லை. குமைனி கூறுகின்றார்.**

وإن من ضروريات مذهبنا أن لأئمتنا مقاما لا يبلغه ملك مقرب، ولا نبي مرسل ( الحكومة الإسلامية: ص:52)

நமது இமாம்களுக்கு இருக்கும் அந்தஸ்தை நெருக்கத்திற்குரிய மலக்கோ, அல்லது தூதராக அனுப்பப்பட்ட நபியோ அடைந்து கொள்ளமாட்டார்கள். என்பது நமது மதக்கொள்கையில் அவசியம் அறிந்திருக்க வேண்டியவைகளில் உள்ளதாகும். **(பார்க்க குமைனியின் அஸ்லாமிய அரசு. இஸ்லாமிய அரசு. பக்கம். 52).**

**குமைனி தனது இஸ்லாமிய அரசு எனும் நூலில்: 26-வது பக்கத்தில் மேலும் குறிப்பிடுகையில்,**

" وقد مرعلى الغيبة الكبرى لإمامنا المهدي أكثر من ألف عام... وقد تمر ألوف السنين قبل أن تقضي المصلحة قدوم الإمام المنتظر ( الحكومة الإسلامية. ص:22)

**'நமது இமாம் மஹ்தி அவர்களின் மாபெரும் மறைவு நடந்து ஆயிரத்திற்கும் அதிகமான ஆண்டுகள் கழிந்து விட்டன. எதிர்பார்க்கப்பட்ட இந்த மஹ்தி வருவதற்கு இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் போகலாம்'** என உழன்று நமது மஹ்திக்கும், அவர்களின் மஹ்திக்கும் இடையிலான வேறுபாட்டை தெளிவுபடுத்தியுள்ளார்.

மன்னர் ஷாஹ் என்ற ஈரானிய ஆட்சியாளனின் பிடியில் இருந்து தப்பி வந்த குமைனி ஈராக்கில் பத்துவருடங்களுக்கு மேல் தஞ்சம் புகுந்திருந்தார். இவர் 1968 காலப்பகுதியில் இராக்கில் நஜ்ஃப் பிரதேசத்தில் ஒழிந்து வாழ்ந்து கொண்டிருந்தார். அப்போது ஈராக் அவருக்கு பலவழிகளில் உதவி இருக்கின்றது. ஈராக் அரசின் உதவியுடன் பாஸ்போர்ட்கள் பெற்றார்.

இவருக்கு உளவு பார்த்ததன் பேரில் வசமாக மாட்டிக் கொண்ட ஸீராஸி என்பவனை மன்னித்துவிடுமாறு குமைனி சதாமிடம் அவர் இரண்டாவ ராணுவத் தளபதியாக இருந்த போது வேண்டினார். சதாம் அதையும் நிறைவேற்றிக் கொடுத்தார். இவரது மகன் ஒருவர் மரணித்த போது அவரை ஈராக்கியப் படைகளின் விஷேட அடக்கஸ்தலத்தில் அடக்கம் செய்யுமாறு வேண்டியதையும் சதாம் நிறைவேற்றி அவருக்குப் பேருபகாரம் செய்தார். இவற்றை எல்லாம் மறந்து விட்டு அந்த நாட்டுக்கு எதிராகப் போர் செய்தவர்.

இவர் அசிங்கமான காரியங்களில் சர்வ சாதராணமாக ஈடுபட்டுவந்தார். இவரே

يقول الخميني «وأما سائر الاستمتاعات كاللمس بشهوة والضم والتفخيذ فلا بأس بها حتى في الرضيعة» (تحرير الوسيلة2/216).

ஆசையுடன் (பெண்களைத்) தொடுதல், கட்டி அணைத்தல், பால்குடிப் பருவத்தில் உள்ள சிறுமியாயினும் அவரின் துடையில் இன்பம் அனுபவித்தல் போன்ற பெண்களுடான அனைத்து சல்லாபங்களும் ஆகுமானதே 'தஹ்ரீருல் வஸீலா' (2- 216). எனக் குறிப்பிடுகின்றார்.

குமைனியின் நூலில் காணப்படும் ஆபாசக் குறிப்பாகும் இது. ஈரானிய ஷீஆக்களின் தந்தையான இவர் இதில் ஈடுபட்டவர் என்று அவர் பற்றிய குறிப்புக்கள் குறிப்பிடுகிறன்றன. அவர்களின் மத்ஹபில் இருந்து விலகியவர்கள் மூலம் இந்த சாட்சியங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. (பார்க்க: றறற. யடடிரசாயடு. உழஅ).

## ஷீஆக்களின் மூலாதார நூல்கள்.

இமாம்களான புகாரி, முஸ்லிம், திர்மிதி, போன்ற ஹதீஸ்கலை அறிஞர்களின் நூற்களையோ, அபூஹனிபா, மாலிக், ஷாபிஈ, அஹ்மாத் போன்ற பிக்ஹ் துறைசார்ந்த

நூற்களையோ மார்க்கத்தின் மூலாதார நூற்களாக எடுப்பதில்லை. அவர்களுக்கென இமாம்களும், தனியான நூற்களும் அவர்கள் கற்பனைகளில் உதித்தவைகளும் உண்டு. அவற்றையே அவர்கள் நம்புவார்கள். அதன்படியே நடப்பார்கள். **அவற்றில் பின்வரும் நூற்கள் அவர்களின் மூலாதார நூற்களாக கொள்ளப்படுகின்றன.**

1- அல்காபி.

2- அல்கைபா.

3- பஸ்லுல் கிதாப்.

4- பிஹாறுல் அன்வார்.

5- மிர்ஆதுல் உகூல்.

6- மபாதீஹு ல் ஜினான்.

7- நூறுல்அன்வார்.

8- கஷ்புல் அஸ்ரார்

9- அல்ஹு கூமதுல் இஸ்லாமிய்யா.

10- அர்ரஜ்ஆ.

11- அல்அன்வாறுன்னுஃமானிய்யா.

12- தஹ்ரீருல் வஸீலா.

13- நஹ்ஜு ல் பலாகா.

## இவற்றில் உள்ளடங்கி இருப்பவை:

∃ குர்ஆன் திரிவுபடுத்தப்பட்டுள்ளதாக கூறப்படும் சான்றுகள்!

∃ குர்ஆனுக்கு தவறான விளக்கங்கள் (தப்ஸீர்கள்), பொய்யான ஹதீஸ்கள்.

∃ ஸஹாபாக்களை காபிர்கள். மதம்மாறியோர் என தூற்றுதல்.

∃ ஸஹாபாக்களின் வழிவந்த அஹ்லுஸ்ஸு ன்னாக்களை 'நவாஸிப்' அதாவது அஹ்லுல்பைத்களின் குறிப்பாக அலி (ரழி) எதிரிகள் என வர்ணித்தல்.

∃அபூபக்கர் ஸித்தீக் (ரழி) உமர் (ரழி), அன்னை ஆயிஷா, ஹப்ஸா போன்றோரை சபித்தல்.

∃ இமாம்களான அபூஹனீபா, மாலிக், ஷாபி, அஹ்மத், இப்னு கஸீர், இப்தைமிய்யா மற்றும் நூற்றுக்கணக்கான நமது அறிஞர்களை வழிதவறியவர்களாக சித்தரித்தல்.

∃ ஷீஆ மதத்தைச் சாராதோர் வழிகெட்ட காபிர்கள், விபச்சாரத்தில் பிறந்தவர்கள் என வர்ணித்தல்.

∃ 'முத்ஆ' பெண்களுடனான தற்காலிக அனுபவிப்பு முறையான விபச்சாரத்தை அனுமதித்தல். அது ஸஹாபாக்கள்தான் ஹராமாக்கினார்கள், நபி (ஸல்) அவர்கள் ஹரமாக்கவில்லை என்றும் வாதிடுதல்

∃ புனையப்பட்ட திக்ர்கள், அவ்ராதுகளை நடைமுறைப்படுத்தல்.

∃ தமது பன்னிரெண்டு இமாம்களும் தவறுகளுக்கும், மறதிக்கும் அப்பாற்பட்டவர்கள். பல நூறு ஆண்டுகளாக மறைந்து வாழும் 'ஹஸனுல் அஸ்கரி' என்ற மஹ்தி பிற்காலத்தில் வருவார். இரு பெரும் நபித்தோழர்களுக்கு பழி தீர்த்து, தண்டனை நிறைவேற்றுவார் போன்ற கிறுக்குத்தனமான பல அம்சங்கள்.

∃ புனித க:.பாவை விட கர்பலா பூமியே சிறந்தது என்ற போதனை.

∃ அலி (ரழி) அவர்கள் மி:.ராஜு க்கு சென்ற சரித்திரம்.

∃ வீடுகளில் பரகத்திற்காக தொங்கவிடப்படும் ஆயத்துல் குர்ஸி தாங்கிய சுலோகத்துடன் மறைமுகமாக அல்லாஹ், முஹம்மத், அலி, ஹஸன், ஹு ஸைன், பாத்திமா ஆகிய ஐவரின் பெயர்களை பாதுகாப்பின் நிமிர்த்தம் தொங்கவிடுதல்.

## ஷீஆ மத நூல்களில் இருந்து திடுக்கிடும் சில உண்மைத் தகவல்கள்.


"سورة الولاية" .. التي ألفها الشيعة .. واتهموا الصحابة
رضوان الله عليهم بحذفها من القرآن الكريم ..

**∃ அல்குர்ஆனை தொகுக்கின்ற போது நபித்தோழர்கள் இரட்டடிப்புச் செய்ததாக ஷீஆக்களால் இன்றும் நம்பப்படும் 'அல்விலாயா' அத்தியாயத்தின் நகல்**



**∃ நபித்தோழர்களால் அல்குர்ஆன் மாற்றத்திற்கும், திருத்திற்கும் உள்ளாகியுள்ளதாகக் கூறும் ஷீஆக் கிரந்தங்கள்.**

**பொருள்:** நமது கரங்களில் உள்ள இந்தக்குர்ஆன் முஹம்மத் நபி (ஸல்) அவர்களுக்கு இறக்கப்பட்ட அமைப்பில் முழுமையானது கிடையாது. அதற்கு மாற்றமாகவே உள்ளது. அதில் திரிபுக்கு உட்பட்டவை, மாற்றத்திற்கு உட்பட்டவை, பல பெயர்கள் நீக்கப்பட்டவை என பலவும் உள்ளன. அதில் அலி (ரழி) அவர்களின் பெயரும், முஹம்மத் நபியின் குடும்பத்தாரரின் பெயர்களும், நயவஞ்சகர்களின் பெயர்களும் உள்ளடங்கும். அது அல்லாஹ்வோ, அவனது தூதரோ விரும்பும் ஒழுங்கமைப்பிலும் இல்லை என மற்றொரு ஷீஆ

மத அறிஞரான அல்பஹ்ரானி என்பவர் தனது **‘மஷாரிகுஷ் ஷு மூஸு த் துர்ரிய்யா’** என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.


ج١٢ باب النوادر ــ٥٢٥ــ

قراءة أبي

٢٨ ــ علي بن الحكم ، عن هشام بن سالم ، عن أبي عبدالله عليه السلام قال : إن

الحديث الثامن و العشرون : موثق

فالخبر صحيح ولا يخفى ان هذا الخبر و كثير من الأخبار

الصحيحة صريحة في نقص القرآن و تغييره

فإن قيل : انه يوجب رفع الاعتماد على القرآن لانه إذا ثبت تحريفه

**பொருள்:** அல்குர்ஆன் மாற்றப்பட்டுள்ள செய்தி உண்மையானது. இந்தச் செய்தியும், இன்னும் ஏராளமான சரியான செய்திகளும் அல்குர்ஆனில் குறைவிருப்பதையும், அதில் மாற்றம் ஏற்பட்டுள்ளதையும் தெளிவாகக் குறிப்பிடுகிறது. இது பற்றி செய்திகள் அனைத்தும் கருத்தடிப்படையில் பல வழிகளில் உறுதியானவைதான் என்பதே எனது கருத்தாகும். **<u>(என்று ஷீஆ மத அறிஞன் மஜ்லிஸி என்பவர் ‘மிர்ஆத்துல் உகூல்’ என்ற தனது நூலில் குறிப்பிட்டுள்ளார். சுன்னத் ஜமாத் கூத்தாடிகளே இதுதான் ஈரானியரின் கொள்கை என்பதை இனியாவது புரிந்து கொள்ளமாட்டீர்களா?</u>**


الكليني دار الكتب الإسلامية طهران الطبعة الثالثة ١٣٨٨ هـ

ج١ كتاب الحجّة ــ٢٣٩ــ

عن الحلبي ، عن أبي بصير قال : دخلت على أبي عبدالله عليه السلام فقلت له : جعلت فداك

إنّي أسألك عن مسألة ، ههنا أحد يسمع كلامي (١) ؟ قال : فرفع أبو عبدالله عليه السلام

ستراً بينه وبين بيت آخر فأطلع فيه ثمّ قال: يا أبا محمّد سل عمّا بدا لك ، قال : قلت :

جعلت فداك إنّ شيعتك يتحدّثون أنّ رسول الله صلى الله عليه وآله علّم علياً عليه السلام باباً يفتح له

منه ألف باب ؟ قال : فقال: يا أبا محمّد علّم رسول الله صلى الله عليه وآله علياً عليه السلام ألف باب يفتح من

كلّ باب ألف باب قال : قلت : هذا والله العلم قال : فنكت ساعة في الأرض ثمّ قال :

إنّه لعلم وما هو بذاك .

قال : ثمّ قال : يا أبا محمّد ! وإنّ عندنا الجامعة وما يدريهم ما الجامعة ؟ قال :

قلت: جعلت فداك وما الجامعة ؟ قال : صحيفة طولها سبعون ذراعاً بذراع رسول الله

**அல் ஹு ஜ்ஜா என்ற நூலில்:** நம்மிடம் முஸ்ஹபு **பாதிமா என்ற குர்ஆன் இருக்கின்றது. அது உங்களின் குர்ஆனை விட மூன்று மடங்கையுடையது. அதில் உங்கள் குர்ஆனில் உள்ள ஒரு எழுத்துக்கூட இல்லை. பாரசீகத்தில் இறங்கிய குர்ஆனோ தெரியவில்லை)**

**மற்றுமொர் நூலில்:** அபூக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களை **முதல் கலீபாவாக ஏற்றவர்களையோ, அவர்களின் இரட்சகனாகியஅல்லாஹ்வையோ, அவர்களின் நபியையோ நாம் ஏற்றுக் கொள்ளவில்லை.**

துஹ்பதுல் அவாம் என்ற நூலில்: அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களையும், உமர் (ரழி) அவர்களையும் சபித்துக் கூறப்படும் **‘துஆவு ஸனமை குரைஷ்’** என்ற வழிகெட்ட துஆவை ஓதி வருகின்றனர்.

**ஷீஆக்களின் கற்பனைக் குர்ஆனில் இடம்பெறும் நூரைன் அத்தியாயத்தின் நகலில் இருந்து.**

نص السورة المزعومة

بسم الله الرحمن الرحيم * يا أيها الذين آمنوا آمنوا بالنورين أنزلناهما
يتلوان عليكم آياتي ويحذرانكم عذاب يوم عظيم * نوران بعضهما من بعض وإنا
لسميع عليم * إن الذين يوفون بعهد الله ورسوله في آيات لهم جنات نعيم *
والذين كفروا من بعد ما آمنوا بنقضهم ميثاقهم وما عاهدهم الرسول عليه يقذفون
في الجحيم * ظلموا أنفسهم وعصوا لوصي الرسول أولئك يسقون من حميم * إن
الله الذي نور السموات والأرض بما شاء واصطفى من الملائكة وجعل من
المؤمنين * أولئك من خلقه يفعل الله ما يشاء لا إله إلا هو الرحمن الرحيم * قد
مكر الذين من قبلهم برسلهم فأخذتهم بمكرهم إن أخذي شديد أليم * إن الله قد
أهلك عادا وثمودا بما كسبوا وجعلهم لكم تذكرة فلا تتقون * وفرعون بما طغى
على موسى وأخيه هارون أغرقته ومن تبعه أجمعين * ليكون لكم آية وإن
أكثركم فاسقون * إن الله يجمعهم في يوم الحشر فلا يستطيعون الجواب حين
يسألون * إن الجحيم مأواهم وإن الله عليم حكيم * يا أيها الرسول بلغ إنذاري
فسوف يعلمون * قد خسر الذين كانوا عن آياتي وحكمي معرضون * مثل
الذين يوفون بعهدك إني جزيتهم جنات النعيم * إن الله لذو مغفرة وأجر عظيم *
وإن عليا من المتقين * وإنا لنوفيه حقه يوم الدين * ما نحن عن ظلمه بغافلين *
وكرمناه على أهلك أجمعين * فإنه وذريته لصابرون * وإن عدوهم إمام

٤

## ஷீஆக்களின் பிரவேசம்

ஷீஆக்கள் ஈரானில் மாத்திரம் இருப்பதாக நினைக்காதீர்கள். அவர்கள் சவூதிஅரேபியா (கிழக்கு, மற்றும் தெற்கு மாநிலங்கள்), எகிப்து, பஹ்ரைன், துபாய், ஓமான், ஜோர்தான், ஈராக், துர்கி, ஜோர்டான், ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், இந்தியா (வடமாநிலங்கள்) போன்ற நாடுகளில் அதிக அளவில் காணப்படுகின்றனர்.

மதீனாவில் **'குபா'** என்ற பள்ளியை அண்டிய பகுதிகளில் தாராளமாகக் காணப்படுகின்றனர். மதீனா மக்கள் இவர்களை 'நஹ்வலி' (வழைந்த வழிமுறையில் இருப்பவன்) என்ற பெயரில் அழைக்கின்றனர்.

பாலஸ்தீலும், ஆபிரிக்க நாடுகளிலும் முஸ்லிம்களின் வறுமை, அறியாமை போன்ற காரணங்களை அடிப்படையாகக் கொண்டு பரவலாக ஊடுருவுகின்றனர்.

**இலங்கையில் பரவி வரும் ஷீஆ சிந்தனை.**

இலங்கையில் ஷீஆ சிந்தனைத் தாக்கம் படித்தமட்டங்களில் பொதுவாகக் காணப்படுகின்றது. பல்கலைக்கழக விரிவுரையாளர்கள் சிலர் ஈரான் துதி பாடிகளாக

இருப்பதாக நம்பகமான தகவல்கள் குறிப்பிடுகின்றன. ஈரானியர் பலஸ்தீன் முஸ்லிம்களுக்கு உதவி செய்வது போன்று காட்டிக் கொண்டு பெயருக்கேனும்

இஸ்ரவேலுக்கு எதிரான கண்டன அறிக்கைகள் விடுவதில் முன்னணியில் உள்ளனர். இதை நாமும்தான் விடுகின்றோம், ஆர்ப்பாட்டம் செய்கின்றோம். யாரும் நம்மைக் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை. ஆனால் ஈரானியரது பெயர் மாத்திரம் ஓங்கி ஒலிக்கின்றது

இது போன்ற அதிரடி நடவடிக்கைகள் குறித்த சந்தர்ப்பத்தில் மாத்திரம் உஷார் நிலையில் இருந்து, பின்னர் உறங்கிக் கொள்ளும் முஸ்லிம்கள் மத்தியில் நல்லொதொரு மதிப்பைப் ஈரானுக்குப் பெற்றுத் தருவதை மறுக்க முடியாது. அரபு தாதாக்கள் நிம்மிதியாக உண்டு, குரட்டை விட்டு உறங்குகின்றார்கள். இவர்கள் ஷீஆக்களாக இருந்தாலும் அறிக்கையாவது விடுகிறார்களே என்ற ஆதங்கத்தால் ஏற்பட்ட மனமாற்றம்தான் இந்த இமேஜை ஈரானுக்குத் தேடிக் கொடுத்துள்ளது.

பலஸ்தீனக் குழந்தைச் செல்வங்கள் கொடிய, நாசகார இஸ்ரவேலர்களால் நாளாந்தம் கொலை செய்யப்படும் போது, கண்டன அறிக்கைகூட விடாது அதை கைகட்டிப் பார்த்துக் கொண்டிருப்பவன் உண்மை முஸ்லிமாக இருக்க முடியாது என்ற ஈமானிய உணர்வே இதற்கு அடித்தளமாக அமைகின்றது.

இவ்வாறான தாக்கம் போர்க்குணம் படைத்த கல்விமான்கள், இஸ்லாமிய ஆய்வாளர்களிடம் புதிய தொற்று நோயாக மாறிவருவதைப் பார்க்கின்றோம்

இவர்கள் தமது சொந்த நாடான ஈரானில் சுன்னி முஸ்லிம்களை நாளாந்தம் கொலை செய்வதையும், அவர்களின் உரிமைகளை காலுக்குக் கீழ் போட்டுப் புதைப்பதையும் மறந்து விட்டு இவ்வாறு செய்கின்றனர் என்பதை நம்மில் எத்தனை பேர் அறிவார்களோ தெரியவில்லை. என்னமோ தமது சொந்த நாட்டில் பறிக்கப்படும் உரிமைகளை போராடிப் பெற்றவர்கள் போன்ற எண்ணத்தில் இவ்வாறு சிந்திக்கின்றனரோ தெரியவில்லை.

இஸ்லாமிய உம்மத்தின் ஐக்கியத்தை கருத்தில் கொண்ட நவீன கால அறிஞர்கள் சிலர் ஷீஆக்களின் கொள்கை பற்றி அலட்சியமாக இருப்பதுடன், அவர்களுடனான கருத்து முரண்பாடு அடிப்படையுடையுடைய தொடர்புடையதல்ல, அது சாதராணமானதுதான். என அடிப்படையற்ற சான்றுகளைக் கொண்டு எழுத ஆரம்பித்தன் விளைவாக அதன் தாக்கம் இலங்கையில் இஸ்லாமிய இயக்கங்களின் இஸ்தாபகர்களையும் பாதித்துள்ளது.

## ஷீஆக்களின் சதித்திட்டங்கள்.

ஷீஆக்கள் பிற பிரதேசங்களில் ஊடுருவுவதற்காக பல திட்டங்களை வகுத்துள்ளனர். அவை தூர நோக்குடனும், நயவஞ்சகம், குள்ளத்தனம் கலந்தும் வரையப்பட்ட திட்டங்கள் என்பதில் சந்தேகம் இல்லை. அவை பற்றி சுருக்கமாக இங்கு கவனிப்போம்.

1) அண்டை நாடுகளுடன வெளிப்படையில் நல்லுறவை பேணுதல். இதற்கு ஈரான் ஈராக் போர் முடிவிற்கு கொண்டுவரப்பட்டதையும், சவூதி ஈரான் வெளியுறவு புதிப்பிக்கப்பட்டதையும் உதாரணங்களாகக் கூறலாம்.

2) அந்த நாடுகளில் கலவரங்களின் போது பாதிக்கப்படும் ஷீஆ மதத்தவருக்கான குடி இருப்பு வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தல்.

3) அந்த நாடுகளில் இருக்கின்ற செல்வந்தர்களோடும், நிர்வாகத்துறை அதிகாரிகளுடன் நெருங்கிய உறவை ஏற்படுத்துதல்.

4) பெரும்பான்மை சன்னிகள் பிரதேசத்தை ஷீஆக்களைக் குடியமர்த்தி சுன்னிய செல்வாக்கைத் தகர்த்தல். அதற்காக ஷீஆ மதத்தவருக்கான குடி இருப்பு வீடுகள் அமைத்தல்.

5) சிறுபான்மை முஸ்லிம்கள் வாழும் நாடுகளின் ஜனாதிபதி, அமைச்சர்கள், சூபிக்கள் மூலம் ஷீஆ மேலாண்மையை ரகசியமாகப் புகுத்துதல். அதற்காக பல மில்லியன் தொகை பண உதவியைக் கொண்டு அந்த நாட்டில் வேலைத் திட்டங்களை ஆரம்பித்து தண்ணீர் காட்டுதல். இதற்கு ஈரான் ஜனாதிபதி அஹ்மதி நஜாத்தின் இலங்கை வருகையையும் அதன் இரகசிய கசமுஸாக்களையும் குறிப்பிடலாம்.

6) அஹ்லுஸ்ஸு ன்னாக்களை குறிப்பாக மத்ஹப் வாதிகளிடம் ஸலபிக் கொள்கை பற்றி தவறாக பிரச்சாரம் செய்தல். சில ஆண்டுகள் அவர்களை நண்பர்களாக வைத்தக் கொள்ளல். பின்னர் புலமைப் பரிசில் கொடுத்து ஈரானுக்கு அனுப்பி மூளைளையைச் சலவை செய்தல். **(இலங்கைத் தீவில் ஏழு நாட்கள் என்ற ஷீஆ ஒருவனின் ஆய்வைப்பார்க்கவும்).**

7) முடியுமானால் பிரஜா உரிமை பெறுவதற்கான முன் ஏற்பாடாக வளைகுடா நாடுகளில் பாதுகாப்பு, மற்றும் அரச பணிகளில் ஊடுருவுதல்.

8) வஹ்ஹாபிய உலமாக்களுக்கும், அரசுகளுக்கும் கெட்ட பெயர்களைத் திட்டமிட்டே உருவாக்குதல். அவர்களுக்கு மத்தியில் காணப்படும் நட்புறவில் விரிசலை உண்டுபண்ணுதல். தேவைப்பட்டால் அரசர்களின் பெயர்களையும், உலமாக்களின் பெயர்களையும் அநாமோதைய நோட்டீஸ்களில் வெளியிடுதல்.

9) உலமாக்களை மன்னர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்யத்தூண்டி அதில் குளிர்காய்தல். பின்னர் அவர்களைக் கைது செய்வதன் மூலம் அவர்களின் பிரச்சாரத்தை முடக்க அந்த அரசுகளுக்கு திறைமறைவில் நின்று ஊக்கமளித்தல்.

10) அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் பொருளாதாரத்தை சீர் குலைத்தல். அவர்கள் மத்தியில் நிம்மதி அற்ற ஒரு நிலையை தோற்றுவித்தல்.

11) மன்னர்கள் சுன்னிக்கொள்கையைப் பரப்புவதற்கு ஆதரவளிப்பதில் இருந்து அவர்களை முடக்குதல். அவர்கள் பற்றிய அவதூறுகளை கட்டவிழ்த்துவிடுதல்.

## இலங்கையில்:

∃ இலங்கை ஈரான் தூதரகம் தமிழ் மொழியில் முத்திங்கள் வெளியீடாக **'தூது'** எனும் சஞ்சிகையை வெளியிடுகின்றது. அதில் நபித்தோழர்களின் ஒரு செய்தி கூட மருந்துக்கும் கிடையாது. ஜு ன்துப் சொன்னார், அபூஅப்தில்லாஹ் சொன்னார் என்ற புலம்பல்கள்தான் இருக்கின்றன.

இவர்களே ஹஸன், ஹு ஸைன், சைனப், மஹ்தி என்ற தனித்தனிப் பெயரில் இந்தியா பெங்லூரில் இருந்து தருவிக்கப்பட்ட ஷீஆ சிந்தனைக்கு அடித்தளமிடும் நூல்களை முக்கிய சிலருக்கு மாத்திரம் விநியோகிக்கின்றனர்.

∃ மட்டக்களப்பு மாவட்டத்தில் கல்குடாத் தேர்தல் தொகுதியில் அமைந்துள்ள மீராஓடை எனும் கிராமத்தில் **'மன்பவுல் ஹு தா'** என்ற அரபுக்கல்லூரியையும், பொலன்னறுவை மாவட்டத்தில் மானிக்கம்பிட்டியில் **'ஸகிய்யா'** என்ற மகளிர் கல்லூரியையும் நிறுவி உள்ளனர்.

இங்கு கல்விகற்கும் மாணவ மாணவிகள் புலமைப்பரிசில் பெற்று ஈரானிற்கு செல்கின்றனர். இதற்கான நிதியுதவி ஈரான் தூதரகம் ஊடாக செய்யப்படுவதாக கூறப்படுகின்றது.

∃ மிலேனியம் என்ற வெளியீட்டு நிறுவனத்தால் அரபு நாடுகளை அமெரிக்காவின் அடிவருடிகளாக சித்தரிப்பதன் ஊடாக திரைமறைவில் ஷீஆக்கருத்துக்கள்

புகுத்துப்படுகின்றது. இது நாய் நஜீஸ் பற்றியும், வேசிகள் கற்பொழுக்கம் பற்றியும், காமுகன் கற்பின் பாதுகாப்பு பற்றியும் பேசுவதை ஒத்ததாகும்.

∃ **'இஷாஅது அஹ்லிஸ்ஸு ன்னா'** வழிகேட்டுப்பேரவை மூலம் வெளியிடப்படும் வெற்றி? என்ற வெற்றுச் சஞ்சிகை ஈரானின் நாவில் பேசுவதும், எழுதுவதுமானது தாமும் திறைமறைவில் நின்று செயல்படும் ஷீஆக்கும்பல் என்பதை உறுதி செய்கின்றது.

இவர்கள் மரணித்தவர்களை மண்ணறைகளில் உயிர்வாழும் மாவீரர்களாக சித்தரித்து வணங்குவதைவிடவே மாட்டார்கள். **'தாருல் புனூன்'** எனும் இவர்களது வெளியீட்டகம் ஈராக், சிரியா போன்ற நாடுகளில் **'அஹ்லுல் பைத்' உறுப்பனர்களில்** அடங்கப்பட்டோரின் கப்றுகளை அச்சிட்டு வெளியிட்டுள்ளனர்.

∃ கல்விப் பொதுத்தராதர உயர்தர வகுப்பில் கற்பிக்கப்படும் **'இஸ்லாமிய** நாகரிகம்' பாடத்தில் முஆவியா (τ) அவர்களை இஸ்லாமிய வரலாற்றில் மாபெரும் குற்றவாளியாக சித்தரித்து கற்பிக்கப்படுகின்றது. அவர்களது மகன் யஸீதை சண்டாளன், இரத்த தாகம் பிடித்தவன் போன்ற வார்த்தைகளாலும் வர்ணிப் செவிமடுக்கக் கூறடியதாக இருக்கின்றது.

ஹு ஸைன் (τ) அவர்களைக் கொலை செய்த பாவி என்றெல்லாம் ஒரு ஸஹாபியின் மகனை அதுவும் **'எனது சமுதாயத்தில் கைஸரின் நகரத்தை (கொஸ்தன்தீனாவை) வெற்றிகொள்ளும் முதல்படையினர் பாவம் மன்னிக்கப்பட்டவர்கள்'** (புகாரி) என நபி (ε) அவர்கள் செய்த முன்னறிவிப்பில் உள்ளடங்கும் ஒரு ஸஹாபியையும், தாபியியையும் இவ்வாறு தரம்தாழ்த்தி சித்தரிப்பது ஷீஆ நாகரீகமாகவே இருக்க முடியும். அது இஸ்லாமிய நாகரீகமாக இருக்க முடியாது.

**கொஸ்தன்தீனாவை வெற்றி கொண்டது கொமைனியும், அவரது படைகளுமா? அல்லது முஆவியா (τ) அவர்களும், அவர்களது மகன் யஸீதுமா? என்பதை மீலேனியம் வெளியீட்டகத்தாரும் நாமும் ஏற்றுக்கொள்கின்ற இப்னு ஹஜர் இமாமவர்கள் தெளிவாக விளக்கி**யுள்ளதைக் கொஞ்சம் படித்தால் ஷீஆ வெறியைக் குறைத்து, சுன்னாக் கொள்கையை சரிகாண வழி செய்யும் என்பது நமது கருத்தாகும்.

## நரகவாதியான அபூதாலிபை முஸ்லிமாக்கிய ஷீஆக்கள்

நபிகள் நாயகம் (ε) அவர்கள் இஸ்லாத்தைப் பிரச்சாரம் செய்த போது அபூலஹப், உத்பா, ஷைபா, உமைய்யா, அபூஜஹ்ல், போன்ற பகிரங்கமான எதிரிகைளயும் தனது த∴வா(பிரச்சார)க்களத்தில் சந்தித்தது போன்று, பகிரங்கமான ஆதாரவாளர்களையும், மறைமுகமான ஆதாரவாளர்கயையும் சந்தித்தார்கள்.

அதே போன்று நபிகள் நாயகம் (ε) அவர்களுக்கும், அவர்களின் தோழர்களுக்கும் உதவிய மக்கா வாழ் காபிர்களில் 'முத்யிம் பின் அதிய்', அபூதாலிப், இப்னுஜத்ஆன், ஸைத் பின் தஸினா போன்றவர்களை இஸ்லாமிய வரலாறு பதிவு செய்து வைத்துள்ளது. ஷீஆக்களின் நூல்களோ இவ்றறைத்தலைகீழாகவே பதிவு செய்துள்ளது.

## விசித்திரமான பார்வை.

இஸ்லாத்திற்காக தம்மையே அற்பணித்த மாவீரர்களான நபித்தோழர்களில் விரல் விட்டு எண்ணும் ஒரு சிலரைத்தவிர ஒட்டுமொத்த நபித்தோழர்களையும் முர்தத்களாக(மதம்மாறியவர்களாக)ப் பார்க்கும் ஷீஆ மதக்காரர்கள் நரகத்திற்கென நன்மாராயம் பெற்ற அபூதாலிபை முஸ்லிமாக்கியதைப் பார்க்கின்ற போது இவர்கள் எவ்வாளவு கிறுக்குத்தனமான தத்துவங்களை உடையவர்கள் என்பதை சாதரான அறிவு படைத்த முஸ்லிம் அறிந்து கொள்வான்.

## இந்த சீர்கேட்டிற்கு அவர்களில் நூல்களே காரணம்

ஷீஆக்களான ஈரானியர்களையும், அவர்களின் அடிவருடிகளையும் இந்நிலைக்குக் கொண்டு செல்ல பொய்கள், அபத்தங்கள் நிரம்பிய இவர்களது மதநூல்களும், மார்க்க அறிஞர்களுமே காரணம் என்பதை ஆய்வின் முடிவின் உறுதி செய்ய முடிகின்றது.

அஹ்லுஸ்ஸு ன்னாக்களாகிய நாம் நம்புகின்ற அல்குர்ஆனையோ, அதன் விளக்கவுரைகளையோ, நம்மிடம் காணப்படும் புகாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ் கிரந்தங்களையோ ஷீஆக்கள் நம்புவதில்லை. மாற்றமாக யாகூப் அல்குலைனி என்பவர் எழுதிய 'அல்காபி' என்ற பல பாகங்கங்களைக் கொண்ட நூலையும், 'அல்அன்வாறுன் நுஃமானிய்யா' குமைனியின் 'இஸ்லாமிய அரசு' போன்ற அவர்களின் அறிஞர்கள் எழுதிய இவ்வாறான சில நூற்களையும், விரிவுரைகளையுமே மாத்திரம் நம்புகின்றனர். அவற்றின் அடிப்படையிலேயே தமது மார்க்க விவகாரங்களை அமைத்து இன்றும் செயல்படுகின்றனர்.

**ஸஹாபாக்கள் இவர்களின் பார்வையில் காபிர்கள் என்பதால் தமது மதநூல்களில் அவர்களின் அறிவிப்புக்கள் எதையும் மருந்துக்கும் கூட இடம் பெறச் செய்யவில்லை.**

**புகாரி, முஸ்லிமில் இடம் பெறும் ஹதீஸ்களில் தமது கொள்கையை உறுதி செய்ய வெளிப்படையில் துணை செய்வதாக இவர்கள் நம்பிக்கைகொள்ளும் அறிவிப்புக்களை மாத்திரம் தெரிவு செய்வர். ஏனெய அனைத்து அறிவிப்புக்களையும் நிராகிரிப்பர். அவற்றில் அபூதாலிப் பற்றிய செய்தியும் ஒன்றாகும். அவர் பற்றியே இங்கு நாம் விவாதிக்க இருக்கின்றோம்.**

## அபூதாலிப் என்பவர் யார்?

நபிகள் நாயகத்தின் தந்தை அப்துல்லாஹ்வின் சகோதரர்களில் ஒருவரான இவர் 'அப்துமனாப்' என்று வரலாற்றில் அழைக்கப்படுகிறார். நபி (ஸ) அவர்களின் பாட்டனார் அப்துல்முத்தலிபின் மரணத்தின் நபி (ஸ) அவர்களை பொறுப்பேற்று, பராமாத்தவர்களில் முதன்மையானவர். (பத்ஹு ல்பாரி 12: 92). ஷீஆக்களின் நூற்களின் இவரது பெயர் இம்ரான் எனக்குறிப்பிடப்படப்படுவதாக இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) என்பவர் பத்ஹு ல்பாரியில் குறிப்பிட்ட பின் 'இப்னு தைமிய்யா (ரஹ்) அதற்கு மறுப்புத்தெரிவித்துள்ளதாகவும் குறிப்பிடுகிறார்கள்.

இவர் நபித்துவத்தின் ஒன்பதாவது, அல்லது பத்தாவது ஆண்டு மரணமாகும் வரை **நபிகள் நாயகம் (ஸ) அவர்களுக்கு பல்முனையிலும் உதவியவர்களில் ஒருவர்.** என்பதையு வரலாறு மறுக்கவில்லை. இவர் காபிராகவே மரணித்தார் என்பதை நபிமொழிகள் பொய்யுரைக்கவுமில்லை. நபி (ஸ) அவர்களுக்காக இவர் செய்த உதவிகள் இவரது மரணத்தின் நபித்தோழர்களைக் கவலை கொள்ளச் செய்தது என்பதற்காக அவரை முஸ்லிம்களின் பட்டடியலில் இணைக்க முடியுமா? ' முத்யின் பின் அதிய்' உயிருடன் இருந்து, இந்தக் ரவ்டிக் கும்பல்கள் விஷயத்தில் பரிந்துரை செய்தால் அவருக்காக நான் இந்தக் கழிசடைகளை விடுதலை செய்வேன்' என நபிகள் (ஸ) அவர்கள் காபிரான முத்யிம் விஷயத்திலும்தான் கூறியுள்ளார்கள் (புகாரி,முஸ்லிம்). அதற்காக அவரை முஸ்லிம் என்பதா? இதுவா முஸ்லிம்களுக்குரிய அளவு கோல். குறைந்தது நஜ்ஜாஷியின் தரத்தில் கூட அபூதாலிப் இருக்கவில்லை. அவரது மரணமும், அதன் பின்னணியில் இறங்கிய திருமறை வசனமும் அதற்கு பொதிய சான்று என்பதை பின்னர் விளக்குவோம்.

### நபிக்காக இவர் புரிந்த அதைத்துச் செயல்களும் பயனற்றுப் போனது.

3594 – حَدَّثَنَا مُسَدَّدٌ حَدَّثَنَا يَحْيَى عَنْ سُفْيَانَ حَدَّثَنَا عَبْدُ الْمَلِكِ حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ الْحَارِثِ حَدَّثَنَا الْعَبَّاسُ بْنُ عَبْدِ الْمُطَّلِبِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ لِلنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَا أَغْنَيْتَ عَنْ عَمِّكَ فَإِنَّهُ كَانَ يَحُوطُكَ وَيَغْضَبُ لَكَ قَالَ هُوَ فِي ضَحْضَاحٍ مِنْ نَارٍ وَلَوْلَا أَنَا لَكَانَ فِي الدَّرَكِ الْأَسْفَلِ مِنْ النَّارِ (صحيح البخاري )

அல்லாஹ்வின் தூதரே! உங்களின் பெரிய தந்தை அபூதாலிப் உங்களுக்காக உதவிஒத்தாசைகள் புரிந்தாரோ! எதிரிகளிடம் இருந்து உங்களைக் காத்தாரே! உங்களுக்காக கோபிப்பாரோ! அவருக்காக ஏதாவது நன்மை செய்தீர்களா? என அப்பாஸ் (τ) அவர்கள் கேட்டார்கள். அவர் நரகக்கரையில் இருக்கின்றார், நான் இல்லை என்றால் அதன் அடித்தளத்திலேயே இருந்திருப்பார். என நபிகள் நாயகம் (ε) அவர்கள் கூறிய செய்தி (புகாரி, முஸ்லிம்) என்ற கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

அபூதாலிப் நரகவாதிதான் என்பதை மற்றொரு நபிமொழி கீழ்க்கண்டவாறு தெரிவிக்கின்றது

عَنْ ابْنِ عَبَّاسٍ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ أَهْوَنُ أَهْلِ النَّارِ عَذَابًا أَبُو طَالِبٍ وَهُوَ مُنْتَعِلٌ بِنَعْلَيْنِ يَغْلِي مِنْهُمَا دِمَاغُهُ (صحيح مسلم)

நரகவாதிகளில் மிகக்குறைந்த வேதையை அனுபவிப்பவர் அபூதாலிப்தான். அவர் இருபாதணிகள் அணிந்திருப்பார். அதனால் அவரது மூளை உருகிவடியும். (முஸ்லிம்) இதை இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள் தனத பத்ஹு ல்பாரி என்ற நூலின் உறுதி செய்துள்ளதைப்பார்க்கின்றோம்.

## அல்குர்ஆனின் தீர்ப்பு.

அபூதாலிபிற்கு மரணம் வந்தபோது, நபி (ε) அவர்கள் அவரிடம் வந்தார்கள். அபூஜஹ்லும் அவரிடம் இருந்து கொண்டிருந்தான். நபி (ε) அவர்கள் ‘ எனது சாச்சாவே! ‘லாயிலாஹ இல்லல்லாஹ்’ (உண்மையாக வணங்கி, வழிபடத் தகுதியானவன்) அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. என்ற வாசகத்தை மொழியுங்கள். அதன் பொருட்டால் உங்களுக்காக அல்லாஹ்விடம் மறுமையில் மன்றாடுவேன் எனக் கூறியபோது அபூஜஹ்லும், அப்துல்லாஹ் பின் உமைய்யாவும் அப்துல் முத்தலிபின் மார்க்கத்தைப் புறக்கணிக்கப்போகின்றாயா? எனக் கூறியவர்கயவர்களாகவே இருந்தனர். இறுதியாக அவர் நான் அப்துல் முத்தலிபின் மார்க்கத்திலேயே தான் இருப்பதாக் கூறினார். எனக்குத் தடைவிதிக்கப்படும் வரை நான் உங்களுக்காக பாவமன்னிப்புக்கோரிக் கொண்டிருப்பேன் எனக் கூறி (அவருக்காக பாவமன்னிப்புக்கோரினார்கள்). ‘இணைவைப்பாளர்கள் தெளிவான நரகவாசிகள் எனத்தெரிந்தபின்பும் இந்த நபிக்கோ, நம்பிக்கை கொண்டோருக்கோ அவர்களுக்காக பாவமன்னிப்புக்கோர முடியாது. அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே! (9:113). என்ற வசனமும், (நபியே!.) நீர் நேசிப்பவர்களை எல்லாம் நேர்வழியில் செலுத்திட முடியாது (28: 56). என்ற வசனமும் இறங்கியது.

وَهَذَا كُلّه ظَاهِر فِي أَنَّهُ مَاتَ عَلَى غَيْر الْإِسْلَام . وَيُضَعِّف مَا ذَكَرَهُ السُّهَيْلِيّ أَنَّهُ رَأَى فِي بَعْض كُتُب الْمَسْعُودِيّ أَنَّهُ أَسْلَمَ ، لِأَنَّ مِثْل ذَلِكَ لَا يُعَارِض مَا فِي الصَّحِيح... ( فتح الباري لابن حجر – (ج 11 / ص 211)

**இந்தச் செய்தி அவர் இஸ்லாத்தில் இல்லாதிருந்தே மரணித்துள்ளார் என்பதைத் தெளிவாகக் கூறுகின்றது. இவர் இஸ்லாத்தை ஏற்றிருந்தார் என ‘சுஹைலி என்பவர் மஸ்ஊதி என்பவரது நூலில் கண்டதாகப் குறிப்பிடுவதை பலவீனமானதாகும். மாத்திரமின்றி இதனால் ஆதாரபூர்வமான செய்தியை மறுத்துரைக்க முடியாது. (பத்ஹு ல் பாரி)**

**இந்தத் தீர்ப்பதை ஏற்றுக்கொள்ள வேண்டிய இலங்கை மௌலாக்கள் சிலர் ஈரானியர்களுடன் இணைந்து நரவகவாதியான அபூதாலிபை முஸ்லிமாக்கி, நரகில் இருந்து விடுதலை பெற்றுத்தர அயராதுபாடுபடுகின்றனர். அதற்காக அல்லும், பகலும் உழைக்கின்றனர் என்பதைப் பார்க்கின்ற போது இவர்கள் மார்க்கத்தில் ஷீயாக்களைவிடவும் முட்டாள்கள் என்பதை அறிந்து கொள்ளலாம். (அல்லாஹ்வே மிக அறிந்தவன்).**

**அபூதாலிபின் மார்புகளில் இருந்து பால் வந்ததாம்.**

அபூதாலிப் என்பவரை பசுவாகவோ், பெண்ணாகவோ இருந்திருப்பின் அவரது மார்பகத்தில் இருந்து பால் சுரந்ததாகக் கூறப்படும் செய்தியை நம்ப முடியும். அபூதாலிபின் சிறப்பைக் கற்பனை செய்து எப்படி எழுதப்பட்டுள்ளது என்பதைப்பாருங்கள்.

ஷீஆக்களின் மதம் கற்பனைகளால் உருவாக்கப்பட்டதுதான் என்பதை மேலும் உறுதி செய்ய அவர் பற்றிய செய்தியும் துணை செய்யும். அவர்களின் மத நூல் சொல்வதைப் பாருங்கள்.

عن أبي عبد الله قال ﷺ لما ولد النبي ع مكث أياما ليس له لبن. فألقاه أبو طالب على ثدي نفسه. فأنزل الله فيه لبنا فرضع منه أياما حتى وقع أبو طالب على حليمة السعدية فدفعه إليها» (الكافي 373/1 كتاب الحجة. باب مولد النبي ع ووفاته).

நபி (ρ) அவர்கள் பிறந்த போது பல நாட்கள் பால் இல்லாமால் இருந்தார்களாம், அப்போது, அபூதாலிப் அவரது மார்பகத்தில் நபி (ஸல்) அவர்களை அணைத்துக் கொண்டாராம். அதன்காரணமாக அல்லாஹ் அவருக்கு பாலை இறக்கிவைத்தானாம். அதில் இருந்து நபி (ρ) அவர்கள் பல நாட்கள் அருந்தினார்களாம். இது ஹலீமதுஸ்ஸஃதிய்யா (ரழி) அவர்களிடம் ஒப்படைக்கும் வரை நடந்ததாம். இது நாமாக இட்டுக்கட்டிக் கூறவில்லை ஷீஆக்களின் மூல நூலான **அல்காபி** என்ற நூலின் கதையே இது.

## இமாம்களின் பார்வையில் ராபிழாக்கள் (ஷீஆக்கள்)

قال يزيد بن هارون : (( لا يكتب عن الرافضة فإنهم يكذبون )) (شرح علل الترمذي (لابن رجب 1 / 123)

ராபிழாக்களைப் பயன்படுத்தி செய்திகளைப் பதிவு செய்வது கூடாது. ஏனெனில் அவர்கள் பொய் பேசுவர்கள். (அறிஞர் யஸீத் பின் ஹாரூன் ரஹ்)

قَالَ الشَّافِعِيّ – رَحِمَهُ اللَّه تَعَالَى – : أَقْبَلُ شَهَادَة أَهْل الْأَهْوَاء إِلَّا الْخَطَّابِيَّة ، وَهُمْ طَائِفَة مِنْ الرَّافِضَة يَشْهَدُونَ لِمُوَافِقِيهِمْ فِي الْمَذْهَب بِمُجَرَّدِ قَوْلهمْ .وَاللَّه أَعْلَم. (شرح النووي على مسلم 4 / 19)

மனோ இச்சைக்காரர்களில் (வழிகெட்ட கும்பல்களில்) ஹத்தாபியாக்களின் சாட்சியத்தைத் தவிர மற்றவர்களது சாட்சியத்தை நான் ஏற்றுக் கொள்வேன். அவர்களில் ராபிழாக்களில் (ஷீஆக்களில்) ஒரு பிரிவினர். அவர்கள் தமது மத்ஹப் கோட்பாட்டிற்கு அமைவாக சாட்சி கூறுவார்கள்.

... وَهَذَا نَوْعٌ مِنْ أَبَاطِيلِهِمْ وَعَظِيمٌ مِنْ جَهَالَاتِهِمْ اللَّاصِقَةِ بِأَذْهَانِهِمْ السَّخِيفَة وَعُقُولهمْ الْوَاهِيَة . (شرح النووي على مسلم – (1 / 38)

**ரஜ்ஆ** மரணத்தின் போது உயர்த்தப்பட்ட அலி (ரழி) அவர்கள் பூமிக்கு மீண்டும் வருவார்கள் என ஷீஆக்கள் தவறாக நம்பிக்கை பற்றி விமர்சிக்கும் இமாம் நவவி (ரஹ்) அவர்கள் ' இதுவும் அவர்களின் குப்பைத்தத்துவங்களில் உள்ளதும், அவர்களின் அவர்களின் மடமையில் உள்ளதும், கேவலாமான சிந்தனைகளில் உறைந்து போனதும், பலவீனமான அவர்களின் மூளையில் உள்ளதுமாகும் எனக்குறிப்பிட்டுள்ளார்கள்.

قال الشَّعْبي يا مالك ، إني درست الأهواء فلم أر قوما أحمق من الخشبية ، ولو كانوا من الدواب كانوا حمرا ، ولو كانوا من الطير كانوا رخما . ثم قال : أحذركم الأهواء المضلة ، وشرها الرافضة (( السنة لأبي بكر بن الخلال – (2 / 337)، والسنة لعبد الله بن أحمد (202/2) ، و (النهاية في غريب الأثر – (2 / 508)

**இமாம் அஷ்ஷபி (ரஹ்) அவர்கள்** மாலிகே! என அழைத்து, அஹ்லுல் அஹ்வா எனப்படும் இந்த வழிகேடர்களைப் பற்றிப் படித்துள்ளேன். ஹஷபிய்யாக்களை விடவும் ஒரு மடக்கூட்டத்தை நான் கண்டதில்லை. இவர்கள் மிருக இனமாக இருந்திருப்பின் கழுதைகளாக இருந்திருப்பர். பறவை இனத்தில் உள்ளவர்களாக இருந்திருப்பின் ரூஹம் (அசிங்கமான தோற்றமுள்ள) பறவை இனமாக இருந்திருப்பர் எனக் கூறிவிட்டு, **அவர்களில் மிகவும் கெட்டவர்கள் ராபிழாக்களே (ஷீஆக்களே) என குறிப்பிட்டார்கள்.**

قال الإمام الذهبي رحمه الله: "من سكت عن ترحم مثل الشهيد أمير المؤمنين عثمان فإن فيه شيئا من تشيع، فمن نطق فيه بغض وتنقص وهو شيعي جلد يؤدب، وإن ترقى إلى الشيخين بذم فهو رافضي خبيث، وكذا من تعرض للإمام علي بذم فهو ناصبي يعزر، فإن كفره فهو خارجي مارق". (**سير أعلام النبلاء** . (**370/7**)

அமீருல் முஃமினின் உஸ்மான் (ரழி) அவர்களுக்கு கருணை கிடைக்கும் வாசகத்தை மொழயாதவனிடம் ஷீஆவின் தாக்கம் இருக்கின்றது. எவன் அவர் விஷயத்தில் கோபமாக, அல்லது குறையாக எதையேனும் மொழிகின்றானோ அவன் அவன் பண்புகள் படிப்பிக்கப்பட வேண்டடிய முற்றிய ஷீஆவாகும். அவன் இரு கலீபாக்களையும் குறை கண்டால் தீய குணமுள்ள ராபிழீ (கெட்ட ஷீஆ) ஆவான். அவ்வாறே இமாம் அலி அவர்கைளைக் குறைகண்டால் அவன் தண்டிக்கப்பட வேண்டிய நாஸிபி ஆவான். அவரை அவன் காபிர் என வாதிட்டால் அவன் இஸ்லாத்தை விட்டும் வெளியேறிய கவாரிஜ் ஆவான். என இமாம் தஹபி (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

قال صاحب طبقات الحنابلة: "وأما الرافضة فإنهم يسمون أهل السنة الناصبة، وكذبت بل هم أولى بهذا، لإنصابهم أصحاب **رسول الله ρ بالسب والشتم، وقالوا فيهم بغير الحق ونسبوهم إلى غير العدل، كفرا وظنا وجرأة على الله تعالى واستخفافا بحق الرسول ρ، والله أولى بالتعيير والانتقام منهم**". طبقات الحنابلة (36/1).

**ராபிழாக்கள்** (கோடிய ஷீஆக்கள்) அஹ்லுஸ்ஸுன்னா மக்களை 'நவாஸிப்' ( அலி ரழி) அவர்களைக் கோபிப்பவர்கள், திட்டுபவர்கள்) என அழைக்கின்றனர். உண்மையில் அந்தப் பெயருக்கு மிகப் பொருத்தமானவர்கள் அவர்களே! ஏனெனில் இவர்களே ஸஹாபாக்களை இவ்வாறு அழைப்பவர்கள். அவர்கள் விஷயத்தில் உண்மைக்குப் புறம்பான பலதைக் கூறியுள்ளனர். நீதியற்ற பலதை இவர்கள் பக்கம் இணைத்துள்ளனர். இதைக் குப்ராகவும், சந்தேகத்திலும், அல்லாஹ்வின் மீது கூறுவதைப் பொருட்படுத்தாதும், அவனது தூதரைக் கேவலப்படுத்தியும் (இவ்வாறு செய்துள்ளனர்). என தபகாத்துல் ஹனாபிலா எழுதிய இமாம் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

## ஷீஆக்களின் சீர்கேடுகளை நிரூபிக்கும் சில ஆவணங்கள்.

∃ ஆஷுரா தினத்தில் **நோன்பு நோற்காது தம்மைத்தாமே வருத்திக் கொள்ளும் கொடூர காட்சிகள்.**









ஆஷுரா த் தினத்தில் நோன்பு நோற்காது வீணாக இரத்தம் சிந்தும் கோலம்.





யூதர்களின் மதக்குருக்களை ஒத்த ஷீஆ மதக்குருக்கள்.





# ஈரானில் இஸ்லாம். நிஜமும், நிழலும்.

ஈரான் இஸ்மாயிக்குடியரசு என்ற பெயரில் உலக முஸ்லிம்களுக்கு தன்னைப் பற்றி அறிமுகப்படுத்திக் கொண்ட நாமே ஈரான். இந்த நாட்டில் இஸ்லாத்திற்கு மாற்றமாக நடை பெறும் பல அம்சங்களை அடையாளப்படுத்தி நாம் எழுதுகின்ற போது அதை நம்பமுடியுமா என பலர் சிந்திக்கின்றனர். மற்றும் சிலர் நம்மை சியோனிசக்கயவர்களின் அடிவருடிகளாக சித்திரிக்கின்றனர். மற்றும் பல அரபு நாடுகளின் அடிமைகள் என நம்மைத் தூற்றுகின்றனர்.

அதனால் ஈரானுக்கு இஸ்லாம் எவ்வாறு வந்து சேர்ந்தது? அது எந்த அடிப்படையில் செயலிழந்துள்ளது? அங்கு ஷீஆ மதம் எவ்வாறு ஊடுருவியது போன்ற சந்தேகங்களுக்கு விளக்கம் தரும் வகையில் இதை எழுதுகின்றோம்.

நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னர் இரண்டாம் கலீபா உமர் பின் கத்தாப் (ரழி) அவர்களின் ஆட்சியின் தொடக்கத்தில் இஸ்லாமியச் சுடர் ஹிஜ்ரி 13-ம் ஆண்டு ஈரானை வந்தடைந்தது.

ஹிஜ்ரி 21ம் ஆண்டு **நஹாவன்ந்து** போரில் முஸ்லிம்கள் பெற்ற மாபெரும் வெற்றி இஸ்லாமிய வரலாற்றில் **'பத்ஹு ல் புதூஹ்' வெற்றிகளின் வெற்றி** என்று வர்ணிக்கப்படுகின்றது.

உமர் பின் கத்தாப் (ட) அவர்களின் மரணத்தின் பின்னர் ஆட்சி செய்த உஸ்மான (ரழி) அவர்களின் காலத்தில் ஈரானைச் சூழ உள்ள அனைத்து

நகரங்களையும் முஸ்லிம்கள் வெற்றி கொண்டனர். இறுதியாக **ஸாஸானியர்களின்** ஆட்சி முடிவுக்கு வந்தது. இஸ்லாம் கோலோச்சியது.

இவ்வாறு ஹஜ்ரி21 முதல்- 907 வரை ஈரான் இஸ்லாமிய நிழலில் காணப்பட்டது. இதில் நான்கு கலீபாக்கள், உமையாக்கள், அப்பாஸியர் என்ற ஆட்சியாளர்களால் இது ஆளப்பட்டு வந்துள்ளதை அறியலாம்.

அப்பாஸியர் ஆட்சி வீழ்ச்சியின் போது சுன்னா கொள்கையின் வழியில் நடை போட்ட ஈரானில் 907ல் ஸபவிய்யீன்களின் (ஷீஆக்களில் ஒரு பிரிவினர்) ஆட்சி ஹிஜ்ரி அமைந்து, இவர்களால் ஹிஜ்ரி 957 ல் ஷீஆ மத்ஹப் அந்நாட்டின் உத்யோகபூர்மான மத்ஹபாகப் பிரகனப்படுத்தப்படுகின்ற வரை கிட்டத்தட்ட ஒன்பது நூற்றாண்டுகள் வரை சுன்னா வழியில்தான் நிலைத்து நின்றது. 957ற் குப் பின்போ இந்த சிந்தனை பாரிய தாக்கம் செலுத்தியது.

## ஈரான் பெற்றெடுத்த அறிஞர்கள்.

ஈரான் இஸ்லாமிய மத்ஹபைப் பின்பற்றி வாழ்ந்த காலத்தில் நூற்றுக்கணக்கான அறிஞர்களைப் பெற்றெடுத்துள்ளது. கல்வி விண்ணில்தான் காணப்பட்டாலும் பாரஸீகத்து மக்கள் அதை அடைந்து கொள்வார்கள் என ஸல்மான் பாரிஸி (ரழி) அவர்கள் இருந்து கொண்டிருந்த போது நபி (ஸல்) அவர்களால் கூறப்பட்ட பாரிஸீகத்தில் பிறக்கும் பலர் அறிஞர்களாக இருப்பார்கள் என்பதே நிஜம். இதனாலோ என்னவோ, அங்கும், அதைச்சூழ உள்ள மாகணாகங்களிலும் அறிவியல் முன்னோடிகள் தோன்றினனர்.

முஹத்திஸீன்கள், புகஹாக்கள், அரபு இலக்கிய கவிஞர்கள், தப்ஸீர் விரிவுரையாளர்கள் எனப் பலர் தோன்றி மறைந்த தேசமாகும். கலீபா உமர் (ரழி) அவர்களின் ஆட்சிமுதல் பத்தாம் நூற்றாண்டுவரை இதன் பிரகாசம் மங்காது ஜொலித்துக் கொண்டிருந்தது.

இமாம்களான முஸ்லிம், ஹாகிம் அந்நைஸாபூரி, தபரி, பஹ்றுர்ராஸி, ஸரஹ்ஸி, பைறூனி, ஷஹ்ருஸ்தானி, ஃபாராபி, திர்மிதி, அபூதாவூத், ஹலீல்பின் அஹ்மத், இலக்கணத்தின் தந்தை என போற்றப்படும் ஸீபவைஹி போன்ற அறிஞர்கள் இந்த நாட்டில் பிறந்த மாமேதகளே! இவர்கள் அஹ்லுஸ்ஸு ன்னாவைச் சேர்ந்த இமாம்களாகும்.

குராஸான் மாநிலத்தின் பெரும்பாலான தலைநரகங்களைப் பொறுத்தவரை மிகச் சிறந்த ஹதீஸ் அறிவிப்பாளரர்கள் தோன்றி மறைந்த நகரங்களாக இருக்கின்றன. உதாரணமாக பிஸ்த், ஹறாத், நஸஃ, பல்ஹ், புஹாரா, ஸமர்கன்த், மருவ், ஜு ர்ஜான், நைஸாபூர், ஸர்ஹஸ், ரய், (இப்போதெய தஹ்ரான்), தூஸ் இவை அவற்றில் சிலவாகும். புகாரி, முஸ்லிம், திர்மிதி, அபூதாவூத், இப்னுமாஜா, நஸயி, இப்ஹிப்பான் போன்ற தலை சிறந்த ஹதீகலை அறிஞர்களும் இந்த பிரதேசங்கைளச் சார்ந்தவர்களே!.

அப்பாஸியர் ஆட்சியில் (132- 656) வரை சுன்னாக் கொள்கையுடன் காணப்பட்ட ஈரான் ஷீஆ இசத்தை ஸபவிய்யீன்கள் மூலமே தனதாக்கிக் கொண்டது.

## அப்பாஸியர் ஆட்சியில்

உமைய்யாக்களிடம் காணப்பட்ட ஈரானின் ஆட்சி அப்பாஸியர் ஆழுகையின் கீழ் மாறியது ஈரானியருக்கு சாதகாமானதொரு நிலையை தோற்றுவித்தது எனலாம். அதில் அவர்கள் தமது செல்வாக்கைப் பயன்படுத்தி, ஆரம்பத்தில் இருந்தே ஈரானியர் அமைச்சுப் பதவிகளில் அங்கம் வகித்தனர்.

இது கிட்டத்தட்ட அரைநூற்றாண்டுகள் வரை அதாவது 132- 187 வரை. **ஸப்பாஹ்** என்ற அப்பாஸிய முதல் ஆட்சியாளர் முதல் ஐந்தாவது ஆட்சியாளரான **ஹாரூல் அல் ரஷீத்** வரை என இஸ்லாமிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறாகள்.

**தாஹிர் பின் ஹு ஸைன்** என்ற தனது தளபதி ஹிஜ்ரி 205ல் தனது சகோதரரான அல்அமீன் என்பவரை வெற்றி கொண்டார் என்ற காரணத்திற்காக மஃமூன் தாஹிருக்கு குராஸானின் அதிகாரத்தை வழங்கியதை தாஹிர் ஒரு சந்தர்ப்பமாகப் பயனப்படுத்தி **'தாஹிரிய்யா'** என்ற சிற்றசை நிறுவினார். ஏறத்தாள ஐம்பது ஆண்டுகள் அதவாது (ஹி: 355- 359) வரை குராஸான் இவரது ஆட்சியின் கீழ் காணப்பட்டது.

ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பப்குதயில் தொடரப்பட்ட தாஹிரின் செயல்பாடு பல குட்டி ஆட்சிகள் உருவாகக் காரணமாக இருந்தது. ஸபாரிய்யா (259-279), ஸாமானிய்யா (259- 389), கஸ்னவிய்யா போன்ற சிற்றசுகளின் தோற்றம் இதன் தாக்கமே. இவை அனைத்தும் அப்பாஸிய சுன்னி ஆட்சியின் கீழ் மறைமுகாக தோன்றியுள்ளதை இதன் மூலம் அறியலாம்.

## ஈரான் சந்தித்த படை எடுப்புக்கள்

ஹிஜ்ரி 279ல் யகூப் ஸபாரியின் படைகளுக்கும், ஸாமானியர் படைக்களுக்கும் இடையில் மூண்ட போரால் ஸாமானியர் சபாரிகளை வெற்றி கெண்டனர். இதன் மூலம் கிழக்கு ஈரானில் இஸ்மாயீல் அஸ்ஸாமானி என்பவன் பெயரில் **'ஸாமானியா'** என்ற புதிய அரசை நிறுவும்  வாய்ப்பைப் பெற்றனர். இந்த ஆட்சி குராஸான் மாநிலம் உட்பட பல நகரங்ளை இணைத்துக் கொண்டு ஹிஜ்ரி 389 வரை நீடித்தது.

ஸாமானிய ஆட்சியாளர்களில் ஒருவரான **நஸ்ர் பின் அஹ்மத்** என்பவனின் வீரியத்தினால் குராஸானை அண்டிய பிரதேசமான ஸிஜிஸ்தான், தபரிஸ்தான், ரய், கிர்மான் போன்ற முக்கிய பல நகரங்கள் அவனது ஆழுகையின் கீழ் வந்தது. ஆனால் சுன்னி மத்ஹபை கடுமையாக எதிர்ப்பவர்களாக ஸாமானியர் காணப்பட்டனர். இவர்களின் ஆட்சியை எதிர்த்து சுன்னா அறிஞர்கள்  கிளர்ச்சி செய்தனர்.

மற்றொரு திசையில் துர்கிஸ்தானுடன் ஸாமானியர் போர் தொடுத்தனர். இதன் மூலம் துர்க்கியர்களில் பலர் ஸாமானிய நாட்டின் ஆட்சியின் கீழ் இணைந்தனர். காலப்போக்கில் ஸாமானியரை துர்க்கியர் வீழ்த்தினர். அதனால் மற்றொரு புதியதொரு சகாப்தம் அங்கு உருவானது. அதுதான் அன்றைய இஸ்லாமிய நாடான ஈரானில் துர்க்கியர் செல்வாக்கு உதயமாகும்.

இந்தக் காலக்கட்டத்தில் துர்க்கியர் சக்திவாய்ந்ததொரு ஆட்சியை பெர்துவாகவும், குறிப்பாக ஈரானில் அமைத்திட இந்த வெற்றி நல்லொதொரு வாய்ப்பளித்தது. இதன் மூலம் சதியின் மூலம் கொலை செய்யப்பட்ட சுன்னாக் கொள்கை மீண்டும் ஈரானில் தாக்கம் செலுத்த ஆரம்பித்தது.

அப்பாஸிய கலீபாக்களில் ஒருவரான **முஃதஸிம் பின் மஃமூன் என்பவரின்** தாய் துர்க்கி நாட்டுப் பெண்ணாக இருந்ததனால் அப்பாஸிய கலீபாக்கள் துர்க்கியரிடம் உதவி கோருபவர்களாக இருந்தனர். முஃதஸிம் ஹிஜ்ரி 218-முதல் 227 வரை ஆடசியில் இருந்தார்.

மேலும் ஈரான் கஸ்னவிக்களின் ஒத்துழைப்பையும் பெற்றிருந்தது. மஹ்மூத் சுல்தான் அல்கஸ்னவியின் காலத்தில் நல்ல முன்னேற்றம் கண்டது. பாரிய வெற்றிகளை ஈட்டியது. சுன்னாவிற்கு துணைபோன நாடாகவும் விளங்கியது.

சுல்தான் கஸ்வியின் தோல்வியின் பின் ஸலாஜிககாக்கள் அல்லது ஸல்ஜோக்கியர் என்ற பிரவினிரின் ஆட்சி ஹிஜ்ரி 429ல் குராஸானில் மீண்டும் உதயமானது. இவர்கள் வெளிப்படையிலேயே உண்மையான சுன்னாவாதிகளாகவும், ஷீஆ எதிரிப்புடையோராகவும் காணப்பட்டனர், மாத்திரமின்றி சுன்னாக் கொள்கையில் கடும் போக்குடையவர்களாகவும் இருந்தனர்.

ஸல்ஜோக்கியர் ஆட்சியின் முடிவில் ஹஜ்ரி 590ல் குவாரஸ்மிய ஆட்சி உதயமானது. இந்தக்கால கட்டத்திலும் ஈரானில் சுன்னிக் கொள்கையின் தாக்கமே பரவலாகக்

காணப்பட்டது. குறிப்பாக ஹிஜ்ரி 656ல் அப்பாஸிய ஆட்சியின் வீழ்ச்சியின் பின்பும் அதன் செல்வாக்கே தொடர்ந்தது.

ஈரானையும், ஈராக்கையும் ஆட்சி செய்த ஸல்கோக்கியர் 590ல் தொடங்கிய ஆட்சியானது 1194 ல் வீழ்ந்தது. இது பக்தாதை ஆட்சி செய்த அப்பாஸியரின் ஆட்சிக்கு இறுதியின் ஆரம்பாமகும். மங்கோலியர் சுன்னாப் பிரதேசங்களை ஆக்கிரமித்ததும் இந்த வீழ்ச்சியின் காரணிகளில் ஒன்றாகும் .

மங்கோலியர் துர்க்கிய இனத்தைச் சேர்ந்தவர்களான இருந்ததால் மத்திய ஆசியாவில் சிலை வணங்கியர்களாகவும் காணப்பட்டனர். இவர்களின் முதலாவது அரசன் **(தமூஜீன் என்ற) ஜன்கீஸ்ஹான் என்பவன்** குவாரிஸ்மிய ஆட்சியின் இறுதி எல்லை வரை படை எடுத்தான். ஹிஜ்ரி 599ல் அதன் இறுதி எல்லையை வந்தடைந்தனர்.

ஹிஜ்ரி 656ல் பாரஸீகம் இவர்களால் முற்றுகை இடப்பட்டது. சுன்னாவாதியான அப்பாஸிய கலீபா **அல்முஃதஸிம் பில்லாஹ்** ஆறுமாத தொடர் முற்றுகையின் பின்னால் கொலை செய்யப்பட்டார். மங்கோலியர் ஈரானையும் ஈராக்கையும் தமது ஆளுகையின் கீழ் கொண்டு வந்தனர். அவர்கள் ஈரானை தமது தலை நகராக எடுத்துக் கொண்ட போதும் தமது பண்பாடுகளையும், கலாச்சார விழுமியங்களையும், ஏன் ஆடைகளைக் கூட மாற்றம் செய்கின்ற அளவு சுன்னாவின் தாக்கம் அங்கு பரவலாகக் காணப்பட்டது.

மங்கோலியர் ஈரானின் ஆட்சியைக் கைப்பற்றினாலும் அரச அலுவலங்களில் வேலை செய்யும் ஈரானியர் பக்கம் தேவையுடையோராக மங்கோலியர் இருந்தனர். இதனால் ஈரானியர் உயர் பதவிகள் வகிக்கும் நிலையும் காணப்பட்டது.

வீரர்களாகவும், படை பலத்தில் அதிகமானவர்களாகவும் காணப்பட்ட மங்கோலியர் நாளடைவில் இஸ்லாமிக ˙கலாச்சாரத்தால் கவரப்பட்டு அதில் இணைந்தனர். இது ஈரானியர் இழந்த சக்தியை மீண்டும் பெற்றுத் தந்தர வாய்ப்பளித்தது.

ஹிஜ்ரி எட்டாவது நூற்றாண்டின் அரைவாசிப் பகுதியில் **தைமூர்** என்பவரின் தலைமயில் தைமூர்கள் ஈரானுக்கு எதிராக படை எடுத்தனர். குராஸானின் பல நகரங்களைக் கைப்பற்றினர். பின்னர் ஈரான், ஈராக், சிரியா போன்ற நாடுகளைத் தாக்கி அவற்றி சில பகுதிகளையும், இந்தியாவின் ஒரு பகுதியையும் கைப்பற்றினர். ஸமர்கன்கந்தின் தலை நகரான தைமூரை தமது ஆட்சித் தலைநகரமாக எடுத்து செயல்பட்டனர்.

எனினும் ஹிஜ்ரி 807ல் தைமூரிய ஆட்சியின் அதிபதியாகிய தைமூர் அவர்களின் மரணித்தைத் தொடர்ந்து அவரது புதல்வர்கள், பேரப்பிள்ளைகள் மத்தியில் ஆட்சி அதிகாரத்தில் சர்ச்சை ஏற்பட்டது. அதனால் தைமூரியப் பேரசு சிதறுண்டு சுக்குநூறாகியது.

இதன் விளைவாக அஸர்பைஜானை **பைலோ கிரா** எனப்படும் கோத்திரத்தினர் ஹிஜ்ரி 811-ல் கைப்பற்றினர். ஈரானின் மேற்குப்பகுதியை ஆண்டனர். பின்னர் பக்தாத் வரை இவர்களின் செல்வாக்கைப் பதித்தனர். பின்னர் தைமூர்கள் ஈரானின் கிழக்குப் பகுதியை ஆட்சி செய்தனர். இது ஹிஜ்ரி 911 வரை நீடித்தது.

இவ்வளவு குழப்பங்கள், படை எடுப்புக்கள் மத்தியிலும் அப்பாஸியர் வீழ்ந்தும் ஈரான் ஏறத்தாள இரண்டரை நூற்றாண்டு காலம் வரை சுன்னாக் கொள்கையின் தாக்கத்தில் மோலேங்கிக் காணப்பட்டது அதன் சிறப்பம்சமாகும்.

ஷீஆ மதத்தைச் சார்ந்த **இஸ்மாயீல் அஸ்ஸபவி** என்பவன் பெயரில் ஹிஜ்ரி 906-ல் நிறுவப்பட்ட ஸபவிய்யா என்ற ஷீஆக்கள் ஈரானைக் கைப்பற்றி, ஹி: 907ல் **இஸ்னா அஷ்ரிய்யா** என்ற ஷீஆக்கொள்கை நாட்டின் பிரதான மத்ஹபாகப் பிரகடனப்படுத்தப்படுகின்ற வரை சுன்னாக் கொள்கையிலேயே ஈரான் நிலைத்து நின்றது.

நீங்கள் நன்றாகக் கவனித்தால் ஆட்சிகள் விதி விலக்கின்றி ஈரான் கிட்டத்தட்ட பத்து நூற்றாண்டுகள் வரை சுன்னாக் கொள்கையில் காணப்பட்டுள்ளது என்ற உண்மையையும், அதன் பின்னரே ஷீஆக்களின் முதல் நாடாக அது மாறி இருக்கின்றது என்ற உண்மையையும் அறிந்து கொள்வீர்கள்.

இந்த இஸ்மாயில்தான் ஷீஆ மத்ஹபை ஈரானில் முதல் மத்ஹபாகப் பிரகடனப்படுத்தினான். ஈரானின் தற்போதைய அரசியல் யாப்பு (பைலா) சிறிய வித்தியாசத்துடன் உதயமாகி இருக்கின்றது. மார்க்கம் இஸ்லாம். மத்ஹப் ஜஃபரி எனபதே அதன் யாப்பாகும்.

## இஸ்மாயீஸ் ஸபவி செய்த சாதனைகள்.

1) ஈரானைக் கைப்பற்றியமை.

2) ஷீஆ மத்ஹபைப் பிரகடனப்படுத்தியமை.

3) வீதிகளில் சிலரை அனுப்பி அபூபக்கர், உமர் (ரழி) ஆகிய கலீபாக்களைத் திட்டுமாறு பணித்தமை.

4) யார் நபித்தோழர்களைத் திட்டவில்லையோ அவர்கள் தம்மைச் சாராதவர. அவர்களை விட்டும் நாம் நீங்கியவர்கள் என அறிவிக்கும்படி தனது ஸஹாக்களைப் பணித்தமை.

5) ஈரானில் வாழ்ந்த சுன்னிகள் ஷீஆக் கொள்கையை வலுக்கட்டாயமாக ஏற்றுக் கொள்ள வேண்டும், தவறினால் நாட்டை விட்டும் துடையத்தெறியப்படுவர் என எச்சரித்து மக்களை வழி கெடுத்தமை போன்ற பல கொடுமைகள்.

இந்த நடவடிக்கை உஸ்மானிய ஆட்சியாளரான **சுல்தான் முதலாவது ஸலீம்** அவர்களின் கோபத்தைக் கிளறியது. அவர் தப்ரீஸைத் தலை நகராகக் கொண்ட ஸபவிய்யாக்களை படை எடுப்பின் மூலம் வீழ்த்தினார். பின்னர் அதை தனது ஆளகையின் கீழ் கொண்டுவராது அங்கிருந்து வாபஸ் பெற்றார். இது ஸபவிக்கள் மீண்டும் ஆட்சியல் அமர வழி கோலியது. சுல்தான் ஸலீம் அவர்களின் இந்த நடவடிக்கைக்குப் ஷீஆக்கள் பழிவாங்கினர். அதனால் பல்லாயிரணக்கான சுன்னி முஸ்லிம்கள் கொலை செய்யப்பட்டனர். அதற்கு சுல்தான் ஸலீம் மூலம் மீண்டும் பதலிடி கொடுக்கபப்ட்டது.

இவ்வாறு சுன்னாக்களால் பலத்த பதிலடி வாங்கியும் ஷீஆக்கள் தமது ஆட்சியை இன்று வரை தக்க வைத்துக் கொண்டனர் என்றால் சுன்னா ஆட்சியாளர்களின் அசமந்தப்போக்கினால்தான் ஷீஆக்கொள்கை பரவியது என்று கூறமுடியும்.

இந்த ஈரானில் இருந்தான் கொடியவன் தஜ்ஜால் தோன்றுவான் என்பதை நபி (ρ) அவர்கள் முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள். என்பதை மறந்து விடாதீர்கள்.

இந்த வழிகேடர்களில் கராமித்தாக்கள் என்ற ஒரு பிரவினர் உள்ளனர். எல்லாம் ஒரு குட்டையில் ஊறிய மட்டைதான். இவர்கள் ஹிஜ்ரி 317 காலப் பகுதியில் புனித மக்கா ஹரத்தில் புகுந்து ஹாஜிகளையும், உலமாக்கள் பலரையும் கொலை செய்து, பல பெண்களைக் கற்பழித்து இரத்தக் கறைபடிந்த மாபெரும் வரலாற்றை ஹரத்தின் வளாகத்தில் தோற்றுவித்தது. அதுமாத்திரமின்றி ஹஜருல் அஸ்வத் கல்லையும் கழற்றிக் கொண்டு சென்று அதைத் தம்முடன் கிட்டத்தட்ட 22 வருடங்கள் வைத்திருந்து அதை மீண்டும் ஹி 339ல் மீட்டினர்.

இன்றைய ஷீஆக்களும் இதற்கு விதிலக்கானவர்கள் அல்லர் என்பதை குமைனியின் கட்டயைினி பேரில் 1983 காலப்பகுதியில் புனித மக்கா ஹரத்தில் ஜனாஸாக்களைச் சுமந்து செல்பவர்களைப் போன்று ஆயுதங்களுடன் நுழைந்து அரங்கேற்றிய கொடிய செயலை ஈரானியத் துதி பாடிகள் மறுக்க முடியுமா?

20- 02- 2009 காலப்பகுதியில் மதீனா கப்றுஸ்தான் பகீயில் நுழைந்து இந்த வழிகேடர்கள் புரிந்த அட்டகாசங்களை மறைக்க முடியுமா? இவை அனைத்தும் ஸஹாபாக்கள் மீதுள்ள காழ்ப் புணர்ச்சியை உணர்த்தவில்லையா?

புனித மக்கா, மற்றும் மதீனாவின் இரு பள்ளிகளையும் தமது மேற்பார்வையின் கீழ் கொண்டு வர வேண்டுமென்ற உள்நோக்குடன் 2009 லண்டலில் மாபெரும் ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்ட வழி கெட்ட ஷீஆக்கள் அந்த இரு புனித இல்லங்களையும் ஐ.நாடுகள் சபையின் கீழ் கொண்டு வர வேண்டும் எனக் கோஷமிட்னர். இதன் பின்பும் இந்தக்கும்பல் இஸ்லாமியனருடன் இணைத்துக் கூறப்படலாமா என ஷீஆ மத நல்லெண்ணம் கொண்டவர்கள் சிந்திக்க வேண்டும்.

## அஷ்அரிய்யாக்கள்

அஷ்அரிய்யாக்கள் என்போர் அபுல்ஹஸன் அல் அஷ்அரி என்ற அறிஞரின் சிந்தனைகளைப் பிரதிபலிக்கும் அஹ்லுல் கலாம் எனப்படுவோருடன் இணைத்துக் கூறப்படும் ஒரு பிரிவாகும். இவர்கள் அஷாயிரா, அஷ்அரிய்யா என்ற குறிப்பான பெயரிலும், முஅவ்விலா (தவறான விளக்கம் தருவோர்) என்ற பெயரில் பொதுவாகவும் அழைக்கப்படுகின்றனர்.

இமாம் அபுல் ஹஸன் அஷ்அரி (ரஹ்) அவர்கள் அகீதா கோட்பாட்டில் பல காலகட்ட நிலைகளைக் கடந்தே தனது கொள்கைகையை உறுதி செய்தவர்கள் என்ற காரணத்தினாலும், இலங்கை, தென்னிந்திய அரபிக்கல்லூரிகளில் அவரது சிந்தனைக் கருத்துக்கள் என்ற பெயரில் ஜஹ்மிய்யாக்கள், வஹ்தத்துல் உஜூ த் போன்ற வழிகெட்ட பிரிவினரின் கொள்கைகள் மாணவர்களுக்கு அகீதா என்ற பெயரில் போதிக்கப்படுவதாலும் அந்தப் பெருந்தகை கடந்து வந்த பாதை பற்றி அறிந்து கொள்வது அவசியமாகும்.

## அஷ்அரிய்யாக் கொள்கையைப் போதிப்போர்

இஸ்லாமியக் கல்லூரிகள் என்பது சுவனத்து பாதைக்கு மாத்திரம் வழிகாட்டும் கல்லூரிகளாக இருந்த காலம் மலையேறி, அவற்றில் சில சுவர்க்கத்தின் பக்கமும், மற்றும் சில நரகத்தின் பக்கமும் அழைப்பு விடுக்கின்ற அரபுக்கல்லூரிகளாக மாறிவருவது கசப்பான உண்மையாகும்.

தென்னிந்தியாவில் காணப்படும் பெரும்பான்மையான அரபிக்கல்லூரிகளின் வளாகத்தில் அவ்லியாக்களின் கப்றுகளும் இணைந்தே காணப்படுகின்றன. உலகத்து மக்களுக்கு இஸ்லாத்தை அசல்வடிவில் போதிப்பதாக பீற்றிக் கொள்ளும் தப்லீக் தலைமையகமான டில்லியில் அமைந்துள்ள தலைமை மர்கஸில் கூட நிஜாமுத்தீன் வலியுல்லாஹ் என்பவர் பெயரில் கப்று வணக்கம் அரங்கேற்றப்பட்டுகின்றது.

தமிழ்நாட்டில் பிரசித்தி பெற்ற அரபிக்கல்லூரியான வேலூர் பாகியாத் மத்ரஸாவில் கூட இன்றுவரை கப்ரில் யாசீன் ஓதப்பட்டு அங்கு அடங்கப்பட்டவரிடம் ஆசீர்வாதம் வேண்டப்படுகின்றதாம். இவை சுவனத்தை நோக்கி அழைக்கின்ற இஸ்லாமிய அரபிக்கல்லூரிகளில் காணப்படலாமா?

தமது அடிப்படைக் கொள்கை பற்றி அடிநுணி கூடத் தெரியாத ஷாபி மத்ஹப் மக்கள் கப்று வணக்கத்தை ஆதரிப்போராகவும், நம்பிக்கையில் அஷ்அரிய்யாக்களாகவும், மத்ஹபில் ஷ:பிகளாகவும் இருக்கின்றார்கள்.

இவர்கள் ஜஹ்மிய்யாக்கள், முஅத்திலாக்கள், அனைத்தும் அவனே, அனைத்திலும் அவனே என்ற வஹ்தது உஜூ த், அஹ்லுல்ஹு லூல் வல்இத்திஹாத் மற்றும் ஷீஆ, தரீக்கா, சூபிய்யா, போன்றோரின் பன்முகப்படுத்தப்பட்ட நம்பிக்கைகள் கலந்த பித்அத்வாதிகளாக இருக்கின்றார்கள்.

அதே வேளை தம்மை இமாம் ஷா:பி (ரஹ்) அவர்கள் பேரில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள மத்ஹபில் இருப்பதாகவும், இமாம்களை மதிப்போராகவும் கூறிக் கொள்ளும் இவர்கள் தமது மத்ஹபினதும், இமாம்களினதும் நம்பிக்கைக்கு கோட்பாட்டிற்கு முரணான பல நம்பிக்கைகளை உடையோராக இருப்பதை நினைக்கின்ற போது ஆச்சரியம் கலந்த வேதனையாக இருக்கின்றது.

அல்லாஹ்வின் தூதர் தனது தோழர்களை எந்த நம்பிக்கையின் அடிப்படையில் வளர்த்தார்களோ, அந்த நம்பிக்கையில் அவர்களின் தோழர்கள், தாபியீன்கள், தபவுத்தாபியீன்கள், இமாம்கள் அனைவரும் தமது நம்பிக்கைக் கோட்பாட்டை கட்டிக்காத்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தின் பெயரைப் பயன்படுத்திக் கொண்டு அப்பாஸியர் ஆட்சிக்கு எதிராக கிளர்ந்தெழுந்த ஷீஆ சமுதாயமே இந்த சமுதாயத்தில் ஸஹாபாக்களைத் திட்டுதல், உம்மஹாத்துல் மு:மினீன்களை தூசித்தல், குர்ஆனுக்கு தவாறன விளக்கம் தரல், கப்று வணக்கத்தை அறிமுகப்படுத்தியமை மீலாது, மௌலிது கொண்டாட்டங்கள் போன்ற சாக்கடைகளை மக்களைத் தம்பக்கம் ஈர்த்துக் கொள்வதற்காக உருவாக்கினர்.

இந்த சதிகாரக் கும்பலுடன் நபி (ஸல்) அவர்களின் பரம்பரையினர் என தம்மை இனம் காட்டிக் கொண்ட அபூ ஜஹ்லின் நம்பிக்கையைச் சுமந்த சூபிகளில் ஒரு குழுவினர் கைகோர்த்தனர். தீனுக்கு அல்லாஹ்வின் கட்டளை, நபி (ε) அவர்களின் வழிமுறை என வாயளவில் விளக்கம் தரும் தப்லீக் ஜமாஅத்தினரும் இணைந்து செயல்படுகின்றனர்.

தூய இஸ்லாத்தைக் கூறுவதற்காக த:வாக் களத்தில் பணிபுரியும் தாயீக்களை இந்த வழிகெட்ட பிரிவுகளுடன் இணைந்து தாக்கினர். பாத்திலான எந்தக் கொள்கைகளையும் பாதிலானவை என அடையாளம் காட்டத்தவறியதன் விளைவுதான் மார்க்கத்தின் பெயரால் முளைத்த இந்த அஷ்அரிய்யா, மாத்ருதிய்யா, ஷீஆ, தரீக்காக்கள் போன்ற கொள்கைப் பிரிவுகள்.

இவ்வாறான பிரிவுகளுக்கும் ஷாபி (ரஹ்) அவர்களுக்கும் எவ்வித சம்மந்தமும் இருந்ததில்லை என்பதை மிகத் தெளிவாக விளக்கவே அஷ்அரிய்யாக்கள் பற்றிய அறிமுகம் வாசகர்களுக்கு இங்கு தரப்படுகின்றது. அரபிக்கல்லூரிகளில் அகீதாப்பாடமாக என்னதான் சொல்லிக் கொடுக்கின்றார்கள் என்பதை இதன் மூலம் நீங்கள் எடை போட்டுக்கொள்ளலாம்.

## அபுல் ஹஸன் அல் அஷ்அரி (ரஹ்) அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு.

**இயற்பெயர்:** அபுல் ஹஸன் அலி பின் இஸ்மாயீல் அல் அஷ்அரி (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 270-ல் பஸரா நகரில் பிறந்தார்கள் . அபூ மூஸா அல் அஷ்அரி (ரழி) அவர்களின் பரம்பரையில் வந்தவர் என்ற காரணத்தினால் அவர்களின் பரம்பரைப்

பெயருடன் இணைத்துப் பேசப்படும் இமாமவர்கள் **‘நாஸிருஸ்ஸுன்னா’** சுன்னாவின் உதவியாளர் என்ற சிறப்புப் பெயருடன் வாழ்ந்தார்கள். அறுபத்தி எட்டு நூல்களை இஸ்லாமிய சமுதாயத்திற்கு விட்டுச் சென்றார்கள் என்பதற்கு குறிப்பிடத்தக்கதாகும். ஹிஜ்ரி 324ல் பக்தாதில் இமாமவர்கள் மரணமானார்கள். **அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொள்வானாக!**

## அல்**அஷ்அரி (ரஹ்) அவர்கள் கடந்து வந்த பாதை.**

முஃதஸிலாக்களின் தாக்கம் பரவலாகக் காணப்பட்ட அப்பாஸியர் ஆட்சியில் முஃதஸிலாத் தாக்கம் அதிகம் காணப்பட்டதால் இஸ்லாமிய உம்மதில் கொந்தளிப்பானதொரு நிலையை உருவாக்கியது.

அப்பாஸிய ஆட்சியாளர்கள் சிலரால் அஹ்லுஸ்ஸுன்னாவைச் சேர்ந்த பேறிஞர்களான இமாம்கள் கொடுமையான முறையில் மிக மோசமாக நடத்தப்பட்டார்கள். கடுமையாக வதைக்கப்பட்டார்கள், சித்திரவதை செய்யப்பட்டார்கள், இதை நீங்கள் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். இதற்கு பஸராவில் வாழ்ந்த இமாம் அஷ்அரி அவர்களும் விதிவிலக்கானவர்கள் அல்லர். அவர்கள் மூன்று கட்டங்களைக் கடந்து மூன்றாவது கட்டத்தில்தான் இமாம் அஹ்மத் போதனை செய்த அகீதாக் கோட்பாட்டை சரி கண்டார்கள்.

### முதலாவது கட்டம்:

அஷ்அரி இமாமவர்கள் முஃதஸிலாக்களின் பிரதம குரு என்றழைக்கப்படும் **அபூ அலிஅல்ஜபாயி** என்பவரின் அரவணைப்பிலும், கொள்கையைப் படித்தும் வாழ்ந்தார்கள். அல்ஜபாயின் கொள்கையை சிறப்பாகக் கற்றதனால் அவரது இடத்தில் இவரை நியமிக்கலாம் என்ற அளவு முஃதஸிலாக் கொள்கையில் உச்ச நிலையில் இருந்தார்கள். இவ்வாறு இவரோடு நாட்பது ஆண்டுகள் காலம் வாழ்நதார்கள்.

### இரண்டாவது கட்டம்:

பதினைந்து நாட்கள் தனது வீட்டில் தொடராகத் தங்கி இருந்து பின்னர் மக்களிடம் வெளியாகிய அஷ்அரி (ரஹ்) அவர்கள் தான் நாட்பது ஆண்டுகள் கட்டிக்காத்து வந்த முஃதஸிலாக் கொள்கையில் இருந்து முழுமையாக விலகிவிட்டதாக மக்களுக்கு அறிவித்ததோடு, அதனைக் கடுமையாக விமர்சனமும் செய்தார்கள். அல்லாஹ்விடம் நன்மை வேண்டியும், நன்றாக சிந்தித்துமே இந்த முடிவை எடுத்ததாக மக்கள் மன்றத்தில் கூறினார்கள்.

இக்கால கட்டத்தில் தனக்கென ஒரு வழிமுறையை எடுத்துக் கொண்டு அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவில் இடம் பெறும் அஸ்மா. ஸிபாத் (அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளுடன் தொடர்புடைய) வசனங்களுக்குரிய நேரடி பொருளை வழங்காது, தவறான கருத்தை தந்தார்கள்.

உதாரணமாக அல்லாஹ் அர்ஷின் மீது அமர்ந்தான், அல்லது, நிலை பெற்றான் என்பதற்கு **அல்லாஹ் அர்ஷை ஆக்கிரமித்தான்,** அல்லாஹ்வின வருகை என்பதை **அல்லாஹ்வின கட்டளையின் வருகை,** அவனது கரங்கள் என்பதை **அவனது வல்லமை, அருட்கொடை** போன்ற தவறான அர்த்தம் தந்தமை போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

அதே வேளை, (அல்ஹயாத்) **உயர்வாழ்தல், (வாழ்க்கை), (அல்இல்ம்) அறிவு, (அல்இராதா) நாட்டம், (அஸ்ஸம்ஃ) கேள்வி, (அல்பஸர்) பார்வை, (அல்கலாம்) பேச்சு ஆகிய** ஏழு பண்புகளை மாத்திரம் நிலைப்படுத்துவதாகக் குறிப்பிட்டார். இவற்றில் **‘கலாம்’** என்ற பண்பை முஃதஸிலாக்கள் போன்றே அஷ்அரிய்யாக்கள் விளக்குகின்றனர். அது பற்றி முஃதஸிலா என்ற தொடரில் அறியலாம்.

ஸலபுக்களால் நிலைப்படுத்தப்படும் அல்லாஹ்வுடன் தொடர்புடைய பண்புகளான **முகம், இருகைகள், பாதம், கெண்டைக்கால், அடிவானத்திற்கு வருகை தருதல்** போன்ற நூற்றுக்கணக்கான பண்புகளில் எதையும் அவர் நிலைப்படுத்தவில்லை. இது இவரது இரண்டாவது கால கட்டமாகும். இக்காலப்பிரிவில் இவர் **அப்துல்லாஹ் பின் ஸயீத் பின் குல்லாப்** என்பரின் கொள்கையால் கவரப்பட்டார். இதனால்தான் இந்த ஏழு பண்புகளை மாத்திரம் நிலைப்படுத்துவோர் **குல்லாபிய்யாக்கள்** என்று அறிஞர்களால் அழைக்கப்படுகின்றனர்.

நமது நாட்டில் ஷாபி மத்ஹபைச் சார்ந்தோர் தம்மை அஷ்அரிய்யாக்கள் என அழைத்துக் கொள்கின்றனர். இவர்கள் உண்மையில் அடிப்படையான அகீதா விஷயத்தில் ஷாபி (ரஹ்) அவர்களை பின்பற்றுவதில்லை. அதனால்தான் ஷாபியாக்கள் என தம்மை அழைத்துக் கொள்வதில்லை. அஷ்அரிய்யாக்கள் என அழைத்துக் கொள்கின்றனர். அதனால்தான் மத்ஹபால் ஷா∴பி, அகீதாவால் அஷ்அரி என்று கூறி முரண்பட்ட பெயரில் வாழ்ந்து வருகின்றனர்.

## மூன்றாவது கட்டம்:

அல்லாஹ்வின் பண்புகள் அனைத்தையும் பேரறிஞர்களில் ஒருவரான இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்களின் வழி நின்று நிலைப்படுத்துதல். அதாவது, அல்குர்ஆனிலும், நபிகள் நாயகம் (ρ) அவர்களின் பொன்மொழிகளிலும் இடம் பெறுகின்ற அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகள் ஆகியவைகளை அவனது தகமைக்கும், கண்ணியத்திற்கும் அமைவாக அல்லாஹ்வும், அவனது தூதர் முஹம்மத் (ρ) அவர்களும் வர்ணித்திருப்பது போன்று, எவ்வித கூட்டுதல், குறைவின்றி, பொருள் சிதைவின்றி, அவனது படைப்புகளின் பண்புகளுக்கு ஒப்பிடாது நிலைப்படுத்துவதுடன், அவனில் இருக்க முடியாத பெயர்கள், பண்புகளை அல்லாஹ்வும், அவனது தூதரும் புறம் தள்ளியது போன்று புறம் தள்ளுதல்.

இதையே **'தவ்ஹீதுல் அஸ்மா, வஸ்ஸி∴பாத்'** எனக் கூறப்படும். இது பற்றி விரிவான செய்தியை இமாம் அஷ்அரி (ரஹ்) அவர்கள் எழுதிய **'அல்இபானா அன் உசூலித்தியானா'** , **'மகாலாத்துல் இஸ்லாமிய்யீன்'** போன்ற அவர்களின் நூல்களில் மிகத் தெளிவாகக் காணலாம்.

இலங்கை போன்ற நாடுகளில் இமாம் அஷ்அரி (ரஹ்) அவர்களின் பெயரில் படிப்பிக்கப்படுகின்ற நூல்கள் அவர்களின் பெயரால் படிப்பிக்கப்படுகின்றவே தவிர, அவை உண்மையான அவர்களின் கொள்கையின் அடிப்படையில் தொகுக்கப்பட்டவை அல்ல என்பதை இங்கு கவனிக்க வேண்டும்.

ஏனெனில் இமாம் அஷ்அரி (ரஹ்) அவர்கள் இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்களின் அகீதாப் போக்கை சரி கண்டதாக அறிவித்துள்ளதுடன், தான் ஆரம்பத்தில் இருந்து வந்த கொள்கையில் இருந்து முழுமையாக வாபஸ் பெற்றதாகவும் அறிவித்துள்ளார்கள்.

இன்றைய அஷ்அரிய்யாக்கள் இமாம்களான 'அபூஹனீபா', 'மாலிக்' 'ஷா∴பிஈ' 'புகாரி' 'முஸ்லிம்' 'அபூதாவூத்' 'இப்னு குஸைமா' 'தாரமி' 'பைஹகி' 'தாரகுத்னி' (ரஹ்) போன்றோரும், மற்றும் பல அறிஞர்களும் தந்த விளக்கத்திற்கு மாற்றமான விளக்கம் தந்து, தாமே **'சுன்னத் வல் ஜமாஅத்'** வழிவந்தவர்கள் என வீராய்ப்பும் பேசிக் கொள்கின்றனர்.

மேற்சொன்ன இமாம்கள் பின்வரும் அல்குர்ஆன் வசனத்திற்கு தரும் விளக்கத்தை புரியதலுக்காக எடுத்துக் கொள்வோம்.

وَقَالَتِ الْيَهُودُ يَدُ اللَّهِ مَغْلُولَةٌ غُلَّتْ أَيْدِيهِمْ وَلُعِنُوا بِمَا قَالُوا بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ يُنْفِقُ كَيْفَ يَشَاءُ [المائدة/64]

அல்லாஹ்வின் கை கட்டப்பட்டுள்ளன' என்று யூதர்கள் கூறுகின்றனர். அவர்களின் கைகளே கட்டப்பட்டிருக்கின்றன. அவர்களின் இக்கூற்றினால் அவர்கள் சபிக்கப்பட்டனர். அவ்வாறன்று அவனது இரு கைகளும் விரிக்கப்பட்டே இருக்கின்றன. அவன் நாடியவாறு

அள்ளிவழங்குவான். (அல்மாயிதா. வச : 64). என்ற வசனத்தை எடுத்துக் கொள்ளலாம்.

மேற்படி வசனத்தில் அல்லாஹ்வின் **'அவனது இரு கரங்கள்'** என்று இடம் பெற்றிருப்பதை மனிதர்களின் கரங்களுக்கு ஒப்பிடாது, அவர்களின் கரங்களைப் போன்று வடிவம் கற்பிக்காது, வெளிப்படையாக இருப்பது போன்று அவனது தகுதிக்கு அமைவாக அவைகளை பொருளில் நிலைப்படுத்துவதே அல்லாஹ் இறக்கிய வேதத்தை நம்பியதாக கொள்ளப்படும். இதுதான் அந்த இமாம்களின் வழிமுறையும் கூட.

**'கரங்கள்'** என்ற அரபிப் பெயரில் மாத்திரம் ஒற்றுமை காணப்பட்டாலும், அதன் யதார்த்தத்திலும், அமைப்பிலும் வேறுபாடுகள் இருப்பதை அல்லாஹ்வை அன்றி வேறு எவராலும் அறியமுடியாது. எனவே நமது கற்பனைகளுக்குப் புலப்படாத, அவனது தகுதிக்கே அமைவான இருகரங்கள் அவனுக்குண்டு என்பதை விசுவாசிப்பதே நமது கடமையாகும்.

ஷாபி மத்ஹபைச் சார்ந்தோர் மேற்படி வசனத்திற்கு **'நிஃமத்' (அருள்) 'குத்ரத்' (சக்தி, வல்லமை)** என பொருள் கொள்வதைப் பார்க்கின்றோம்.

மேற்படி வசனத்தில் இருமையைக் குறிக்கும் வாசகம் பயன்படுத்தப்படுட்டுள்ளதை அவதானிக்கத் தவறி விட்ட இவர்கள் **'இரு சக்தி' 'இரு அருள்'** என்றல்லவா கூற வேண்டும்?. 'இரு கரம்' என தெளிவாக அல்லாஹ் கூறியிருந்தும், அதனை மனிதனின் கரத்திற்கு ஒப்பிட்டதன் பின்னர் அதன் உண்யைமயான பொருளைப் பாழடித்துள்ளனர்.

ஆரம்பகால அஹ்லுஸ்ஸு ன்னா சார்ந்த இமாம்களின் விளக்கங்களைப் புறம்தள்ளிவிட்டு அகீதா கோட்பாட்டில் வழிதவறிய **'அஷ்அரிய்யா'** பிரிவினரின் அகீதாவைப் போதிக்கும் நமது நாட்டு அரபுக்கல்லுரிகளில் இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களின் நூல் இல்லாமல் இருக்க முடியாது.

அவர்கள் இது பற்றி விளக்குகின்ற போது ஒப்பு, உவமை அற்ற **உண்மையான 'இருகரம்'** என்பதற்கு பதிலாக **'அருட்கொடை'** என விளக்கம் தருவதை மறுத்துரைப்பதைப் பார்க்கின்றோம்.

ولا جائز أن يراد باليدين النعمتان، لاستحالة خلق المخلوق بمخلوق، لأن النعم مخلوقة. ( فتح الباري ج13 ص394 )

**'இரு கரங்கள்'** என்பதற்குப் பதிலாக **'இரு அருள்கள்'** எனப் பொருள் கொள்ள முடியாது. ஏனெனில் **'அருட்கொடைகள் என்பது படைக்கப்பட்டதாகும். படைக்கப்பட்டதால் ஒரு படைப்பை (ஆதத்தை) படைப்பது சாத்தியமற்றதாகும் (நூல்:** பத்ஹு ல்பாரி . பாகம். 13. பக் :394. ஷாமிலா, இலத்திரணியல் நூலகம்).

ஆரம்ப கால இமாம்கள் அல்லாஹ் அர்ஷின் மீதிருப்பதையும் யதார்த்தபூர்வமாகவே அணுகியுள்ளனர் என்பதைப் பின்வருமாறு கவனிக்கலாம்.

الرَّحْمَنُ عَلَى الْعَرْشِ اسْتَوَى [طه : 5] **அர்ரஹ்மானாகிய அல்லாஹ் அர்ஷின் மீது நிலை பெற்றான், அமர்ந்தான்'** (தாஹா. 65) என்ற வசனத்தை விளக்குகின்ற போது, 'அல்லாஹ் அர்ஷை ஆக்கிரமித்தான்' எனப் பொருள் கொள்வர்

இந்த தவறான விளக்கத்தால், அல்லாஹ்வை அவனது நிலையான இருப்பிடமான **'அர்ஷை'** விட்டும் நகர்த்தி, உலகின் எல்லா இடங்களிலும் இருப்பவன் என்ற 'அத்வைத' சிந்தனைக்கு தாரைவார்த்தனர்.

இந்த வசனத்தை இவ்வாறு தவறாக விளக்கும் இப்பரிவினர், தமது அரபிக்கல்லூரிகளில் போதிக்கின்ற **'அல்ஜலாலைன்'** என்ற ஆசரியர் இந்த வசனத்திற்கு தரும் விளக்கத்தை கொஞ்சம் சிந்திக்க வேண்டும்.

{الرحمن عَلَى العرش } وهو في اللغة سرير الملك { استوى } استواء يليق به تعالى . تفسير الجلالين - (ج 5 / ص 352)

'அர்ஷ்' என்பது அரசனின் சிம்மாசனத்தை அரபி மொழியில் குறிக்கும். இஸ்தவா என்றால் ' அல்லாஹ்வாகிய அவன் தனக்குப் பொருத்தமாகக் கண்டவாறு (அதன் மீது) நிலை பெற்றுள்ளான்' என விளக்கம் தரப்பட்டுள்ளதை ஏன் மறைக்க வேண்டும்.

**பார்க்க: (அல்அஃராஃப்: வச : 54), ( : யூனுஸ் : வச : 3), (அத் : அர்ரஃத் : வச : 2), (அல்ஃபுர்கான்: வச: 59), (அஸ்ஸஜ்தா : வச :4), (அல்ஹதீத் : வச : 4 ) ஆகிய குர்ஆன் வசனங்கள், புகாரியில் (7418), (3190), (7419), (7421) இலக்கமாக இடம் பெறும் நபி மொழிகள்.**

அஷ்அரிய்யாக் கொள்கையைப் போதிக்கும் ஆலிம்களிடம் அல்லாஹ் எங்கே இருக்கின்றான் என்று கேட்டால், அவன் அர்ஷிலும் இல்லை. அண்டத்திலும் இல்லை. புவியிலும் இல்லை, மேலாலும் இல்லை, கீழிலும் இல்லை என்று புதுமையாக பதில் தருவார்கள். ஆனால் இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் என்ன பதில் சொல்லியுள்ளார்கள் என்பதைக் கவனியுங்கள்.

ஒருவர் இமாம் மாலிக் (ரஹ்) அவர்களிடம் : 'அல்லாஹ் அர்ஷின் மீது அமர்ந்தான்' எனக் கூறுகிறானே! எப்படி அமந்திருப்பான்? என வினவினார். அப்போது இமாமவர்கள் அவரை ஒரு கணம் ஏறெடுத்துப்பார்த்து விட்டுஜீ தமது தலையை தாழ்த்தியர்வர்களாக

الاستواء معلوم، والكيف مجهول، والإيمان به واجب، والسؤال عن الكيفية بدعة( اللالكائي في شرح الاعتقاد، والبيهقي في الأسماء والصفات (ص 409)

'அமர்ந்தித்தல் என்பது (அரபியில்) அறியப்பட்டதாகும், அதன் முறை அறியப்படவில்லை, அது பற்றி விசுவாசிப்பதுதான் கடமை, அதன் முறைபற்றி கேள்வி எழுப்புவது மார்க்கத்தில் இல்லாத **'பித்ஆ'** புதிய சித்தாந்தமாகும். என பதிலளித்தார்கள்.

**குறிப்பு:** இக்கருத்து தாபியீன்களின் வரிசையில் இடம் பெறும் 'ரபீஆ பின் அபீ அப்திர்ரஹ்மான்' என்ற இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் ஆசிரியர் மூலமும் உறுதி செய்யப்பட்டுள்ளது.

வானவர்கள் பல வகையினராக இருக்கின்றனர், அவர்களில் அல்லாஹ்வின் அர்ஷை சுமக்கும் குழுவினரும் ஒன்றாகும். தற்போது நான்கு வானவர்கள் அதை சுமக்கின்றார்கள். அவர்களை **'ஹமலத்துல் அர்ஷ்'** அர்ஷை சுமப்போர் என அழைக்கப்படும். மறுமையில் அவர்களின் எண்ணிக்கை நான்கு போரால் அதிகரிக்கப்படும்.

ويحمل عرش ربك فوقهم يومئذ ثمانية ( الحاقة: 17 ) 'அந்நாளில் உமது இறைவனின் சிம்மாசனத்தை ஏழுவானவர்கள் தமது தோழ்களில் சுமப்பார்கள், (அத்: அல்ஹாக்கா. வச:17 )

உங்களில் யாராவது தனது சகோதரனுக்கு அநீதி இழைத்திருந்தால், அல்லது மானநஷ்டம் ஏற்படுத்தி இருந்தால் அவர் அதிலிருந்து இன்றே (இங்கேயே) நிரபராதியாகிக் கொள்ளட்டும் எனக் குறிப்பிட்ட பின்னர்,

... ثُمَّ لَيَقِفَنَّ أَحَدُكُمْ بَيْنَ يَدَيْ اللَّهِ لَيْسَ بَيْنَهُ وَبَيْنَهُ حِجَابٌ وَلَا تَرْجُمَانٌ يُتَرْجِمُ لَهُ ... (صحيح البخاري )

பின்னர், உங்களில் ஒருவர் அல்லாஹ்வின் முன்னிலையில் நிற்பார். அவருக்கும் அல்லாஹ்வும் இடையில் திரையோ, அவருக்காக மொழிபெயர்ப்புச் செய்யும் மொழ யெபர்ப்பாளரரோ இருக்கமாட்டார் எனக் கூறினார்கள். மற்றொரு அறிவிப்பில், அவனுக்கும் அல்லாஹ்வுக்கும் இடையில் மறைக்கின்ற திரை இருக்காது என வந்துள்ளது. (புகாரி).

عنْ صُهَيْبٍ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ إِذَا دَخَلَ أَهْلُ الْجَنَّةِ الْجَنَّةَ قَالَ يَقُولُ اللَّهُ تَبَارَكَ وَتَعَالَى تُرِيدُونَ شَيْئًا أَزِيدُكُمْ فَيَقُولُونَ أَلَمْ تُبَيِّضْ وُجُوهَنَا أَلَمْ تُدْخِلْنَا الْجَنَّةَ وَتُنَجِّنَا مِنْ النَّارِ قَالَ فَيَكْشِفُ الْحِجَابَ فَمَا أُعْطُوا شَيْئًا أَحَبَّ إِلَيْهِمْ مِنْ النَّظَرِ إِلَى رَبِّهِمْ عَزَّ وَجَلَّ (صحيح مسلم)

சுவனவாசிகள் சுவனத்தில் நுழைந்தால் கண்ணியமிக்க அல்லாஹ், எதையாவது உங்களுக்கு அதிகரிக்கட்டுமா என்று கேட்பான், அதற்கு அவர்கள் நீங்கள் நமது முகங்களை நீ வெண்மையாக்கவில்லையா? நரகில் இருந்து நீ எம்மைக் காப்பாற்றவில்லையா? உடனே அவனது திரை நீங்கும். அப்போது தமது இரட்சகனின் பக்கம் பாரப்பதை விட வேறு (மகிழ்ச்சிகராமான) ஒன்றை கொடுக்கப்படமாட்டார்கள். என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்).

இவ்வளவு தெளிவாக அல்லாஹ்வுக்கும், அடியானுக்கும் இடையில் மஹ்ஷர் மன்றத்திலும், சுவர்க்கத்திலும் நேரடியாக உரையாடல் நடக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறி இருக்கிறார்களோ இந்தக் கூற்று எதை உணர்த்துகின்றது. அல்லாஹ்வைப் பற்றி இவர்களாக கற்பனை செய்வதை இது சாவுமணி அடிக்கவில்லையா? அல்லாஹ்வை மறுமையில் நமது இரு கண்களாலும் பார்க்க முடியாதிருந்தால் இவ்வாறு கூறுவார்களா? அவன்தான் இந்த உலகில் இருந்து கொண்டிருக்கும் அல்லாஹ் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

இதே போன்று அல்லாஹ்வின் பேச்சு, அடிவானத்திற்கு அவன் இறங்கி வருதல், அவனது பாதங்கள், அவனது கரங்கள், அவனது திருப்தி, கருணை போன்ற அனைத்து விதமான பண்புகளையும் விளங்கிக் கொள்ள வேண்டும். ஆனால் அவனது படைப்பினங்களுக்கு ஒப்பிட்டுக் கூறுவது ஹராமாகும்.

....إِنَّ رَبَّكُمْ لَيْسَ بِأَعْوَرَ وَإِنَّهُ أَعْوَرُ عَيْنِ الْيُمْنَى كَأَنَّ عَيْنَهُ عِنَبَةٌ طَافِيَةٌ (صحيح البخاري )

பிற்காலத்தில் வரவிருக்கும் தஜ்ஜாலைப்பற்றி எச்சரித்த நபி (ஸல்) அவர்கள், நிச்சயமாக உங்கள் இரட்சகன் ஒற்றைக் கண் குருடன் கிடையாது. ஆனால் அவனுமோ (தஜ்ஜாலோ) ஒற்றைக் கண் குருடன், அவனது ஒரு கண் காய்ந்த (சூம்பிப்போன) திராட்சை போன்றிருக்கும் எனக் கூறினார்கள். (புகாரி). அல்லாஹ் குறைவுள்ள இவ்வாறான பண்புகளைக் கொண்டு வர்ணிக்கப்பட முடியாது என்பதை ஒரு முஸ்லிம் நம்பவேண்டும்.

இந்த அடிப்படையைத் தழுவியே இமாம்களான **'மக்ஹூ ல்' 'சுஹ்ரி' 'அவ்ஸாயி' சுஃப்யானுஸ்ஸவ்ரி' 'லைஃத் பின் ஸஃத்'** போன்ற அறிஞர்கள் 'அல் அஸ்மா வஸ்ஸிஃபாத்' பற்றி வினவப்படுகின்றபோது أَمِرُّوْهَا كَمَا جَاءَتْ بِلاَ كَيْفٍ 'அவைகள் வந்திருப்பது போன்று, முறைமை கற்பிக்காது, அவைகளை நடத்திச் செல்லுங்கள்' எனப் பதிலிளிப்போராக இருந்தனர்.

وقال الإمام نعيم بن حماد (شيخ البخاري): " من شبه الله بخلقه كفر، ومن جحد ما وصف به نفسه كفر، وليس فيما وصف الله به نفسه ، أو وصفه به رسوله عليه الصلاة والسلام تشبيه" ( العلو للعلي العظيم للذهبي ص: 116)

எவர் அல்லாஹ்வை அவனது படைப்புகளுக்கு ஒப்பிடுகிறாரோ அவர் நிராகரித்தவர், எவர் அல்லாஹ் தன்னைப்பற்றி அறிமுகம் செய்ததை நிராகரிக்கிறாரோ அவரும் நிராகரித்தவர், அல்லாஹ் தன்னைப் பற்றி அறிவித்ததிலோ, அல்லது அவனது தூதர் (ρ) அவர்கள் அறிமுகப்படுத்தியதிலோ (படைப்புகளுக்கு) எந்தவிதமான ஒப்புதலும் கிடையாது. என இமாம் புகாரி (ரஹ்) அவர்களின் ஆசிரியரான நயீம் பின் ஹம்மாத் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். (ஆதார நூல்: அல்உலுவ். ஆசிரியர்: இமாம் தஹபி (ரஹ்).

**அஷ்அரிய்யாக்களின் சிந்தனைக் கோட்பாடுகள்.**

∃ சட்டங்களை எடுப்பதற்கு குர்ஆன், சுன்னானை முன்படுத்தாது அஹ்லுல் கலாம் எனப்படும் முஃதஸிலாக்களின் வழியில் பகுத்தறிவைப் பயன்படுத்தல்.

∃ இவர்களின் பார்வையில் 'ஆஹாத்' வகையைச் சார்ந்த ஹதீஸ்களில் உறுதியற்ற தன்மை காணப்படுவதால் அவற்றின் மூலம் 'அகீதா' சார்ந்த சட்ட அம்சங்களை உறுதி செய்ய முடியாது என வாதத்தை முன்வைப்பர்.

அதனை ஹதீஸ்துறை அறிஞர்களோ, அஹ்லுஸ்ஸு ன்னா இமாம்களோ ஏற்றுக் கொள்ளவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒருவர் மூலமாக அறிவிக்கப்பட்ட செய்தியை ஏற்றுள்ளமை, ஒருவரை மாத்திரம் இஸ்லாமிய பிரச்சாரத்திற்காக அவர்கள் அனுப்பி வைத்தமை போன்ற ஆதாரங்களின் அடிப்படையில் இவ்வாறு அனுகியுள்ளார்கள். இந்த சர்ச்சையை முதகல்லிமீன்கள் எனப்படுவோரும், முஃதஸிலாக்களுமே முன்வைத்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

∃ அல்குர்ஆனிலும், நபி (ஸல்) அவர்களின் ஹதீஸ்களிலும் வரும் நேரடியான ஆதாரத்தை விட 'கஷ்ப்' எனப்படும் ஒரு தத்துவத்தை முன்வைப்பர். அதைக் கொண்டு தாம் அல்லாஹ்வுடன் حدثني قلبي عن ربي எனது உள்ளம் எனது இரட்சகனைத் தொட்டும் அறிவத்தது ' என தத்துவமும் பேசவர். அஷ்அரிய்யா, சூபிய்யா, வஹ்ததுல் உஜு த் போன்ற சகலவிதமான பாதிலான கொள்கைகளுக்கும் புகலிடம் வழங்கிய கஸ்ஸாலி இமாம் என்பவரின் நூலில் இதனை நீங்கள் பரவலாகக் காணலாம்.

∃அல்லாஹ்வின் உள்ளமை பற்றி விளக்க முற்படும் அஷ்அரிய்யாக்கள். இந்த உலகம் இல்லாமையில் இருந்து உருவானது. அவ்வாறு உருவாகும் ஒன்று புதிதாகத் தோன்றியதாகும். அவ்வாறு தோன்றுவதற்கு முதல் நிலை என்ற ஒன்று தேவையாகும். அதே பொன்று அல்லாஹ்வின் உள்ளமையை அனுகுகின்றனர்.

∃அல்லாஹ் இல்லாமல் இருந்து பின்னர் இருக்கின்றான் போன்றதொரு நிலை தோற்றுவிக்கப்படுகின்றது. அல்லாஹ்வின் பண்புகளை இந்த அடிப்படையில் கையாளுகின்ற காரணத்தினால் அவை இல்லாதிருந்து உருவானது என்ற விளக்கத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக அவற்றை மறுக்க வேண்டிய தேவையும் இருக்கின்றது.

∃அல்லாஹ் ஆரம்பமானவன், அவனது ஆரம்பத்திற்கு ஆரம்பம் இல்லை என்ற கோட்பாட்டை அஹ்லுஸ்ஸு ன்னாக்கள் முன்வைக்கின்றனர். ' அல்லாஹ்வைத்தவிர வேறு எதுவும் இல்லாமல் இருக்கின்ற போதும் அல்லாஹ் இருந்து வந்தான்' (புகாரி), மற்றொரு அறிவிப்பில், அவனுக்கு முன் எதுவும் இருக்கவில்லை. என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

∃ **தவ்ஹீத்** என்பதை விளக்கும் அஷ்அரிய்யாக்கள் இரண்டை ஏற்றுக்கொள்ளாத ஒற்றை அமைப்பு, எனக் குறிப்பிட்டு, அல்லாஹ், தன்னிலும், தனது செயல்பாடுகளிலும் ஒருமையானவன். அவனுக்கு இணையான, நிகராக யாரும் இல்லை எனக் குறிப்பிடுகின்றனர். இந்த தவறான விளக்கம் அல்லாஹ்வின் பண்புகளான கை, முகம், கண்கள் என இடம் பெறும் பண்புகளை மறுக்கும் நிலைக்கு இட்டுச் சென்றுள்ளது.

∃ **இலாஹ்** என்ற சொல்லை படைப்பாளன், படைக்க ஆற்றமிக்கவன் என விளக்கம் தருகின்றனர். இந்த அடிப்படையில் லாயிலாஹ்வை விளக்கிப்பாருங்கள்.

∃ ஒரு மனிதன் பருவ வயதெல்லையை அடைந்து விட்டால் ஆராய்தல், சிந்தித்தல், பின்னர் நம்பிக்கை கொள்வதுதான் அவனது முதல்கடமை. அதாவது

படைப்பினங்கபைப்பார்த்து அல்லாஹ் இருக்கின்றான் என முடிவு செய்தல். ஆனால் குர்ஆன், சுன்னாவின் அடிப்படையைக் கவனித்தில் கொண்டு பருவ வயதை அடைந்த ஒருவன் அல்லாஹ்வை வணங்குவதான் அவனது முதல் கடமை, நம்பிக்கைமாத்திரம் போதாது என அஹ்லுஸ்ஸு ன்னாக்கள் குறிப்பிடுகின்றனர்.

∃ ஒரு மனிதர் 'ஷஹாதா கிலமைாவை' மொழிவது மாத்திரம் போதுமானது. அதற்கான அமல் அவசியமில்லை என்ற ஜஹ்மிய்யாக்களின் கோட்பாட்டை ஒத்த கோட்பாட்டை முன்வைக்கின்றனர். உள்ளத்தால் உண்மைப்படுத்தினால் மாத்திரம் போதுமானது என்ற கோட்பாட்டை ஜஹ்மிய்யாக்கள் முன்வைக்கின்றனர்.

∃ பெரும்பாவம் செய்தவரின் நிலையை கையாளும் முறையிலும், மறுமையுடன் தொடர்பான நம்பிக்கை விஷயத்திலும் அஹ்லுஸ்ஸு ன்னாக்களைப் போன்று கையாழுகின்றனர். இவ்வாறு பல வேறுபாடுகளை அஹ்லுஸ்ஸு ன்னாக்களுக்கும், அஷ்அரிய்யாக்களுக்கும் இடையில் காணமுடிகின்றது.

∃அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகள் விஷயத்தில் தவறான வியக்கம் தரும் அஷ்அரிய்யாக்கள் அல்குர்ஆனிலும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழிகாட்டலிலும் இல்லாத சில பெயர்களையும் உபயோகிப்பதைப் பார்க்கின்றோம்.

உதாரணமாக, 'ஆரம்பமானவன்' என்ற பொருளில் உபயோகிப்பதற்காக நம் நாட்டு அரபுக்கல்லூரிகளில் கற்பிக்கப்படுகின்ற நூறுள்ளலாம் என்ற நூலில் 'கதீம்' (قديم) 'பழமையானவன் அல்லது முதன்மை' என்ற இருபொருளைக் கொண்ட பெயரையும், (متكلم) பேச்சாளன், (مريد) நாடுபவன் என்ற பெயரையும், الصانع உற்பத்திசெய்பவன் என்ற பெயரையும் எடுத்துக் கொள்ளலாம்.

இவ்வாறான பெயர்கள் அல்குர்ஆனிலோஜீ நபிகள் நாயகம் (ρ) அவர்களின் பொன்மொழிகளிலோ இடம்பெறாத காரணத்தால் அல்லாஹ்வின் திருநாமங்களில் ஒன்றாக எடுத்துக் கொள்ள முடியாது.

### மூன்று வகை அஷ்அரிய்யாக்கள்.

அஷ்அரிய்யாக்கள் அஸ்மா, ஸிபாத்தை கையாளும் முறையைக் கவனத்தில் கொண்டு இவ்வாறு வகுக்கப்பட்டுள்ளனர்.

∃அஸ்மா, ஸிபாத் (அல்லாஹவின் பெயர்கள், பண்புகள்) விசயத்தில் தமது பகுத்தறிவு நிலைப்படுத்துகின்ற ஸிபாத்துக்களை மாத்திரம் நிலைப்படுத்துவோர். அதற்கு 'ஸிபாத் அக்லிய்யா' (பகுத்தறிவு சார்ந்த பண்புகள்) எனப் பெயரிட்டுள்ளனர். அதே வேளை, அல்குர்ஆனிலும், அல்ஹதீஸிலும் இடம் பெறும் ஸிபாத்துக்களுக்கு ஆரம்பத்தில் நாம் குறிப்பட்டதைப் போன்று தவறான விளக்கம் தருவர். இது ஒரு பிரிவினர்.

∃அவர்களில் மற்றொரு பிரிவினர், மறுமை விசயத்தில் பகுத்தறிவை ஏற்றுக்கொள்ளாது, 'ஸம்இய்யாத்' எனப்படும் வஹியின் அடிப்படையில் வருபவற்றை அஹ்லுஸ்ஸு ன்னாக்களைப் போன்று முழுமையாக ஏற்று நம்பிக்கை கொள்வர். உதாரணமாக மண்ணறை வேதனை, ஸிராத் காலத்தைக்கடக்கும் நிகழ்வு, கேள்விகணக்கு, மீஸான் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவர்கள் இந்த அம்சங்களில் அஹ்லுஸ்ஸு ன்னாவுடன் நெருக்கமானவர்காளக இருக்கின்றனர் என அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

∃ பகுத்தறிவையும், வஹியையும் இணைத்துக் கையாளும் பிரிவினர். இவ்வாறு மூன்று பிரிவுகளாக அறிஞர்கள் இவர்களை பிரிக்கின்றனர்.

இமாம் அபுல் ஹஸன் அல்அஷ்அரி (ரஹ்) அவர்களால் இறுதியாக எழுதப்பட்ட நூலான **'இபானா'** என்ற நூலில் தான் ஆரம்பாகக் கூறி வந்த இது போன்ற பல கருத்துக்களில் இருந்து வாபஸ் பெற்றதாகவும், இமாம் அஹ்மதின் அகீதாக் கொள்கை எதுவோ அதையே தான் தனது அகீதாவாக ஏற்றுள்ளதாகவும் பிரகடனம் செய்துள்ளதால் அஷ்அரிய்யாக் கொள்கையைப் போதிப்போரும், நம்புவோரும் தமது கொள்கை, கோட்பாடுகள் பற்றி மறு பரிசீலனை செய்ய வேண்டிய தேவை இருக்கின்றது.

## ஜஹ்மிய்யாக்கள் ஓர் அறிமுகம்.

அஷ்அரிய்யாக்களுக்கும், ஜஹ்மிய்யாக்களுக்கும் இடையில் கொள்கையில் உடன்பாடு காணப்படுவதால் அவர்களைப் பற்றியும் இங்கு அறிந்து கொள்வது பொருத்தமாகும்.

**'ஜஹ்ம் பின் ஸப்வான்'** என்பவன் தனது பிரதம குருவான **'ஜஃத் பின் திர்ஹம்'** என்பவனிடம் இருந்து குர்ஆன் படைக்கப்பட்டது, மனிதன் சுதந்திரம் பறிக்கப்பட்டவன், தீமைக்கும் அல்லாஹ்வே பொறுப்பாளி, மனிதன் அல்ல, மூஸா (ப) அவர்களுடன் அல்லாஹ் பேசவில்லை, இப்ராஹீம் (ப) அவர்களை அல்லாஹ் அவனது நேசராக எடுத்துக் கொள்ளவில்லை போன்ற அல்லாஹ்வின் பண்புகளுடன் தொடர்புடை பண்புகளைப் பாழடித்துப் பேசினான்.

இந்த வழிகேட்டின் நாயகனான 'ஜஃத்' 'ஹாலித் பின் அப்தில்லாஹ் அல்குஸரி' என்ற உமையா கவர்னரால் ஒரு ஹஜ்ஜு ப் பெருநாள் தினத்தில் கொலை செய்யப்பட்டதாக வரலாறு குறிப்பிடுகிறது.

ஜஃதுடைய மாணவன் **'ஜஹ்ம் பின் ஸப்வான்'** என்பவன் இந்த வழிகேட்டை உலகுக்கு மும்முரமாக எடுத்துச் சென்றதால் **'ஜஃதிய்யா'** என்ற பெயரில் அழைக்கப்படவேண்டிய இப்பிரவினர் 'ஜஹ்மிய்யா' என்ற பெயரில் அழைக்கப்பனர்.

மனிதன் சுதந்திரம் பறிக்கப்பட்டவன், அவனுக்கென்று சுய விருப்பு, வெறுப்பு என்பது கிடையாது எனவாதிடும் 'ஜப்ரிய்யா' ப்பிரிவினர் என்றும் வரலாற்றில் இவர்கள் அழைக்கப்பலாயினர்.

உமைய்யாக்களின் ஆட்சியில் இறுதிப்பகுதியில் இந்த சிந்தனை உத்வேகம் பெற்றது. அல்லாஹ் அனைத்து இடங்களிலும் இருப்பான் என்ற சூபிச மற்றும் அத்வைத சிந்தனையை விதைத்தவர்களும் இவர்களே! இந்த சிந்தனை அஹ்லுஸ்ஸு ன்னாவின் சிந்தனையாக ஷாபி மத்ஹப் சார்ந்த அரபுக்கல்லூரிகளில் சர்வசாதராணமாக போதிக்கப்படுவதை பார்க்கின்றோம்

இவர்கள் பற்றிக் குறிப்பிடும் இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள் 'ஜஹ்ம் பின் ஸப்வான் என்பவன் பக்கம் இணைத்துப் பேசப்படுவதால் 'ஜஹ்மிய்யாக்கள்' என அழைக்கப்படுகின்றனர் இந்த ஜஹ்ம் அப்துல் மலிக் பின் இவர்கள் அல்லாஹ்வின் ஸிபாத்துக்களை முழுமையாக மறுக்கின்றனர். இவர்களே அல்குர்ஆன் அல்லாஹ்வின் பேச்சல்ல. மாற்றமாக அது அவனது படைப்புக்களில் ஒரு படைப்பு என்றும் வாதிடுகின்றனர் எனக் குறிப்பிடுகின்றார்கள். **(பத்ஹு ல்பாரி. பாகம்: 20. பக்கம்: 437).**

அல்லாஹ் அவனது படைப்பில் பாலையும் நீரையும் போன்று ஒன்றரக் கலந்திருக்கின்றான் என வாதிடுவதாலும், எல்லா இடத்திலும் அல்லாஹ் இருக்கிறான் எனக் கூறுவதாலும் **'ஷைகுல் இஸ்லாம் இப்னுதைமிய்யா'** போன்ற அறிஞர்கள் இப்பரிவினரை **'ஹு லூலிய்யா'** (அல்லாஹ் படைப்புக்களுடன் சங்கமமாகுகின்றான் என்ற கொள்கையுடைய மற்றொரு வழிகெட்ட பிரிவினருடன் இணைத்து நோக்குகிறார்கள். (பதாவா இப்னு தைமிய்யா. 2- பக்கம்: 140).

இது பற்றி ஆளமாக நோக்கினால் இப்னுதைமிய்யா (ரஹ்) அவர்கள் கூறுவது போன்று இந்தக் கூற்றினால் ‘அல்லாஹ் என்பவன் கழிவறைகளிலும், மனிதர்களுக்குள்ளும், அசிங்கமான இடங்களிலும் காணப்படுபவன் என்ற இஸ்லாம் போதிக்காத ‘அத்வைதத் கொள்கையை உள்ளடக்கி இருப்பதை உணரலாம்.

இதனால்தான் ஸலபுகளும், அவர்கள் வழிவந்த அறிஞர்களும் இவர்களை காபிர்கள் என்ற நிலையில் வைத்துப் பார்க்கின்றனர் என தபரானி (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். **இக்கூற்றை உறுதி செய்ய இமாம் தபரானியின் அல்முஃஜமுல் கபீரைப் பார்வையிடவும்**

இப்பரிவினருடன் ஷாஃபி மத்ஹப் சார்ந்திருக்கும் அஷ்அரிய்யா எனப்படும் கொள்கையைப் பிரதிபலிப்போராக இருக்கும் பிரிவினரையும் இணைத்து நோக்க முடியும்.

الحياة والعلم والإرادة والقدرة والسمع والبصر والكلام. **அல்ஹயாத், (வாழ்வு), அல்இல்ம், (அறிவு), அஸ்ஸம்ஃ (கேள்வி) , அல்பஸர் (பார்வை) , அல்இராதா (நாட்டம்), அல்குத்ரா (ஆற்றல், வல்லமை) , அல்கலாம் (பேச்சு)** என்ற ஏழு பண்புகளை மாத்திரம் அல்லாஹ்வின் பண்புகளாக ஏற்றுக் கொள்ளும் இப்பிரிவினர் அல்லாஹ்வுக்கு பண்புகளே இல்லை என்று கூறும் ஜஹ்மிய்யாக்கள், முஃதஸிலாக்களை விட ஒருபடிமேலாவனர்கள். எனினும் அல்லாஹ்வைப் பற்றிய கருத்தோட்டத்தில் ஒரே சிந்தனையைப் பிரதிபலிப்பவர்களே!

அல்லாஹ்வின் கோபம், நேசம், அவனது முகம், இரு கரங்கள், அர்ஷின் மீது அவன் அமர்ந்திருத்தல், மறுமையில் தீர்ப்பு வழங்குவதற்கான அவனது வருகை, அங்கு படைப்புக்கள் அவனை நேரில் கானுதல் போன்ற பண்புகளை அல்லாஹ்வின் தகுதிக்கு அமைவாக நிலைப்படுத்துவது அவன் பேரில் உருவம் கற்பித்ததாக அமையும் எனக் காரணம் காட்டி அவற்றை முழுமையாக பாழடிப்பர், அல்லது மறுத்துரைப்பர். இது ஸஹாபாக்கள், இமாம்கள் ஆகியோரின் நம்பிக்கை கோட்பாட்டிற்கு அப்பாற்பட்ட ஒரு நம்பிக்கை என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

அவர்கள் அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளை உருவகப்படுத்தாமலும், முறைமை கற்பிக்காமலும், உவமானப்படுத்தாமலும், அதன் கருத்துக்களை பாழடிக்காமலும் நம்பினர். அதையே ஸலபுக்களினதும், அவர்களின் வழிவந்த இமாம்களினதும் நம்பிக்கை என வர்ணிக்கப்படுகின்றது. ‘அஹ்லுஸ்ஸு ன்னா வல்ஜமாஆ’ என்ற பிரவினரின் நம்பிக்கை கோட்பாடும் இவ்வாறாகவே இருக்க வேண்டும்.

நம் நாட்டு அரபுக்கல்லூரிகளிலும், இஸ்லாமிய இயக்கங்களிலும் ஜஹ்மிய்யாக்கள், முஃதஸிலா, ஹவாரிஜ் போன்ற வழிதவறிய பிரிவுகளின் அகீதாக் கொள்கையே வேறூன்றிக் காணப்படுகின்றது.

**‘மத்ஹபால் ஷாபி, அகீதாவால் அஷ்அரி’** என்ற சூனிய தத்துவம் பாடுகின்றனர். அதுமாத்திரமின்றி, தமது மத்ரஸாக்களில் அல்லாஹ்வை சுத்த சூனியமாகவுமாகவும் போதிக்கின்றனர். அதே வேளை,

لو رأيت أبا يزيد مرة واحدة كان أنفع لك من أن ترى الله سبعين مرة (( إحياء علوم الدين (3 / 446بيان جملة من حكايات المحبين)

**அபூ யசீதை (ஒரு அவ்லியாவின் பெயராம்) ஒரு தடவை நீ காண்பது அல்லாஹ்வை எழுபது தடவைகள் காண்பதை விடவும் பாக்கியம் நிறைந்தது ’** என்று கஸ்ஸாலி இமாமவர்கள் **இஹ்யாவில்** கூறி இருப்பதைக் கண்டும் காணாதவர்கள் போல விட்டுவிடுகின்றனர்.

குர்ஆன், சுன்னாவில் இருந்து அல்லாஹ்வின் பண்புகளை எடுத்துக் கூறினால் அல்லாஹ்வுக்கு உருவம் கற்பிக்கும் கூட்டம் என்ற பட்டமும், சியோனிஸ்டுகளின் ஏஜண்டு பட்டமும்.

இவர்களிடம் அகீதா பற்றிய அறிவுதானே அடிப்படையானது, அதில் ஷாபி இமாமை சார்ந்திருந்தால் என்ன? ஹிஜ்ரி 240ற்கு பின் வந்த **'**அபுல் ஹஸன் அல் அஷ்அரிய்யி**'** என்பவர் ஆரம்பகாலத்தில் பின்பற்றி, பிற்காலத்தில் வாபஸ் பெற்றுக் கொண்ட ஒரு கொள்கையை ஏன் நாம் பின்பற்ற வேண்டும் எனக் கேட்டால் எதையாவது உளருகிறார்கள்.

ஸஹாபாக்கள், தாபியீன்கள், இமாம்களான அபூஹனீபா, மாலிக், ஷாஃபி, அஹ்மத்பின் ஹன்பல், புகாரி, முஸ்லிம், திர்மிதி, அபூதாவூத், நஸயி, இப்னு ஹுஸைமா, தாரமி, அல்லாலகாயி போன்ற மேதைகள் பின்பற்றிய அகீதாக் கொள்கையை விளக்குமாறு கோருங்கள்.

குறைந்த பட்சம் இமாம் புகாரியின் கிரந்தத்தில் பதிவாகியுள்ள **'கிதாபுத் தவ்ஹீத்'** என்ற அத்தியாயத்தையாவது படிக்கும்படி வற்புறுத்துங்கள். அதன்மூலம் **'**அல்அஸ்மா, வஸ்ஸிபாத்**'** விசயத்தில் சிந்தனை தெளிவுப் பெற நிறையவே வாய்ப்புண்டு.

**குறிப்பு:**

الْجَهْمِيَّةِ ، الْقَدَرِيَّة ،الْخَوَارِج ، الرَّافِضَة **'அல்ஜஹ்மிய்யா' 'அல்கதரிய்யா' 'அல்ஹவாரிஜ்' 'அர்ராபிழா' (ஷீஆ) ஆகிய பிரிவுகள் 'பித்அத்சார்ந்த அமைப்பின் தலைகள்' என வர்ணிக்கப்படுகின்றன. (பத்ஹுர்பாரி).**

# முஃதஸிலாக்களும், நவீன பகுத்தறிவுவாதிகளும்

## நுழைவாயில்:

புகழ் அனைத்தும் அகிலங்களின் அதிபதியாகிய அல்லாஹ் ஒருவனுக்கே உரித்தானது. அவனது அருளும், சாந்தியும் நபிகள் நாயகம் முஹம்மத் (ρ) அவர்கள் மீதும்ஜீ அவர்களின் குடும்பத்தவர்ஜீ தோழர்கள்ஜீ ஸஹாபா பெண்கள், இமாம்கள்ஜீ மற்றும் முஸ்லிமான சகோதரஜீ சகோதரிகள் அனைவர் மீதும் நிலையாக உண்டாகட்டுமாக!

நபிகள் நாயகம் (ε) அவர்கள் ஹிஜ்ரி 11-ல் இவ்வுலகுக்கு விடை கொடுத்தார்கள். அவர்களுக்குப்பின் வந்த கலீபாக்களான அபூ பக்கர் ஸித்தீக், உமர்பின் கத்தாப், உஸ்மான் பின் அப்பான், அலி பின் அபீதாலிப் ஹஸன் பின் அலி, முஆவியா பின் அபீ சுப்யான் (ψ) ஆகிய நபித்தோழர்கள் இஸ்லாமிய ஆட்சித் தலைவர்களாக இருந்து ஆட்சி செய்தார்கள். நபி (ε) அவர்கள் எந்த நேரியவழியில் இருக்குமாறு போதித்தார்களோ அதை தமது ஆட்சியிலும் இவர்கள் பேணிவந்தார்கள்.

ஹவாரிஜ்களின் பிரிவினையைத் தொடர்ந்து (நபித்தோழர்களை மதம் மாறியோராக, ஆட்சியில் மோசடிக்காரர்களாக சித்தரிக்கும் ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்கள், (அமல்கள் அவசியமற்றது. நம்பிக்கை கொள்வது மாத்திரம் போதுமானது, ஈமானுடன் பாவங்கள் செய்வதில் குற்றமில்லை என வாதிடும் முர்ஜியாக்கள், (விதியை மறுக்கும்) கத்ரிய்யாக்கள், (அல்லாஹ் அனைத்து இடங்களிலும் உள்ளான், குர்ஆன் படைக்கப்பட்டது என்ற கொள்கையுடைய) ஜஹ்மிய்யாக்கள், போன்ற பிரிவுகள் கூபாவில் தோற்றம் பெற்றன.

எதிர்காலத்தில் தோன்றவிருக்கும் பிரிவுகள் பற்றி அல்லாஹ்வின் தூதரால் பல முன்னறிவிப்புக்கள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில அவர்கள் உயிருடன் இருந்த போது நடந்துவிட்டன. மற்றும் சில அவர்களின் மரணத்தின் பின், அவர்களின் தோழர்கள் சிலர் உயிர் வாழும் போதும் நடந்தன, மற்றும் சில, இவர்கள் அணைவரின் மரணத்தின் பின் நடந்து முடிந்த விட்டன, இன்னும் சில நடந்து கொண்டிருக்கின்றன, இன்னும் சில நடக்கவிருக்கின்றன.

அவற்றில் சில முன்னறிவிப்புக்கள் மிகத்துல்லியமானவை. உதாரணத்திற்கு கவாரிஜியத்தலைவன் துல்குவைஸரா அத்தமீமி, தஜ்ஜால் வருகை, தாப்பத்துல் அர்ழ் எனப்படும் அதிசய மிருகம் பூமியில் இருந்து வெளிப்படுதல், மேற்கில் இருந்து சூரியன் உதயமாகுதல், யஃஜூ ஜ், மஃஜூ ஜின் (மடை திறந்த வெள்ளம் போன்ற) அந்த அணை உடைப்பு, குழப்பம், ஈஸா நபியின் வருகை போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**மற்றும் சில முன்னறிவிப்புக்கள் அடையாயங்களை வைத்து அறிய முடியுமானவை**

இஸ்லாத்தின் பெயரால் தோற்றம் பெற்ற வழிகெட்ட சிந்தனைப் பிரிவுகள், பித்அத், அநாச்சாரங்களின் வளர்ச்சி, காபிர்களின் கலாச்சாரத்தால் உந்தப்படுதல், ஆடை அணிந்த நிர்வாணிகளான பெண்கள் உருவாகுதல் போன்றவற்றை உதராணமாகக் கூறலாம்.

பிரிவுகள், பிளவுகள் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ع) அவர்கள் பொதுவாகப் பேசியுள்ளார்கள். இஸ்லாத்தின் பெயரால் தோற்றம் பெற்ற இயக்களுக்கு உடனே வழிகேடு, அல்லது அதற்கப்பாற்பட்டது போன்ற தீர்ப்பை வழங்காது, அவை வழிகேட்டில் முழுமை பெற்றவையா? அல்லது நேர்வழியின் சின்னங்களா? அல்லது பகுதிவாரியான வழிகேட்டு சிந்தனைத் தாக்கம் பெற்றவையா போன்ற அளவுகோல்கள் கட்டாயமானதாகும்.

அகீதாவில் ஐக்கியப்பட்ட முஸ்லிம்கள் மத்தியில் காணப்படும் பிளவுகளுக்கும், அகீதாவில் ஐக்கியமின்றி, அதன் அடிப்படைகளைத்தகர்க்கும் பிரிவுகளுக்கும் இடையில் நிறைய வேறுபாடுள்ளது. முஸ்லிம்கள் பல தலைமையில் இருக்கின்றார்கள் என்ற பிரிவினைக்காக அவர்களை இஸ்லாமிய நெறியில் இருந்து தூரப்படுத்த முடியாது என்பதை அறிய வேண்டும்.

## பிரிவுகள் பற்றி நபிகள் நாயகம் (ρ) அவர்கள்

**பிரிவுகள் தோற்றம் பெறும் என்று நபிகள் நாயகம் (ρ) அவர்கள் கூறியுள்ளார்கள். அதை உணர்த்தும் பல நபிமொழிகள் ஹதீஸ்களில் காணலாம்.**

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ افْتَرَقَتْ الْيَهُودُ عَلَى إِحْدَى أَوْ ثِنْتَيْنِ وَسَبْعِينَ فِرْقَةً وَتَفَرَّقَتْ النَّصَارَى عَلَى إِحْدَى أَوْ ثِنْتَيْنِ وَسَبْعِينَ فِرْقَةً وَتَفْتَرِقُ أُمَّتِي عَلَى ثَلَاثٍ وَسَبْعِينَ فِرْقَةً (سنن أبي داود – مسند أحمد)

**யூதர்கள் எழுபத்தி ஒரு கூட்டம ாகவும், கிரிஸ்தவர்கள் எழுபத்தி இரண்டு கூட்டமாகவும் பிரிந்தனர். எனது சமுதாயம் எழுபத்தி மூன்றாக பிளவுபடும் என நபிகள் நாயகம் (ρ) அவர்கள் கூறிய செய்தியையும், (அபூதாவூத், முஸ்னத் அஹ்மத்).**

عنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ رَأَيْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُشِيرُ إِلَى الْمَشْرِقِ فَقَالَ هَا إِنَّ الْفِتْنَةَ هَا هُنَا إِنَّ الْفِتْنَةَ هَا هُنَا مِنْ حَيْثُ يَطْلُعُ قَرْنُ الشَّيْطَانِ (صحيح البخاري)

**மதீனாவின் கிழக்குப்பக்கமாக (ஈராக்பக்கமாக) சைகை செய்து கவனியுங்கள்! ஷைதானின் கொம்பு உதயமாகும் பகுதியான இங்கிருந்தான் குழப்பங்கள் தோன்றும்.** (புகாரி, முஸ்லிம்)

மேற்படி செய்திகளை கவனித்தால் புனித மதீனா நகர் உண்மை மார்க்கத்தின் பிறப்பிடமாகக் காணப்பட்டதால் அங்கோ, அதைச் சூழவிருந்த பகுதிகளிலோ வழிகெட்ட பிரிவுகள் தேன்ற சாத்தியமில்லை. வரலாறும் அதைத்தான் உறுதி செய்கின்றது.

வழிகெட்ட சகல பிரிவுகளும் கூபாவில்தான் தோற்றம் பெற்றன. அங்குதான் ‘ஸிப்பீன்’ ‘ஜமல்‘ போன்ற போர்கள் நடை பெற்றன. அங்கிருந்தான் ஹவாரிஜ்கள் ஷீஆக்கள் மற்றும் பல பிரிவுகள் தோன்றினர். இதை நாமாகக் கற்பனை செய்து கூறவில்லை. இமாம்களான இப்னு ஹஜர், ஹத்தாபி (ரஹ்) போன்ற அறிஞர்கள்தாம் இக்கருத்தை குறிப்பிடுகின்றனர். அதுதான் சரியான, வரலாற்றிற்கு முரண்பாடில்லாத, நடைமுறைக்குச் சாத்தியமாக விளக்கமாகும்.

இஸ்லாத்திற்கு மாற்றமான கொள்கைளை எதிர்த்து முஹம்மத் பின் அப்தில் வஹ்ஹாப் பிரச்சாரம் செய்தார், சவூதி மண்ணில் கப்று வணக்கத்தை அடியோடு தகர்த்தெறிந்தார், அல்லாஹ்விடம் நேரடியாக பிரார்த்திக்கும்படி பணித்தார், மன்னர் சவூத் உடன் இணைந்து இஸ்லாமிய ஆட்சியை அங்கு நிறுவினார்.

இஸ்லாம் அங்கீகரிக்காத ஷிர்க்கான, பித்அத்தான காரியங்களை செய்து கொண்டு, நபிகள் நாயகம் (ع) அவர்களின் காலத்தில் இல்லாத பல தரீக்காக்களை

தமது பிளைப்பிற்காக உருவாக்கி, அதற்கு மார்க்கச் சாயம்பூசி, பொதுமக்களை தவறான வழியில் எடுத்துச் செல்வோரின் தப்பான இந்த வாதம் 'ஜோர்ஜ் புஷ்' பயங்கவாதத்தை எதிர்த்துப் போரிடுவதாக வாதிடுவது போன்றதாகும்.

## ஸஹாபாக்கள் மத்தியில் காணப்பட்ட பிரிவை வழிகெட்ட பிரிவுகளுக்கு ஒப்பிட முடியுமா ?

இதை இஸ்லாத்தில் தோன்றிய கவாரிஜ்கள், ஜஹ்மியாக்கள், வஹ்ததுல் உஜூத் பிரிவு, அஹ்லுல்ஹுலூல் வல்இத்திஹாத் போன்ற பிரிவுகளைப் போன்று இப்பிளவை நோக்க முடியாது. இஸ்லாத்தின் அடிப்படையில் கருத்து முரண்பாடுகளைக் கொண்ட பிரிவாக இந்தப் பிரிவைக் கொள்ள முடியாது என்பதே இதன் அடிப்படைக்காரணமாகும், இதை பின்வரும் நபிமொழியும் உறுதி செய்கின்றது.

...فَقَالَ الْحَسَنُ (البصري) وَلَقَدْ سَمِعْتُ أَبَا بَكْرَةَ يَقُولُ رَأَيْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَلَى الْمِنْبَرِ وَالْحَسَنُ بْنُ عَلِيٍّ إِلَى جَنْبِهِ وَهُوَ يُقْبِلُ عَلَى النَّاسِ مَرَّةً وَعَلَيْهِ أُخْرَى وَيَقُولُ إِنَّ ابْنِي هَذَا سَيِّدٌ وَلَعَلَّ اللَّهَ أَنْ يُصْلِحَ بِهِ بَيْنَ فِئَتَيْنِ عَظِيمَتَيْنِ مِنْ الْمُسْلِمِينَ (البخاري)

'எனது இந்தப்பேரராகிய ஹஸன் மூலம் அல்லாஹ் இரு பெரும் முஸ்லிம் அணிகளுக்கிடையில் சமரஸத்தை ஏற்படுத்துவான்' என நபி (ε) அவர்கள் தனது பேரரான ஹஸனை மதீனா மிம்பரில் வைத்து ஒருமுறை முன்னறிவிப்புச் செய்ததை நான் பார்த்தேன் என அபூபக்ரா (τ) அவர்கள் கூறுகிறார்கள். (புகாரி, அபூதாவூத்)

தனது தந்தை அலி (τ) அவர்களுக்குப் பின்னால் ஆட்சிக்கு வந்த ஹஸன் (τ) அவர்களின் தாராளத்தன்மை, விட்டுக்கொடுப்பு, சமரஸச் செயற்பாடு சமாதன முன்னெடுப்பு ஆகியவை மூலம் இரு அணிகளாக பிளவுபட்டிருந்த முஸ்லிம்கள் முஆவியா (τ) அவர்களின் தலைமத்துவத்தின் கீழ் ஹிஜ்ரி 41- ம் ஆண்டு ஒரே அணியினராகினர். இதனால்தான் இவ்வாண்டை '<u>ஆமுல் ஜமாஆ' 'ஐக்கிய ஆண்டு</u>' என இஸ்லாமிய வரலாற்று ஆசிரியர்கள் அழைக்கின்றனர்.

இது பற்றிய இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்களின் விளக்கத்தை இங்கு அறிந்திருப்பது பொருத்தமென நினைக்கின்றேன்.

...وَفِي هَذِهِ الْقِصَّة مِنْ الْفَوَائِد عَلَم مِنْ أَعْلَام النُّبُوَّة ، وَمَنْقَبَة لِلْحَسَنِ بْن عَلِيّ فَإِنَّهُ تَرَكَ الْمُلْك لَا لِقِلَّةٍ وَلَا لِذِلَّةٍ وَلَا لِعِلَّةٍ بَلْ لِرَغْبَتِهِ فِيمَا عِنْدَ اللَّه لِمَا رَآهُ مِنْ حَقْن دِمَاء الْمُسْلِمِينَ ، فَرَاعَى أَمْر الدِّين وَمَصْلَحَة الْأُمَّة . وَفِيهَا رَدّ عَلَى الْخَوَارِج الَّذِينَ كَانُوا يُكَفِّرُونَ عَلِيًّا وَمَنْ مَعَهُ وَمُعَاوِيَة وَمَنْ مَعَهُ بِشَهَادَةِ النَّبِيّ صَلَّى اللَّه عَلَيْهِ وَسَلَّمَ لِلطَّائِفَتَيْنِ بِأَنَّهُمْ مِنْ الْمُسْلِمِينَ ...(فتح الباري لابن حجر – (ج 20 / ص 115)

இந்தச் செய்தியில் நபித்துவ முன்னறிவிப்புக்களில் மாபெரும் முன்னறிவிப்பு பொதிந்திருக்கின்றது. மேலும் ஹஸன் (τ) அவர்களின் சிறப்பும் இதில் காணப்படுகின்றது, அவர் போரை நிறுத்தி, ஆட்சியைவிட்டுக் கொடுத்தது சிறுபாண்மையினர் என்பதற்காகவோ, கீழ்படியவேண்டும் என்றோ, ஏதேனும் உள்நோக்கங்களுக்காகவோ அல்ல. மாற்றமாக முஸ்லிம்களின் இரத்தம் உறிஞ்சப்படுவதில் இருந்து பாதுகாக்கப்படுவதால் அல்லாஹ்விடம் உள்ள

வெகுமதிக்காகவே! மார்க்க விவகாரத்தையும், சமூகத்தின் பொது நலனையும் கருத்தில் கொண்டு செயற்பட்டார். (இவர்கள் பிரிந்து காணப்பட்டாலும்) நபி (ஸ) அவர்கள் இம்மக்களை முஸ்லிம்கள் என சாட்சியம் கூறி உள்ளதால் அலி (ரழி) அவர்களையும், அவருடன் கூட இருந்தோரையும், முஆவியாவையும், அவருடன் கூட இருந்தவர்களையும் காபிர்கள் எனவாதிடும் கவாரிஜ்களுக்கு மறுப்பும் இதில் உள்ளது. (பத்ஹுல் பாரி. பாகம்:20. பக்கம்:115- இலத்திரணியல் நூலகம்).

முஆவியா (ரழி) அவர்களுக்கும், அலி (ரழி) அவர்களுக்கும் இடையில் காணப்பட்ட பிளவை சாதாரண ஒரு அரசியல் பிளவாகவே கொள்ளப்பட வேண்டும். தரீக்காக்கள், வழிகெட்டபிரிவுகளுக்கிடையில் காணப்பட்ட, இஸ்லாமிய அடிப்படையில் இருந்து விலகிய பிரிவாக இப்பிரினையைக் கொள்ளவே முடியாது. இஸ்லாமிய உம்மத்தில் வழிகெட்ட சிந்தனைகளைத் தாங்கிய ஒரு ஷீஆ, கவாரிஜ்' முஃதஸிலா போன்ற கும்பல்கள் இதை பாரிய பிளவாகக் கொண்டாலும் இது மன்னிக்கப்பட முடியுமான சாதாராணதொரு முரண்பாடுதான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இது 'அல்அஸ்மா வஸ்ஸிபாத்' எனப்படும் அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளில் வழிதவறிய பிரிவுகளின் சிந்தனையில் இருந்து மிக்க வேறுபட்டாதகும்.

.....وَاسْتُدِلَّ بِهِ عَلَى تَصْوِيب رَأْي مَنْ قَعَدَ عَنْ الْقِتَال مَعَ مُعَاوِيَة وَعَلِيّ وَإِنْ كَانَ عَلِيّ أَحَقّ بِالْخِلَافَةِ وَأَقْرَب إِلَى الْحَقّ ، وَهُوَ قَوْل سَعْد بْن أَبِي وَقَّاص وَابْن عُمَر وَمُحَمَّد بْن مَسْلَمَةَ وَسَائِر مَنْ اِعْتَزَلَ تِلْكَ الْحُرُوب . وَذَهَبَ جُمْهُور أَهْل السُّنَّة إِلَى تَصْوِيب مَنْ قَاتَلَ مَعَ عَلِيّ لِامْتِثَالِ قَوْله تَعَالَى ( وَإِنْ طَائِفَتَانِ مِنْ الْمُؤْمِنِينَ اِقْتَتَلُوا ) الْآيَة فَفِيهَا الْأَمْر بِقِتَالِ الْفِئَة الْبَاغِيَة ، وَقَدْ ثَبَتَ أَنَّ مَنْ قَاتَلَ عَلِيًّا كَانُوا بُغَاة ، وَهَؤُلَاءِ مَعَ هَذَا التَّصْوِيب مُتَّفِقُونَ عَلَى أَنَّهُ لَا يُذَمّ وَاحِد مِنْ هَؤُلَاءِ بَلْ يَقُولُونَ اِجْتَهَدُوا فَأَخْطَأُوا ، وَذَهَبَ طَائِفَة قَلِيلَة مِنْ أَهْل السُّنَّة – وَهُوَ قَوْل كَثِير مِنْ الْمُعْتَزِلَة – إِلَى أَنَّ كُلًّا مِنْ الطَّائِفَتَيْنِ مُصِيب ، وَطَائِفَة إِلَى أَنَّ الْمُصِيب طَائِفَة لَا بِعَيْنِهَا . فتح الباري لابن حجر – (ج 20 / ص 115)

அலி (ரழி) அவர்கள் ஆட்சிக்கு தகுதியானவர்களாகவும், சத்தியத்திற்கு மிக நெருக்கமானவர்களாகவும் இருந்தாலும் இதன் மூலம் முஆவியா, மற்றும் அலி (ரழி) அவர்களுடன் இணைந்து போரில் கலந்து கொள்ளாதிருந்தோரின் நிலைப்பாடு சரியானது என்பது இதன் மூலம் ஆதாரமாகக் கொள்ளப்படமுடியும். ஸஃத் பின் அபீவக்காஸ், இப்னு உமர் (ரழி) முஹம்மத் பின் மஸ்லமா மற்றும் போரில் கலந்து கொள்ளாது விலகி இருந்தவர்களின் நிலைப்பாடும் இதுவே. இறை நம்பிக்கையாளர்களில் இரு அணியினர் போர் செய்தால் அவ்விரு அணிகளுக்கும் இடையில் சமரஸம் செய்து வையுங்கள் என்ற வசனத்தின்படி அலி (ரழி) அவர்களுடன் இருந்தோரே சத்தியவாதிகள், அவர்களுடன் போர் செய்தோர் அத்துமீறியோர் என்ற கருத்தைக் கொள்ளும் பலர் இருந்தாலும் ஒருவர் மற்றவரை பழிக்க முடியாது. மாற்றமாக அவர்கள் இஜ்திஹாத் செய்தனர், தவறிழைத்தனர் என்றே கொள்ள வேண்டும். இவர்களில் இரு அணியினரும் சரியான வழியில்தான் இருந்தனர் என்பதை சுன்னாக்களில் ஒரு குழுவினரும், முஃதஸிலாக்களில் பலரும் கருத்து வெளியிட்டுள்ளனர். (பார்க்க: பத்ஹுல்பாரி, இப்னு ஹஜர் அல்அஸகலானி)

... وَاتَّفَقَ أَهْل السُّنَّة عَلَى وُجُوب مَنْع الطَّعْن عَلَى أَحَد مِنْ الصَّحَابَة بِسَبَبِ مَا وَقَعَ لَهُمْ مِنْ ذَلِكَ وَلَوْ عَرَفَ الْمُحِقّ مِنْهُمْ لِأَنَّهُمْ لَمْ يُقَاتِلُوا فِي تِلْكَ الْحُرُوب إِلَّا عَنْ اِجْتِهَاد وَقَدْ عَفَا اللَّه تَعَالَى عَنْ الْمُخْطِئِ فِي الِاجْتِهَاد ، بَلْ ثَبَتَ أَنَّهُ يُؤْجَر أَجْرًا وَاحِدًا وَأَنَّ الْمُصِيب يُؤْجَر أَجْرَيْنِ (فتح الباري لابن حجر – ج 20 / ص 87)

நபித்தோழர்கள் தமக்குத் தோன்றிய கருத்தின் (இஜ்திஹாதின்) அடிப்படையில்தான் தமக்கிடையில் போர் செய்தனர். அவர்கள் மத்தியில் காணப்பட்ட சர்ச்சை விஷயத்தில் அவர்களில் ஒருவரையேனும்

குறைகாணக்கூடாது என்பதில் 'அஹ்லுஸ்ஸுன்னா'வினர் ஏகமனதான முடிவில் உள்ளனர். அவர்களில் சத்தியத்தில் இருந்தவர் யார் என அறியப்பட்டிருப்பினும் சரியே! 'இஜ்திஹாத்' இன் மூலம் தவறிழைத்தவர்களை நிச்சயமாக அல்லாஹ் மன்னித்துவிடுவான். தவறிழைத்தவர் ஒரு கூலி வழங்கப்படுவார், சரியான முடிவில் உள்ளவர் இரு கூலி வழங்கப்படுவார் என்றே எடுத்துக் கொள்ள வேண்டும். **(பார்க்க: பத்ஹுல்பாரி 20-87).**

**இது அகீதா அடிப்படையில் ஏற்பட்ட பிளவு அல்ல என்பதையும் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும்.**

## இந்தப்பிரிவின் தோற்றத்திற்கான உண்மைக் காரணி.

நபி (ρ) அவர்களால் **'ஷஹீத்** என முன்னறிவிப்புச் செய்யப்பட்ட மூன்றாம் கலீபாவான உஸ்மான் பின் அப்பான் (τ) அவர்களின் ஆட்சியின் தளம்பல் நிலைக்கு வித்திட்ட 'கவாரிஜ்கள்' இறுதியில் அவர்களைக் கொலை செய்தமை ஐக்கியமாக வாழ்ந்த சமூகத்தின் மீது விழுந்த பேரிடியாக அமைந்து விட்டது.

**'யார் அநியாயமாக கொலை செய்யப்படுகின்றாரோ அவரது பொறுப்பாளருக்கு (கொலையாளியை) (மன்னிக்கும், அல்லது தண்டிக்கும்) அதிகாரத்தை நாம் வழங்கியுள்ளோம். கொலையில் அவர் எல்லைமீற வேண்டாம். நிச்சயமாக அவர் உதவி செய்யப்படுவராக இருக்கின்றார். (அல்-இஸ்ரா. வச: 33)** என்ற இறைமறை வசனத்தை ஆதாரமாகக் கொண்டு மூன்றாம் கலீபாவின் கொலையாளிகளை தண்டிக்கின்ற, அல்லது ஒப்படைக்கின்றவரை தானோ, தனது ஆழுகையின் கீழ் இருக்கும் முஸ்லிம்களோ நான்காம் கலீபாவாக மதீனாவில் தெரிவு செய்யப்பட்டிருக்கின்ற அலி (τ) அவர்களுக்கு 'பைஅத்' உறுதி மொழி தரமாட்டோம் என உஸ்மான் (τ) அவர்களின் தந்தையின் சகோதரரின் மகனாகிய முஆவியா (τ) அவர்கள் கூறியதன் விளைவாகவும், இன்னும் சில காரணிகளையும் அடிப்படையாகக் கொண்டும் முஸ்லிம்கள் முஆவியா அணி, அலி அணி என இரண்டு பிரிவாக மாறினர்.

## மு.:.தஸிலா என்ற சொற்பதமும், விளக்கமும்.

**/ மொழி அடிப்படையில் இது (اعتزل) 'இ.:.தஸல' விலகி இருந்தான், ஒதுங்கி இருந்தான். என்ற அரபுச் சொல்லில் இருந்து பெறப்பட்ட சொற்றடாகும். ஒருவர் குழப்பங்கள், கலவரங்கள் போன்றவற்றிலிருந்து விலகி இருப்பதைக் குறிக்கவும் அந்தச் சொல் பயன்படுத்தப்படுவதுண்டு.**

وَبَايَعَ مُعَاوِيَة كُلّ مَنْ كَانَ مُعْتَزِلًا لِلْقِتَالِ كَابْنِ عُمَر وَسَعْد بْن أَبِي وَقَّاص وَمُحَمَّد بْن مَسْلَمَةَ ... (فتح الباري لابن حجر – (ج 20 / ص 115)

**அலி (τ) அவர்களின் மரணத்தின் பின்னர் போரில் கலந்து கொள்ளாது விலகி இருந்த இப்னு உமர், ஸ.:.த் பின் அபீவக்காஸ், முஹம்மத் பின் மஸ்லமா போன்ற நபித்தோழர்கள் முஆவியா (τ) அவர்களுக்கு பைஅத் செய்தார்கள். என்ற பொருளில் இதன் அடிப்படையிலேயே ஆளப்பட்டுள்ளது. (பார்க்க: பத்ஹுல்பாரி)**

**முஆத் எமக்கு .:.பஜ்ர் தொழுகை நடத்தினார், எம்முடன் தொழாமல் ஒருமனிதர் ஒதுங்கி நின்றார் ... (புகாரி, முஸ்லிம்) என்ற செய்தியில் 'இ.:.தஸல' என்ற சொல் இடம் பெற்றுள்ளதைப் பார்க்கிறோம்.**

**/ மார்க்க வழக்கில்: அஹ்லுஸ்ஸுன்னா, அல்லது 'ஸலபுக்கள்' என்போரின் அகீதா கோட்பாட்டிற்கு மாற்றமான சிந்தனைகளையும், சித்தாந்தங்களையும் கொண்டிருப்பதுடன், பகுத்தறிவின் அடிப்படையில் ஆதாரங்களை குறிப்பாக ஹதீஸ்களை**

**அனுகி, அதற்கு ஒத்ததை ஏற்றுக் கொள்வதுடன், ஒத்து வராதவற்றை மறுத்து, இஸ்லாமிய உம்மாவில் இருந்து பிரிந்த ஒரு சமூகத்தைக் குறிப்பிடவே இந்தச் சொல் பொதுவாக பயன்படுத்தப்பட்டுள்ளது. (பார்க்க: இப்னுதைமிய்யா.**

**(ابن تيمية: درع تعارض العقل والنقل)(التعليقات المخختصرة على متن الطحاوية للشيخ الفوزان)**

**/ பெரும் பாவம் செய்தவனின் நிலை பற்றி 'ஹஸனுல் பஸரி' என்ற தாபியி ஒருவர் தனது மாணவர்களிடம் விசாரித்த போது அவர் இவ்வுலகில் (சுவர்க்கம், நரகம் ஆகிய) இரு நிலைகளுக்கும் இடைப்பட்ட ஓர் நிலையில் கணிக்கப்படுவார். மு∴மினும் அல்ல, காபிரும் அல்ல. ஆனால் மறுமையில் நிரந்தர நரகத்தில் இருப்பார் என வாஸில் பின் அதா என்பவர் கூறி அந்த சபையை விட்டும் விலகி, தனக்கென ஒரு கூட்டத்தையும் உருவாக்கியதன் பயனாக இப்பெயர் வரலாயிற்று என்று அகீதா துறை சார்ந் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். வாஸிலுடன் அம்று பின் உபைத் என்பவனும் இணைந்து காணப்பட்டதாக மற்றும் சிலர் குறிப்பிடுகின்றனர் (பார்க்க: அல்மவ்ஸு அதுல் முயஸ்ஸரா. உலக வாலிபர் ஒன்றியம். சவூதிஅரேபியா. பாகம் 02). (அத்த∴லீகாத்துல் முக்தஸரா அலாமத்னித்தஹாவிய்யா).**

## மு∴தஸிலாக்களின் தோற்றம்.

ஹிஜ்ரி இரண்டாம் நூற்றாண்டின் ஆரம்ப காலப்பகுதியில் பகுத்தறிவால் வெளிப்பட்ட தத்துவத்தை பிரதானப்படுத்தும் பிரிவாகும். அப்பாயஸியர் ஆட்சியில் அதன் உச்ச நிலையை அது அடைந்தது.

நபி (ع) அவர்களின் சமுதாயத்தினர் ஒரே சமுதாயமாக, ஒரே மார்க்க அடிப்படையைத் தழுவி அகீதாவில் தளம்பல், பிரழ்வுகள் இன்றி வாழ்ந்து வந்தனர். ஸஹாபாக்களின் காலத்தில் கவாரிஜ்கள் தோன்றி பெரும்பெரும் நபித்தோழர்களை காபிர்கள் என வாதிடும்வரை இந்நிலை நீடித்துக் காணப்பட்டது. பின்னர் ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்கள் தோன்றினர், அத்துடன் அலி (ط) அவர்களை விரோதிக்கும் நவாஸிப்கள் எனப்படும் பண்பாளர்களும் தோன்றினர். நபித்தோழர்களின் இறுதிக்காலத்தில் கத்ரை மறுப்போர் (கத்ரிய்யாக்கள்) தோன்றினர். பின்னர் பஸராவில் மு∴தஸிலாக்கள் வெளிப்பட்டனர். தாபியீன்களின் மத்திய காலப்பகுதியில் ஜஹ்மிய்யாக்கள், முஷப்பிஹாக்கள் (அல்லாஹ்வுக்கு உருவம் கற்பிப்போர்) தோன்றினர். ம∴மூனின் ஆட்சிகாலத்தில் பகுத்தறிவாளர்களான மு∴தஸிலாக்களுக்கு முன்னுரிமை வழங்கப்பட்டதன் பயனாக ஆட்சியாளரின் துணைகொண்டு தமது செல்வாக்கை பயன்படுத்தினர். தமது சித்தாந்தங்களை மக்கள் மன்றத்தில் முன்வைத்து, அவர்களை வழிகெடுத்தனர். இவர்களோ அல்குர்ஆன் படைக்கப்பட்டது என்ற ஆரம்கால ஜஹ்மிய்யாக்களின் தத்துவத்தை உலகுக்கு முதன்முதலில் உயிரோட்டம் கொடுத்தவர்கள். இவர்களின் சிந்தனைக்கு மாற்றமான அறிஞர் பெருமக்கள் கடுமையான சோதனைக்கு உட்படுத்தப்பட்டனர். இது ஹிஜ்ரி :217-ல் நடந்ததாக இஸ்லாமிய வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறனர்.

**பிரிந்து வாழ்தல் சிலவேளை கடமையாகும்.** பிரிவினையை இஸ்லாம் ஆதரிக்கவில்லை. சில கட்டங்களில் அதை வரவேற்கின்றது, கட்டாயப்படுத்துகின்றது என்பதை பின்வரும் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு அறிந்து கொள்ள முடியும்.

! **அகீதாவிற்கு முரணான நடைமுறை.** இதற்கு நபிமார்களின் வரலாற்றை ஓர் அடிப்படையாகக் கொள்ள முடியும். நபிகள் நாயகம் (ع) அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்காவாழ் காபிர்கள் அல்லாஹ்வை அவனது உரிமைகள், கடமைகளைப் பேணி, சரியான முறையில் நம்பிக்கை கொள்ளாதவர்களாகக் இருந்தனர். நபிகள் நாயகம் (ع) அவர்கள் இவர்கள் மத்தியில் பிரச்சாரத்தை முன்னெடுத்த போது நபி (ع)

அவர்களும், அவர்களை ஏற்றுக்கொண்ட முஸ்லிம்களும் பிரிவினைவாதிகளாகவே நோக்கப்பட்டனர்.

/ أَجَعَلَ الْآَلِهَةَ إِلَهًا وَاحِدًا إِنَّ هَذَا لَشَيْءٌ عُجَابٌ (5) وَانْطَلَقَ الْمَلَأُ مِنْهُمْ أَنِ امْشُوا وَاصْبِرُوا عَلَى آَلِهَتِكُمْ إِنَّ هَذَا لَشَيْءٌ يُرَادُ (6) مَا سَمِعْنَا بِهَذَا فِي الْمِلَّةِ الْآَخِرَةِ إِنْ هَذَا إِلَّا اخْتِلَاقٌ [ص/4-7]

இவர் 'பல கடவுளர்களை ஒரு கடவுளாக்கிவிட்டாரா ? இது ஆச்சரியமான விஷயம்தான்! இது பற்றி நாம் நமது முன்னோர்களின் மார்க்கத்திலும் கேள்விப்பட்டதில்லையே! அவர்களில் ஒரு குழுவினர் சென்று எழுந்து செல்லுங்கள், உங்கள் கடவுளுக்காக பொறுமை செய்யுங்கள், நிச்சயமாக இது எதிர்பாரக்கப்பட்டதுதான், இது ஒரு புதிய கண்டுபிடிப்பே அன்றி வேறில்லை. (அத்தியாயம் 38: வசனங்கள்: 5-7 வது வசனங்கள்) (என்றும் கூறினார்கள்)

முஹம்மத் (ε) அவர்கள் மக்கள் மத்தியில் ஒரு பிரிவாக இருப்பார்கள் (புகாரி) என்ற செய்தியின் மூலம் முஸ்லிம்கள் கொள்கையில் பிரிந்தே இருக்க வேண்டும் என்பதை விளங்கலாம்.

**! இஸ்லாமிய தலைமைத்துவமின்மை.** முஸ்லிம் உம்மத் இஸ்லாமிய தலைமைத்துவத்துடன் காணப்படுகின்ற போது அதற்கு எதிராக கிளர்ச்சி செய்வதை இஸ்லாம் வண்மையாகக் கண்டிக்கின்றது. அப்படியானதொரு நிலை காணப்படாத போது பிரிந்து தனிமையில் வாழ்வதை வரவேற்கின்றது, வற்புறுத்துகின்றது. இது பற்றி ஹுதைபா (τ) அவர்கள் அறிவிக்கும் பின்வரும் செய்தியில்

.... قُلْتُ فَإِنْ لَمْ يَكُنْ لَهُمْ جَمَاعَةٌ وَلَا إِمَامٌ قَالَ فَاعْتَزِلْ تِلْكَ الْفِرَقَ كُلَّهَا وَلَوْ أَنْ تَعَضَّ بِأَصْلِ شَجَرَةٍ حَتَّى يُدْرِكَكَ الْمَوْتُ وَأَنْتَ عَلَى ذَلِكَ ( صحيح البخاري )

**முஸ்லிம்களின் அமைப்பையும், அதன் தலைவரையும் நீ பற்றிக் கொள் என நபி (ε) அவர்கள் கூறிய போது, அல்லாஹ்வின் தூதரே! அவர்களுக்கு ஜமாத்தும், இமாமும் இல்லாத நிலையில் என்ன செய்து கொள்வது என நான் கேட்டேன். அந்த அனைத்த பிரவுகளில் இருந்தும் நீ ஒதுங்கிக் கொள். உனக்கு மரணம் வரும் வரை ஒரு மரத்தின் வேரைக்கடித்துக் கொள். அந்நிலையில் உன்னை மரணம் வந்தடையட்டும் எனக் கூறினார்கள். (புகாரி)**

وَفِي الْحَدِيث أَنَّهُ مَتَى لَمْ يَكُنْ لِلنَّاسِ إِمَام فَافْتَرَقَ النَّاس أَحْزَابًا فَلَا يَتَّبِع أَحَدًا فِي الْفُرْقَة وَيَعْتَزِل الْجَمِيع إِنْ اِسْتَطَاعَ ذَلِكَ خَشْيَةَ مِنْ الْوُقُوع فِي الشَّرّ ، (فتح الباري لابن حجر – (ج 20 / ص 89)

**மக்களுக்கென பொதுவான இமாம் ஒருவர் இல்லாதபட்சத்தில் மக்கள் பல குழுக்களாகப் பிரிந்து காணப்பட்டால் அந்தப்பிரிவில் யாரையும் பின்பற்ற வேண்டியதில்லை. தீமையில் வீழ்ந்துவிடுவதை அஞ்சி சகல பிரிவுகளை விட்டும் விலகி இருக்க வேண்டும் என்பதை இந்த ஹதீஸில் காணமுடிகின்றது' என இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். இதை அடிப்படையாகக் கொண்டே அலி, முஅவியா (ரழி) அவர்களின் குழப்பங்களின் போது நபித்தோழர்கள் விலகி இருந்தார்கள் என்பதை அறிகிறோம்.**

## ! தலைமைத்துவங்கள் மத்தியில் குழப்பங்கள் காணப்படுதல்.

அலி (τ) அவர்களுக்கும், முஆவியா (τ) அவர்களுக்கும் இடையில் காணப்பட்ட சரச்சையின் போது விலகி இருந்த ஸஹாபாக்களின் நிலைப்பாடு சரிகாணப்பட்டுள்ளதை இதற்கு ஆதாரமாகக் கொள்ள முடியும். நபி (ε) அவர்களின் பல நபிமொழிகள் இதற்கு துணையாகவும் இருக்கின்றன.

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ يُهْلِكُ أُمَّتِي هَذَا الْحَيُّ مِنْ قُرَيْشٍ قَالُوا فَمَا تَأْمُرُنَا قَالَ لَوْ أَنَّ النَّاسَ اعْتَزَلُوهُمْ (متفق عليه )

**எனது சமுதாயத்தை உயிர்வாழும் இந்தக்குரைஷி அழிவுக்கு தள்ளுவார் என நபிகள் நாயகம் (ஸ) அவர்கள் பின்னர் தோன்றவிருக்கும் ஒரு ஆட்சியாளரைப்பற்றிக் கூறிய போது அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் என்ன கட்டளையிடுகின்றீர்கள் என நபித்தோழர்கள் வினவினார்கள். மக்கள் அவர்களை விட்டும் விலகி வாழட்டும் எனப்பதில் அளித்தார்கள். (புகாரி, முஸ்லிம்)**

மக்கள் இணைந்து வாழாது பிரிந்து வாழ்வது காரணத்துடன் இங்கு அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

## இப்பிரிவுகள் தோன்றிய பிரதேசங்கள்.

**குழப்பங்களின் தோற்றுவாயாக முன்னறிவிப்புச் செய்யப்பட்ட பிரதான நகரம் ஈராக்காகும். அங்கிருந்துதான் பூமியில் அதிர்வுகளும், குழப்பங்களும் தோன்றும் என நபிகள் நாயகம் (ஸ) அவர்கள் கூறினார்கள் (புகாரி, முஸ்லிம்).**

**இந்தச் செய்தியை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால் ஈராக்கும், பூகோள ரீதியாக அதனுடன் தொடர்புடைய பிரதேசங்களும் குழப்பமான வழிமுறைகளைக் கொண்ட பிரதேசமாக தொடர்ந்தும் காணப்படும் என்பதை மிகத் தெளிவாக விளங்கலாம்.**

**அதனால்தான் அங்கு பல குழப்பங்கள், அகீதாவிற்கு மாற்றமான பிரிவுகள் தோன்றினர். அவற்றில் முஃதஸிலாக்களும் உள்ளடங்குவர். இது பற்றி விளக்கும் அறிஞர்கள்.**

இப்பிரவினர்களுக்கு இரு கலாசாலைகள் காணப்பட்டன. அதில் ஒன்று வாஸில் பின் அதா, அம்று பின் உபைத், அபுல் ஹுதைல் அல்அல்லாஃப், இப்ராஹீம் அந்நள்ளாம், அல்ஜாஹிழ் போன்றோரை பிரதிநிதித்துவப்படுத்தி பஸராவிலும், பிஷ்ரு பின் அல்முஃதமர், அபூமூஸா அல்முர்தார், ஸுமாஹா பின் அஷ்ரஷ், அஹ்மத் பின் அபீதாவூத் போன்றோரை பிரதிநிதித்துவப்படுத்தி பக்தாதிலும் காணப்பட்டதாக தெரிவிக்கின்றனர். (பார்க்க: அல்மில்ல வந்நிஹல். ஷஹ்ருஸ்தானி). (அல்ஃபிரக் பைனல்பிரக். அப்துல்காதிர் அல்பக்தாதி).

## முஃதஸிலாக்களும் 'அல்அஸ்மா வஸ்ஸிபாத்' விடயத்தில் அவர்களின் நிலைப்பாடும்

**அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளில் மாற்றம் செய்யாது, திரித்துக் கூறாது சொற்களுக்கான கருத்துக்களை வெளிப்படையாக வழங்குவது, ஈமான் கொள்வது ஸலபுக்களின் அகீதா கோட்பாடாகும். இது பற்றிய விரிவான தகவல் 'தவ்ஹீதுல் அஸ்மா, வஸ்ஸிபாத்' என்ற நமது ஆய்வில் தரப்பட்டுள்ளது.**

**அகீதாவிற்கு எதிரான பல பிரவினர் ஸலபுக்களின் காலத்தில் தோன்றினர். அவர்களில் கவாரிஜ், ஷீஆ, முர்ஜிஆ, கத்ரிய்யா ஆகிய பிரிவுகள் ஸஹாபாக்களின் காலத்தில் தோன்றின.**

**முஃதஸிலாக்கள் எனப்படுவோர் ஹஸனுல் பஸரி அவர்களின் காலத்தில் முதலாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உருவாகினர். உண்மையில் இவர்கள் கவாரிஜ்களின் சிந்தனையின் மறுவடிவம் என்று கூடக் கூற முடியும். இது பற்றிய சவூதி அரேபிய அறிஞரான** ஸபர் அலஹவாலை **பின்வரும் கருத்தைப் படியுங்கள்**

ஹவாரிஜ், ஷீஆ, முர்ஜிஆ, கத்ரிய்யா, ஆகிய இந்த நான்கு பிரிவுகளும் நபித்தோழர்களின் காலத்தில் தோன்றிவிட்டன. இவை நான்கில் இருந்தும் பல கிளைப்பிரிவுகள் தோற்றம் பெற்றன. முஃதஸிலாக்கள் ஹஸன் அல்பஸரியின் காலத்தில், ஹிஜ்ரி நூறளவில் தோற்றம் பெற்றனர், இவர்களின் தோற்றம் பற்றி சிந்தித்தால் உண்மையில் ஹவாரிஜிய சிந்தனையின் நீழ்பாதை என்றே முடிவு செய்ய வேண்டி உள்ளது. (பார்க்க: ஷரஹு த்தஹாவிய்யா. ஸபர் அலஹவாலை) .

**இவ்வாறான நவீன 'பித்அத்' சித்தாங்தங்களையுடை இப்பிரிவினர் பற்றி எடுத்துக் கூறும் இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள்**

وَهَؤُلَاءِ الْفِرَق الْأَرْبَع هُمْ رُءُوس الْبِدْعَة وَقَدْ سَمَّى الْمُعْتَزِلَة أَنْفُسهمْ " أَهْل الْعَدْل وَالتَّوْحِيد " وَعَنَوْا بِالتَّوْحِيدِ مَا اِعْتَقَدُوهُ مِنْ نَفْي الصِّفَات الْإِلَهِيَّة ، لِاعْتِقَادِهِمْ أَنَّ إِثْبَاتهَا يَسْتَلْزِم التَّشْبِيه وَمَنْ شَبَّهَ اللَّه بِخَلْقِهِ أَشْرَكَ ، وَهُمْ فِي النَّفْي مُوَافِقُونَ لِلْجَهْمِيَّةِ ، وَأَمَّا أَهْل السُّنَّة فَفَسَّرُوا التَّوْحِيد بِنَفْيِ التَّشْبِيه وَالتَّعْطِيل . ( فتح الباري لابن حجر – (ج 20 / ص 437)

இந்த நான்கு பிரிவினரும் பித்அத்வாத குழுக்களில் தலையானதும், அடிப்படையானதுமாகும். தமக்குத்தாமே **'அஹ்லுல்அத்லி வத்தவ்ஹீத்'** என பெயர் சூடிக் கொண்ட மு∴தஸிலாக்கள் அல்லாஹ்வின் பண்புகளை இருட்டடிப்புச் செய்வதை, இல்லாதொழிப்பதை **'தவ்ஹீத்'** என்கின்றனர். அல்லாஹ்வுக்கு பண்புகளை நிலைப்படுத்துவதானது அவன் பேரில் உருவகத்தை தோற்றுவித்ததாகக் கொள்ளப்படும் என்றும், அவ்வாறு செய்வது ஷிர்க்காகிவிடும் என்றும் வாதிடும் இப்பரிவினர் இந்த விஷயத்தில் ஜஹ்மிய்யாக்களை ஒத்தவர்கள். ஆனால் அஹ்லுஸ்ஸு ன்னா பிரிவினர் 'அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளை உவமான, உவமேயம் கூறாத, உருவகப்படுத்தாத , கருத்துச் சிதைவு அற்ற, பொருள் பாழடிப்பில்லாத ஒரு நிலையைக் கொண்டு விளக்கியுள்ளனர் எனக் குறிப்பிடுகிறார்கள். **(பார்க்க: பத்ஹு ல் பாரி)**

## வழி நடாத்திய ஆளுமைகள்.

வழி கெட்ட இந்த தத்துவங்களை தோற்றுவிப்பதில் பல தலைமைகள் காணப்படுகின்றன. 'வாஸில் பின் அதா' என்பவன் மு∴தஸிலாப்பிரிவின் சிந்தனையைத் தோற்றுவிப்பதில் முக்கிய பாத்திரமாகும். இவனே இந்தப்பிரிவின் பிரதான ஸ்தாபகர் என வர்ணிக்கப்படுகின்றான். அவனது வழியை **அம்று பின் உபைத்** என்பவனும் தொடர்ந்தான்.

அப்பாஸிய ஆட்சியாளரான ஹாரூன்-அல்-ரஷீத் என்பவரின் ஆட்சியின் போது 'அபூஹு தைல் அல்அல்லாப்' என்பவரால் இரண்டு நூல்கள் எழுதப்பட்டது. அவற்றில் இவர்களின் ஐந்து அடிப்படை அம்சங்களைக் கொண்ட கொள்கை, கோட்பாடுகள் பற்றி அல்அல்லாப் விபரித்தார். (அவைப் பற்றிய விபரம் பின்னர் தரப்படும்)

## மு∴தஸிலா சிந்தனைப் பரிணாமம்.

இப்பரிவினர் தடீரென முளைத்த ஒரு புதிய பிரிவினர் என வர்ணிப்பதை விட இவர்களுக்கு முன் தோன்றி, அல்அஸ்மா வஸ்ஸிபாத் விஷயத்தில் வழிகெட்ட ஜஹ்மிய்யாக்கள், ஜப்ரிய்யாக்கள் போன்றோரின் கொள்கைத்தாக்கத்தால் இவர்கள் பரிநாம வளர்ச்சியடைந்தவர்கள் என வர்ணிப்பதே பொருத்தமானதாகத் தெரிகின்றது.

**! மனிதன் ஒட்டு மொத்தமான சுதந்திரப்பறவை. அவனே தனது செயல்பாடுகளைப் படைத்துக் கொள்கின்றான். அல்லாஹ்வின் நாட்டத்திற்கும், மனித செயல்பாடுகளுக்கு எவ்வித உறவும் கிடையாது'** என்ற கருத்தை பஸராவில் ம∴பத் அல்ஜு ஹனி என்பவன் முதலில் அறிவித்தான். ஹி: 80-ல் ஹஜ்ஜாஜ் பின் யூசுப் என்பவரால் கொலை செய்யப்பட்ட 'அப்துர்ரஹ்மான் பின் அல்அஷ்அஸ்' **(عبد الرحمن بن الأشعث) என்பவனுடன் இணைந்து இவன் உமையா ஆட்சியாளரான அப்துல் மலிக் என்பவரின் ஆட்சிக்கு எதிராக செயல்பட்டான்.**

**அவ்வாறு (غيلان الدمشقي) 'கைலான் அத்திமஷ்கி'** என்பவனும் உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் காலத்தில் இக்கருத்தை வெளிப்படுத்தினான். அதே போன்று 'ஜ∴த் பின் திர்ஹம்' என்பவன் அல்லாஹ்வுக்கு பண்புகள் இல்லை என்றும், குர்ஆன் படைக்கபட்டது என்றும் கூறியதை அவனது பிரத்தியேக மாணவர்களில் ஒருவரான 'ஜஹ்ம் பின் ஸப்வான்' என்பவன் கூறி இருந்தான். இவை யாவும் மு∴தஸிலாக்களால் பின்னர் கொள்கையாக அங்கீகரிக்கப்பட்டது. பெரும்பாவம் செய்தவர் பற்றிய வாஸிலின் நிலைப்பாடும் இதன் தொடராகவே அமைந்தது. அப்துல்

மலிக், மற்றும் ஹிஷாம் பின் அப்துல் மலிக் ஆகியோரின் ஆட்சியில் வாஸில் வாழ்ந்தவன் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**இவை யாவும் ஸலபுக்களின் அகீதா கோட்பாட்டிற்கு முற்றிலும் மாறான, தவறான கருத்து என்பதை நாம் அறிவோம்.**

## முஃதஸிலா சித்தாந்தம் பரவக் காரணமும் பங்களிப்புச் செய்தோரும்.

இஸ்லாமிய அகீதாவிற்கு மாற்றமான அனைத்து சித்தாந்தங்களும் அல்குர்ஆன், அஸ்ஸுன்னா பற்றிய சரியான தெளிவின்மை, பகுத்தறிவிற்கு முன்னுரிமை வழங்குதல், காலசூழல், தீய எண்ணம், நேரடி ஆதாரங்களை பிழையாக விளங்குதல், விளக்குதல், இஸ்லாத்தைக் குறைகாணுதல், ஆதார முரண்பாடுகளின் போது ஸலபுக்களின் விளக்கத்தின் பக்கம் செல்லாமை போன்ற அடிப்படைக் காரணிகள் வழிகேட்டிற்கும், பிரிவினைக்கும் வழிகோலியது போன்று அரசியல் பிளவுகளும் காரணிகளாக அமைந்தன.

நாம் ஆரம்பத்தில் கூறியது போன்று உமைய்யா ஆட்சியின் இறுதிக்கட்டத்தில் இவ்வாறான பிரிவுகள் தோன்றினாலும் அப்பாஸிய ஆட்சியாளரான மஃமூன் என்பவரால் முஃதஸிலாக்களுக்கு தளம் அமைத்துக் கொடுக்கப்பட்டது என்பதே உண்மை. இவர் பிஷ்றுல் முரீஸி, ஸுமாஹா பின் அஷ்ரஷ், அஹ்மத் பின் அபீதாவூத் போன்ற முஃதஸிலாக்கள் மூலம் அந்தக் கொள்கையை ஏற்றுக் கொண்டார்.

இவர் கிரேக்க, மற்றும் இந்து நூல்களை தனது ஆட்சியில் மொழியாக்கம் செய்ததும் பகுத்தறிவின் பக்கம் மக்கள் ஈர்க்கப்படக் கராணமாக அமைந்தது. மற்றொரு அப்பாஸிய ஆட்சியாளரான முஃதஸிம் என்பவர் இமாம் அஹ்மத் பின் ஹன்பலை அல்குர்ஆன் படைக்கப்பட்டது என ஏற்றுக் கொள்ளும்படியும், அதை ஏற்க மறுத்தபோது கடுமையாக அவரை வதை செய்தார் என்பதை நாம் அறிவோம்.

'வாஸிக்' என்ற அவரது மகனது ஆட்சி முடியும் வரை கிட்டதட்ட இரண்டரை வருடங்கள் சிறையிலிடப்பட்டு வேதனை செய்யப்பட்டதையும் பார்த்தால் அப்பாஸிய ஆட்சியாளர்களால் இக்கொள்கைக்கு வழங்கப்பட்டிருக்கும் பாரிய பங்களிப்பை உணரமுடிகின்றது. அதேவேளை இவரது மரணத்தின் பின்னர் ஆட்சியில் அமர்ந்த மற்றுமொரு அப்பாஸிய ஆட்சியாரான அல்முதவக்கில் என்பவரால் சுன்னாவாதிகள் கௌவரமாக நடத்தப்பட்டதைப்பார்க்கின்ற போது ஒரு கொள்கையின் வளர்ச்சியிலும், வீழ்ச்சியிலும் பொதுவாக ஆட்சியாளர்களின் பங்களிப்பு முக்கியத்துவம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

பாரசீகத்தில் (பக்தாதில்) அப்பாஸியர் ஆட்சிக்கு எதிராக பல குழுக்கள் களமிறங்கி, செயல்பட்டன, ஆட்சிக்குள் குட்டியாட்சி நடாத்தின, ஷீஆக்களில் ஒருபிரிவான 'ஸைதிய்யா'க்கள் எனப்படுவோரின் கொள்கையைப் பிரதிபலித்த 'அஹ்மத் பின் புவைஹ்' என்பவன் தலைமையில் ஒரு நூற்றாண்டு காலம் (337-447) நடை பெற்ற இவ்வாறாதொரு ஆட்சியில் முஃதஸிலாக் கொள்கை பாரயளவு தாக்கம் செலுத்தியது.

ஷீஆக்களுக்கும். முஃதஸிலாக்களுக்கும் இடையில் காணப்பட்ட கொள்கை அடிப்படையலான உறவும், அஹ்லுஸ்ஸுன்னாக்களுக்கு எதிரான இருசாராரின் நிலைப்பாடும் இக்கொள்கை வளர்ச்சியில் பாரிய தாக்கத்தை உண்டு பண்ணியதாக ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

ஷீஆக்களை சில ஆதரிக்கும் முஃதஸிலாக் கொள்கை சார்ந்த பிரதம அமைச்சரான 'அஸ்ஸாஹிப் பின் அப்பாத்' என்பவன் அல்காழி அப்துல் ஜப்பார் என்ற முஃதஸிலியை புவைஹிய ஆட்சியின் பிரதம நீதியரசராக நியமித்ததை இதற்கான மற்றொரு சான்றாகக் கொள்ளலாம். இவனைப்பற்றி இமாம் தஹபி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகையில்,

" وكان شيعيًّا معتزليًّا مبتدعاً " ‘இவன் ஒரு ஷீஆவாகவும், முஃதஸிலாக் கொள்கையில் ஊறிப்போன ஒருவனாகவும், பித்அத் வாதியாகவும் காணப்பட்டான்’ என்று குறிப்பிடுகிறார்கள். மிக்ரீஸி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்ற போது

ويقول المقريزي: " إن مذهب الاعتزال فشا تحت ظل الدولة البويهية في العراق وخراسان وما وراء النهر " . (الموسوعة الميسرة )

முஃதஸிலா சித்தாந்தம் புவைஹியர் ஆட்சியின் கீழ் ஈராக், குராஸான், ஈரான் போன்ற நாடுகளில் பரவியதாக குறிப்பிடுகிறார்கள்.

## முஃதஸிலாக்களின் கொள்கை கோட்பாடுகள்.

பகுத்தறிவிற்கு முன்னுரிமை வழங்கும் அனைத்து பிரிவுகளும் அகீதாவிற்கும், ஷரீஆவிற்கும் மாற்றமான பாரதூரமான பல கருத்துக்களை நாளடைவில் வெளியிடுவதுதான் இயல்பானது. அறிவில் காணப்படும் குறைவும், முரண்பாடுமே இதற்கான காரணமாகும்.

ஒரு மனிதன் அல்லாஹ்வின் நாட்டம் இன்றி தனது செயல்களைத் தானே உருவாக்கிக் கொள்கின்றான் என்ற தத்துவத்தையும், பெரும்பாவம் செய்தவரின் நிலைப்பாடு பற்றியும் ஆரம்பகால முஃதஸிலாக்கள் முன்வைத்தனர். நாளடைவில் குர்ஆன், சுன்னாவுக்கு முரணான கருத்துக்களால் இஸ்லாமிய உலகத்தையே அதிரச் செய்தனர். அவை பற்றி அறிவதற்கு முன்னால் இவர்களின் கோட்பாடுகள் بروتوكولات (பொர்டுக்கல்) என்ன என்பது பற்றி அறிவது அவசியமாகும்.

## முஃதஸிலாக்களின் ஐந்து அடிப்படை அம்சங்கள்.

1- அத்தவ்ஹீத். . 1 - التوحيد

2- அல்அத்ல். . 2 - العدل

3- அல்வஃது வல்வயீத். . 3 - الوعد والوعيد

4- அல்மன்ஸிலா பைனல் மன்ஸிலதைன். . 4 - المنزلة بين المنزلتين

5- அல்அம்று பில்மஃறூப் வன்னஹ்ு அனில் முன்கர். 5 - الأمر بالمعروف والنهي عن المنكر

# தெளிவு

**التوحيد - 1- (அத்தவ்ஹீத்).** அவனை (அல்லாஹ்வை)ப்போன்று எதுவும் இல்லை’ என்ற அல்லாஹ்வின் வசனத்தின் பொருளைக் கவனத்தில் கொண்டு தமது கருத்துக்களை முன்வைக்க முனையும் இவர்கள், அல்லாஹ்வின் விஷயத்தில் தவறான பல அடிப்படைகளை உருவாக்கியுள்ளனர்.

இந்த தாரகை மந்திரத்தின் அடிப்படையில் அல்லாஹ்வை மறுமையிலும் ஒருவர் காணமுடியாது என வாதிடுவதுடன், அவனுக்கு பல பண்புகள் உண்டு என்பதையும் மறுக்கின்றினர். இதனால் (نفاة الصفات) ஸிபாத்துக்களை (அல்லாஹ்வின் பண்புகளை)

மறுதலிப்போர் என்ற பெயர் கொண்டும் இப்பரிவனர் அழைக்கப்படுகின்றனர். அல்லாஹ்வுக்கு நல்ல பல பண்புகள் இருப்பதாக கூறுவோரை முஷ்ரிக்கள் என்று அழைக்கின்றனர்.

**العدل -2- (அல்அத்ல்) கழா கத்ரை மறுத்துரைப்பதற்காக இந்த சித்தாந்தத்தை உருவாக்கினர். கழா கத்ரை நம்புவது அல்லாஹ்வின் விஷயத்தில் அநீதி என வாதிடுகின்றனர்.**

அல்லாஹ் அடியார்களின் செயல்களை படைப்பதில்லை. மாற்றமாக அடியார்களே தமது வினைகளைப் படைத்துக் கொள்கின்றனர். அல்லாஹ்வின் நாட்டத்திற்கும் அவற்றிற்கும் இடையில் எவ்வித தொடர்பும் கிடையாது. மனிதர்களால் புரியப்படும் குழப்பம், கொலை, கொள்ளை போன்ற தீய செயல்களை அவன் விரும்பலாமா? இது அவனது நீதிக்கும், தகுதிக்கும் மாறானதாகும். அல்லாஹ் மனிதர்களைப் படைக்கின்ற போது அவர்களுக்கென வழங்கியுள்ள சக்தி, ஆற்றல்கள் மூலம் அவன் விலக்கியவற்றில் இருந்து தவிர்ந்து வாழ்கின்றனர்.

வழிப்பட்டு நடப்பவன், பாவி, ஈமான் கொண்டவன், காபிர் ஆகிய அனைவர்களின் செயல்பாடுகளும் ஒன்றுதான் வெவ்வேறுதான் என முடிவு செய்வது அல்லாஹ்வின் நீதிக்கு பொருத்தமானதல்ல. ஏனெனில் அவன் நாடியதைத்தான் இவர்கள் அனைவர்களும் செய்திருக்கின்றனர். மனிதர்களின் சக்திக்குமீறி எதையும் அல்லாஹ் அவர்களுக்கு கட்டளையிடவேமாட்டான்.

இவர்கள் அடியார்களின் செயல்பாடுகளில் உள்ள நீதியை அல்லாஹ்வின் செயல்பாடுகளில் நீதியானதாகவும், அவசியமானதாகவும் ஆக்கினர். அடியார்களின் செயல்பாடுகளில் உள்ள அநீதியை அல்லாஹ்வின் விஷயத்தில் சாத்தியமற்ற, அவனது விஷயத்தில் தடுக்கப்பட்ட ஒன்றாக ஆக்கினர். அதாவது ஒருவனுக்கு அல்லாஹ்வின் புறத்தில் இருந்து நடைபெறும் துன்பம், சோதனை, தண்டனை, செல்வம், வறுமை போன்றவற்றை அல்லாஹ்வின் நாட்டத்தால் நடந்தது எனவாதிடுவது அநீதி என்றும், அல்லாஹ்வைப் பொறுத்தவரை அது சாத்தியமற்றது என்றும் கூறி நீதி, அநீதி என்ற விஷயத்தில் எப்படி ஒரு அடியானின் விஷயத்தில் அநீதி என்று முடிவு செய்யப்படுமோ அதே போன்று அல்லாஹ்வின் விஷயத்திலும் முடிவு செய்ய வேண்டும் என்ற இந்த தத்துவத்தை முன்வைத்தனர். இதனால் அல்லாஹ் நாடியதைச் செய்பவன், அவன் செய்வது பற்றி யாராலும் அவனை விசாரணை செய்ய முடியாது என்ற அவனது விஷேடமான அதிகாரத்தைப் பாழடித்தனர். இதனால்தான் இவர்கள் ‘அல்கத்ரிய்யா’ ‘கத்ரை மறுப்போர்’ என்றும் அறிஞர்களால் அழைக்கப்படுகின்றனர்.

அடியார்களின் நன்மை, தீமை என்ற இரண்டுடன் தொடர்புடைய அனைத்து செயல்பாடுகளையும் படைத்தவன் அல்லாஹ்வே. குப்ரை படைத்தான் என்பதற்காக அதை செய்யுமாறு சொல்லவில்லை. ஷைத்தானைப் படைத்தான் என்பதற்காக அவனை வழிபடுமாறு அவன் பணிக்கவில்லை. நரகத்தைப்படைத்தான் அதற்காக அதற்குரிய அமல்களைச் செய் எனக் கூறவில்லை. தனது அடியார்களுக்கு அவற்றின் சாதக, பாதகம் அனைத்தையும் தனது தூதர்கள் மூலம் தெளிவாக விளக்கினான்.

**இந்த வழிகேட்டிற்கான காரணம்:**

அல்லாஹ்வின் செயல்பாட்டிலும், பண்புகளிலும் தமது பகுத்தறிவை நுழைத்து, அல்குர்ஆன், மற்றும் அஸ்ஸுன்னாவின் ஆதாரங்களை ஒருதலைப்பட்சமாக அணுகியதுமே இந்தவழிகேடு தோன்ற முக்கிய காரணமாக அமைகிறது.

**{فَعَّالٌ لِمَا يُرِيدُ}[هود:107، البروج:16]** ‘தான் நாடுவதை முழுமையாக செய்பவன் (ஹூத்: வச: 107), (அல்புரூஜ். வச: 16), **{ لَا يُسْأَلُ عَمَّا يَفْعَلُ وَهُمْ يُسْأَلُونَ}[الأنبياء:23 ] அவன் செய்வது பற்றி (யாராலும்) அவன் கேட்கப்படமாட்டான், (மாற்றமாக) அவர்கள் செய்வது பற்றி (அவனால்) அவர்கள் விசாரிக்கப்படுவார்கள். (அல்அன்பியா. வச: 23)** என்றெல்லாம் அல்லாஹ் சொல்வதைப் புரிந்தால் நெருப்பைப் படைத்த அவனே அது

சுடும் என்றவிதியையும் உருவாக்கினான், ஷைத்தானைப் படைத்த அந்த அல்லாஹ்வே அவனது சூழ்ச்சிகளையும், அதிலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்கான வழிமுறைகளையும் கற்றுத்தந்தான். இவ்வாறே அடியார்களுக்கு தமது செயல்கள் விஷயத்திலும் அவன் விருப்பம் அளித்துள்ளான். அதற்றேற்றவாறு அவர்கள் தமது நல்ல, தீய நடவடிக்கைகளைில் ஈடபட பூரண சுதந்திரம் அளித்துள்ளான்

அடியார்களின் செயல்களை அல்லாஹ் படைக்கின்றான் என்பதை மேலும் காண்க: (அஸ்ஸாஃப்பாத். வச:96), (அஸ்ஸு மர்: வச:62), பைத்தியம், நிர்பந்த நிலைக்கு ஆளானவன் போன்றவர்களையே சுதந்திரம் பறிக்கப்ட்டவர்களாகக் கூறுவோம். நாமும் அற்த நிலையில் உள்ளவர்களா என சிந்தித்தால் குழப்பம் நீங்கி, அல்லாஹ்வின் நுட்மானவழிமுறை சரியானதுதான் என்பத புரிந்துவிடும்.

**(பார்க்க: ஷரஹ்அல்அகீதா அத்தஹாவிய்யா. ஸாலிஹ் ஆலுஷ்ஷேக்)**

### 3- அல்வஃது வல்வயீத் , الوعد والوعيد / إنفاذ ا لوعيد - 3

ஷிர்க் அல்லாத பெரும்வாவம் செய்தவர் அதே நிலையில் மரணித்தால் அவரும் -ஷிர்க்குடன் மரணிப்பவர் போல- நிரந்தர நரகவாதியாகும். அவருக்கு பாவமன்னிப்பு கிடைக்காது. என்ற கோட்பாடு.

**இது அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் கோட்பாட்டுடன் முழுமையாக ஒத்துப்போகாத ஒரு கோட்பாடு என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.**

**'ஷபாஅத்'** பற்றி நீண்ட ஹதீஸின் தொடரில்... மறுமையில் அல்லாஹ் அடியார்களுக்கு மத்தியில் தீர்ப்பை முடித்து, நரகவாசிகளில் தான் நாடியோரை தனது அருளால் காப்பற்ற நாடும்போது **'லாயிலாஹ இல்லல்லாஹ்'** கூறியோரில், அல்லாஹ்வுக்கு எவ்வித இணையும்கற்பிக்காத, தான் யாருக்கு அருள் செய்ய விரும்புகின்றானோ அவர்களில் தான் நாடுவோரையே அதிலிருந்து வெளியேற்றுமாறு வானவர்களுக்கு கட்டளையிடுவான். (புகாரி, முஸ்லிம்). என நபிகள் நாயகம் (ع) அவர்கள் கூறிய செய்தியைக் கவனித்தால் ஷிர்கில்லாத, பாவம் செய்த நிலையில் மரணித்த முஸ்லிம்கள் நரகிலிருந்து ஒருநாள் காப்பாற்றப்படுவார்கள் என்பதை விளங்கலாம்.

### 4- அல்மன்ஸி(னு)லா பை(ட)னல் மன்ஸிலதைன்.. المنزلة بين المنزلتين - 4

பெரும்பாவம் செய்தவர் முஃமினும் அல்லாத, காபிரும் அல்லாத இரு நிலைகளுக்கிடையில் வைத்து இவ்வுலகில் கணிக்கப்படுவதுடன், மறுமையில் நிரந்தர நரகத்திற்கு ஆளாகுவார் என்ற கோட்பாடு. முஃதஸிலா சித்தாந்த கோட்பாடு உருவாகியது இந்த விவகாரத்தால்தான் என்பதை முன்னர் கூறியுள்ளோம்.

### 5-الأمر بالمعروف، والنهي عن المنكر - அல்அம்று(ட)பில்மஃறூப்இ வந்நஹ்ய் அனில் முன்கர்.

இஸ்லாத்தைப் பரப்பிடவும், வழிதவறியவர்களுக்கு நேர்வழிகாட்டிடவும் ஒவ்வொருவரும் தத்தமது சக்திக்கு ஏற்ப செயல்படுதல். தெளிவாக எடுத்துரைப்பவர் தமது உரைமூலமும், அறிஞர் அல்லது கல்விமான் தனது கல்விமூலமும், வாழ (ஆயதம்) ஏந்தியவர் வாழ் (ஆயுத) மூலமும் போரிட வேண்டும் எனக் கூறும் இவர்கள் முஸ்லிம் ஆட்சியாளருக்கு எதிராக கிளர்ச்சியில் ஈடுபடுபடவேண்டும் என்ற 'கவாரிஜ்களின்' சித்தாந்தத்தை ஒத்து இருக்கின்றனர்.

முஸ்லிம் மன்னர்கள் பகிரங்கமான குப்ரில் ஈடுபடும் வரை அவர்கள் என்னபாவம் செய்தாலும் அவர்களுக்குக் கட்டுப்பட்டு வாழவேண்டும் என நபி (ع) அவர்கள் கட்டாயப்படுத்தி இருப்பதை உணர்த்தும் ஆதாரபூர்வமான பல ஹதீஸ்கள்

வந்திருக்கின்றன. அவற்றில் ஒன்றிற்கு விளக்கமளிக்கும் இமாம் இப்னு (ட)பத்தால் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்.

... وَقَالَ اِبْن بَطَّال : فِيهِ حُجَّة لِجَمَاعَةِ الْفُقَهَاء فِي وُجُوب لُزُوم جَمَاعَة الْمُسْلِمِينَ وَتَرْك الْخُرُوج عَلَى أَئِمَّة الْجَوْر (فتح الباري لابن حجر – (ج 20 / ص 89)

அநியாயக்கார முஸ்லிம் மன்னர்களுக்கு எதிராக கிளர்ந்தெழுவதை விட்டுவிட்டு, (அந்த மன்னர்களின் கீழிருக்கும்) முஸ்லிம்களின் ஜமாத்தைப் பற்றிக் கொள்வது அவசியம் எனக்கூறும் அறிஞர்கள் கூட்டத்திற்கு இதில் சான்று உள்ளது. (பத்ஹுல் ல்பாரி. 20-89).

**ஹவாரிஜ்கள், முஃதஸிலாக்கள் போன்றோர் பாவம் செய்கின்ற இஸ்லாமிய ஆட்சித் தலைவருக்கு எதிராக கிளர்ச்சி செய்யுமாறு கூறும் தத்துவமானது 'நீங்கள் (ஆட்சித்தலைமைக்கு) செவிசாய்த்து, வழிப்படுங்கள், தெளிவான நிராகரிப்பை (அவர்களிடம்) கண்டாலே தவிர (புகாரி, முஸ்லிம்)** என்ற ஆதாரபூர்வமன நபிமொழிக்கு முற்றிலும் முரணானது என்பதைக்க கவனித்தில் கொள்ள வேண்டும்.

## முஃதஸிலாக்கள் மறுத்துரைக்கும் அம்சங்கள்.

அஹ்லுஸ்ஸு ன்னாக்களுடன், முஃதஸிலாக்கள் பல அம்சங்களில் வேறுபடுகின்றனர். அதனால்தான் வரலாறு நெடுகிலும் அவர்களுக்கும் அஹ்லுஸ்ஸு ன்னாக்களுக்கும் இடையில் எவ்வித உடன்பாடும் எட்டப்படாது இருந்திக்கின்றது என்பதை ஆய்வின் போது அறிய முடிகின்றது. அகீதாவுடன், சட்டத்துடன் சார்ந்த அம்சங்களில் முஃதஸிலாக்களுக்கும், அஹ்லுஸ்ஸு ன்னாக்களுக்கும் இடையில் பல முரண்பாடுகள் காணப்படுகின்றன. அவை பற்றி இங்கு நோக்குவோம்.

## (அகீதா சார்ந்த அம்சங்கள்)

∃ **அல்லாஹ்வின் பண்புகளை நிராகரித்தல்.** அல்லாஹ்வுக்கு பல பண்புகள் இருப்பதாகக் கூறுவது அவனது தகுதிக்கு இழுக்கையும், அவப்பேரையும் தேடித்தரும் என்ற காரணத்தை முன்நிறுத்தி, அவைகளை முழுமையாக மறுப்பதே அவனைத் தூய்மைப்படுத்த வழி என்று வாதிடும் முஃதஸிலாக்கள் பற்றிக் குறிப்பிடும் அரபு இலக்கண, மற்றும் இலக்கியத்துறை அறிஞர் இமாம் இப்னு ஹிஷாம் அவர்கள், ألا ترى أنَّ تسبيحَ المعتزلة اقتضى تعطيل كثير من الصفات (( مغني اللبيب)) 'முஃதஸிலாக்களின் தஸ்பீஹ்-அல்லாஹ்வைத்தூய்மைப்படுத்தல்- (அவனது) அதிகமான பண்புகளைப் பாழடிக்க வழிகோலியுள்ளது' எனக் குறிப்பிடுகிறார்கள்.

**அல்லாஹ் அர்ஷில் இருப்பதை நிரகாரித்தல். (ஆதாரம்: தஹ்தீபுஸ்ஜு ன். இப்னுல்கைய்யிம். பாகம்: 2-396, 408).**

நமது நாட்டிலுள்ள அஷ்அரிய்யா கோட்பாட்டைப் போதிக்கும் பெரும்பாலான அரபுக்கல்லூரிகளில் இன்றும் இந்த அத்வைத சிந்தனையே போதிக்கப்படுகின்றது. அல்ஜலாலைன் என்ற தப்ஸீர் ஆசிரியரே இதை மறுத்துள்ளார்கள் என்பதை இவர்கள் கவனத்தில் கொண்டால் நல்லது. இது பற்றி விரிவான தகவல்கள் 'அல்அஸ்மா, வஸ்ஸிஃபாத்' என்ற நமது ஆய்வில் தரப்பட்டுள்ளது. ஜஹ்மியாக்கள், ஹரூரிய்யாக்கள் (ஹவாரிஜ்களில் ஒரு பிரவினர்) இந்தக் கொள்கையுடையவர்கள் என்பதையும் சிந்தனையில் கொள்ளவும்

∃ **அல்லாஹ்வின் பண்பான பேச்சை மறுத்தல்.**

(நபியே) وَإِنْ أَحَدٌ مِنَ الْمُشْرِكِينَ اسْتَجَارَكَ فَأَجِرْهُ حَتَّى يَسْمَعَ كَلامَ اللَّهِ [التوبة: 6] இணைவைப்பவர்களில் ஒருவன் உம்மிடம் (போர்களத்தில்) புகலிடம்

கோரினாலும் அவன் அல்லாஹ்வின் பேச்சை செவிமடுப்பதற்காக அவனுக்கு நீர் புகலிடம் கொடு. (அத்தவ்பா. வச: 06). என்ற வசனம் அல்லாஹ்வின் பேச்சாகிய குர்ஆனைப்பற்றிக் குறிப்பிடுகின்றது.

இந்தக்குர்ஆன் அல்லாஹ் கூற வானவர்களின் தலைவரான ஜிப்ரீல் (ὺ) அவர்கள் செவியேற்று, அதை அப்படியே நபிகள் நாயகம் (ε) அவர்களுக்கு ஓதிக்காண்பித்தார்கள். நபி (ε) அவர்கள் அதை மணனமிட்டுக் கொண்டார்கள். அவ்வாறின்றி, ஜிப்ரீல் (ὺ) அவர்களின் மனதில் அதை உதிப்பாக்கினான் எனக்கூறுவது அல்லாஹ்வின் பேச்சைத்திசை திருப்புவதாகவே கொள்ளப்படும்.

**'அல்லாஹ் மூஸாவுடன் நிஜமாகவே பேசினான்' (அந்நிஸா: வச:164)** என்ற வசனத்தை ஏறுக்குமாறாக விளக்கம் சொன்னவர்களில் முஃதஸிலாக்கள் முன்னணியில் உள்ளனர். அல்லாஹ்வின் 'பேச்சு' என்று பண்பை பாழடிக்கவே அதை மறுத்து, அதற்கு தவறான விளக்கமும் தருகின்றனர்.

ஒரு வினைச் சொல்லை அதில் இருந்து பெறப்பட்ட வினையடி மூலம் உறுதி செய்கின்றபோது அதற்கு வேறுவிளக்கம் கூற முடியாது என்று அரபு இலக்கணத்துறை அறிஞர்கள் ஏகமனதான கருத்தில் உள்ளனர். என இமாம் நஹ்ஹாஸ் அவர்களை ஆதாரம் காட்டி விளக்கும் இமாம் **இப்னு ஹஜர் அஸ்கலானி (ரஹ்) அவர்கள், இந்த வசனம் முஃதஸிலாக்களின்** கூற்றை மறுத்துரைக்கும் பலமான ஆதாரமாகும் எனக்குறிப்பிடுகிறார்கள் (பார்க்க : பத்ஹுல்பாரி)

## ∃ கத்ரை (விதியை) மறுத்தல்.

'அல்லாஹ் அடியார்களின் செயல்களை நடப்பதற்கு முன்பே ஏற்படுத்தியுள்ளான் என்பதை நம்புவது ஈமானாகும். அவை நடந்த பின்பே அவன் அது பற்றி அறிகிறான் என்பது அல்லாஹ்வின் அறிவில் குறைகாணும் தத்துவமாகும். இதைத்தான் முஃதஸிலாக்கள் செய்கின்றனர். இதனாலேயே இவர்களுக்கு **கத்ரை மறுப்போர் என்ற மற்றொரு பெயர் இவர்களுக்கு வந்தது. இதனால்தான் இமாம் பாஜி (ரஹ்) அவர்கள்,**

**.... وَأَمَّا الْمُعْتَزِلَةُ فَهُمْ طَائِفَةٌ مِنْ الْقَدَرِيَّةِ ، المنتقى – شرح الموطأ – (ج 4 / ص 281)**
**'முஃதஸிலாக்கள் கத்ரிய்யாக்களில் ஒரு பிரிவினர்' என்ற கருத்தை முவத்தாவின் விளக்கவுரையில் குறிப்பிட்டள்ளார்கள்.**

## ∃ அல்குர்ஆன் (அல்லாஹ்விடமிருந்து இறக்கப்படவில்லை மாறாக)படைக்கப்பட்டது எனவாதிடுதல்.

அல்லாஹ்வின் உண்மையான பேச்சாகிய அல்குர்ஆனை அல்லாஹ்விடமிருந்து செவியேற்ற ஜிப்ரீல் (ὺ) அவர்கள், ஓசை வடிவில் நபி (ε) அவர்களுக்கு ஓதிக்காட்டினார்கள். அதன் அடிப்படையில் அவர்கள் அதை மணனம் செய்ததுடன், தமது தோழர்களாள எழுத்தர்களைக் கொண்டு அதை எழுதிக் கொண்டார்கள். அல்குர்ஆன் அல்லாஹ்விடமிருந்து இறக்கியருளப்பட்டதாக அல்குர்ஆன் பல இடங்களில் மிகத் தெளிவாகக் கூறியும் **இல்லை! இல்லை! அது ஏனைய படைப்புகள் போன்றெதொரு படைப்புத்தான் என்ற அழுகிய தத்துவத்தை முன்வைத்தனர்.**

**'அல்லாஹ் அனைத்து பொருட்களையும் படைப்பவன்' (அஸ்ஸுமர்: வச:62)** என்ற வசனத்தில் இடம் பெறும் **'ஷைய்'** என்ற வார்த்தை அல்லாஹ் தவிர்ந்த அனைத்தையும் உள்ளடக்கும் என்பதால் அல்குர்ஆனும் படைக்கப்பட்டது என்ற கோட்பாட்டை முஃதஸிலாக்கள் முன்வைத்தனர்.

இது தவறான ஒரு விளக்கம் என்பதை விளக்கும் இமாம் புகாரியின் ஆசரியரான நுஜைம் பின் ஹம்மாத் (ரஹ்) அவர்கள் **'அல்லாஹ் தனது ஆத்மாவை (தன்னையே) எச்சரிக்கின்றான் '** **(ஆலுஇம்ரன் : வச:28,30)** என்ற வசனத்தில் **'நப்ஸ்'** என்ற சொல் இடம் பெறுகின்றது. அதற்காக **'அனைத்து ஆதமாவும் மரணத்தைச் சுவைத்தே தீரும்** (ஆலுஇம்ரான். 185) என்ற வசனத்தில் இடம் பெறும் வசனத்தில் மரணிக்கும் ஆத்மாக்களில் ஒன்றாக அல்லாஹ்வின் ஆத்மாவும் உள்ளடங்கும் என எப்படிக் கூறமுடியாதோ முடியாதோ, அதே போன்று படைக்கப்பட்ட அனைத்துப் பொருள்களிலும் அல்குர்ஆனும் ஒன்று **எனக் கூறமுடியாது குறிப்பிடுகிறார்கள்.** (பார்க்க : பத்ஹுல் ல்பாரி)

**இலங்கை, இந்தியா போன்ற நாடுகளில்** அகீதாப்பாட நூல்களில் **ஒன்றாக 'நூறுள்ளலாம்' என்ற நூல் போதிக்கப்படுகின்றது. அதில் மூஸா நபி (ங) அவர்கள் அல்லாஹ்வுடன் உரையாடியதை விளக்குகின்ற போது ' அல்லாஹ் தனது ஓசையை ஒருமரத்தின் மீது படைத்தான், அதன் பின்னர் மூஸா (ங) அவர்கள் அதனை செவியேற்றார்கள் என விளக்கம் தருகிறார்கள். இவர்களின் விளக்கம் முஃதஸிலாக்களின் விளக்கத்தை ஒத்ததா? இல்லையா ? என்று சிந்தியுங்கள்.**

அல்லாஹ் அர்ஷின் மீதிருந்து ஜப்ரீல் (ங) அவர்களுடனும், வானவர்களுடன் பேசுவதையும், நபி (ஸ) அவர்கள் மிஃராஜ் சென்றபோது **அல்லாஹ்வுடன் திரைமறைவில் பேசியதையும் எப்படி விளங்கிக் கொள்வார்களோ தெரியவில்லை.**

## ∃ சுவனமும், நரகமும் மறுமையில்தான் படைக்கப்படும்.

நல்லடியார்களுக்கு தயார் செய்யப்பட்டுள்ள சுவனம், இறைமறுப்பாளர்களுக்கு தயார் செய்யப்பட்டுள்ள நரகம், சுவனத்தையும், நரகத்தையும் கண்டேன் போன்ற அல்லாஹ்வின் வசனங்களும், நபிகள் நாயகத்தின் பொன்மொழிகளும் நூற்றுக்கணக்கானது இருக்க அவ்வாறிருப்பது 'வேஷ்ட்' வீண்விரயம் என்றெல்லாம் தத்துவம் பேசி இந்தக் கும்பலே உலகுக்கு கூறினார்கள்.

இதில் விசித்திரம் என்னவென்றால் அல்குர்ஆனும், அஸ்ஸுன்னாவுமே நமது வாழ்வின் வழிகாட்டிகள், ஸஹாபாக்களின் விளக்கங்கள் நமக்கு வேண்டியதில்லை என வாய்கிழியக் கத்தும் இரண்டெழுத்தில் அறியப்பட்ட தவ்ஹீதுப் பிரசங்கி கூட நவீன காலத்தில் இந்தக் கருத்தை முன்வைத்துப் பேசி இருக்கிறார். இவ்வாறு கூறியது அவரின் தக்லீத் வாதிகளுக்கு கொஞ்சம் கூட தவறாகப்படவில்லை.

கப்ரு வணங்கிகள், பித்அத்வாதிகள் மௌட்டீகத்தாலும், தனிமனித நேசத்தாலும் வழிகெட்டது போன்று இவர் தனது பகுத்தறிவால் அடிப்படையான பல விஷயங்களில் வழிதவறிச் செல்கிறார் என்பதைச் சுட்டிக்காட்டினால் பிரித்தறியும் திறமை அற்ற நவீன இவரது மத்ஹபு வாதிகள் அவர் பிழையாகச் சொல்வாரா என்கிறனர்.

கண்ணியமிக்க இமாம்களை ஒருவர் சாதரான பிக்ஹ் விஷயத்தில் பின்பற்றுவதைக் கூட பொருந்திக் கொள்ளாத இந்தக் கூட்டம் இவரை இவ்வாறான விஷயங்களில் பொருந்திக் கொள்கின்றனர் என்றால் நபியின் நிலையில் வைத்தே இவரை மதிக்கிறனரோ என எண்ண வேண்டியுள்ளது. இவரது தர்ஜுமாவின் இரண்டாவது பதிப்பில் 177-வது குறிப்பில் மறுமையில்தான் சுவர்க்கமும், நரகமும் நிறுவப்படும் என்ற கருத்தை அழுத்தமாகக் கூறி இருக்கின்றார்.

## ∃ நரகம் ஒருநாள் முழுமையாக அழிக்கப்படும்.

பாவிகளான காபிர்கள், முஷ்ரிக்கள் தொடர்ந்தும் நரகில் வதைக்கப்படுவது அல்லாஹ்வின் கருணைக்கு மாற்றமாக இருக்கின்ற காரணத்தால் இந்தக் கருத்தை

முன்வைப்பதாகக் கூறும் இவர்கள் நரகமும், அல்லாஹ்வின் தண்டனையும் அவனது கருணைக்கு மாற்றமானது எனக் கூறி நரகம் என்ற ஒன்று இல்லை எனவாதிட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

**'ஓர் அஜமி கண்ட அல்குர்ஆன்'** என்ற நூலின் ஆசிரியரும் இந்தக் கருத்தை அந்த நூலில் 69-வது பக்கத்தில் பிரதிபலித்திருக்கின்றார் என்றால் **உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கின்றதா?**

இமாம் இப்னு தைமிய்யா அவர்களின் சிரேஷ்ட மாணவர்களில் ஒருவரான இமாம் இப்னுல் கையிம் கூட இக்கருத்தைக் கூறி இருக்கிறாரே! என நியாயம் கூறுவார்களானால் மனிதர்கள் மார்க்கத்தின் ஆதாரம் கிடையாது. அதேவேளை 'அல்வாபிலுஸ்ஸைய்யிப்' என்ற நூலில் இக்கருத்தை இப்னுல் கைய்யிம் அவர்கள் மறுத்தள்ளார் என்பதே உண்மை.

## ∃ பெரும்பாவம் செய்த நிலையில் மரணிப்பவர் நிரந்தர நரகவாதி.

பெரும்பாவம் செய்தவர் முஃமினும் அல்ல, காபிரும் அல்ல என்ற இரு நிலைகளுக்கிடையில் இவ்வுலகில் கணிக்கப்படுவதுடன், மறுமையில் நிரந்தர நரகத்திற்கு ஆளாகுவார் என்ற கோட்பாட்டையும் முன்வைக்கின்றனர்.

**'நம்பிக்கை கொண்டவர்களுடன் (நபியாகிய) அவர் பாசமாக இருப்பார் என்ற வசனத்தையும், திருடனுக்கு கருணைகாட்டாது அவனது கரத்தை துண்டிப்பது, விபச்சாரம் செய்தவனுக்கு கசையடி, அல்லது கல்லால் அடித்துக் கொல்லுதல் என்பது போன்ற சட்டங்களை எடுத்துக் கொண்டால் இவ்வாறான பாவச் செயலில் ஈடுபடுபவர்கள் நம்பிக்கையாளர்களாக இல்லாத காரணத்தினால்தான் இந்த சட்டம் நிறைவேற்றப்படுகின்றது என வாதிடுகின்றனர்.**

**நபிகள் நாயகத்தால் உலகில் நிறைவேற்றப்பட்ட குற்றவியல் சட்டங்களில் திருமணம் முடித்தவர் விபச்சாரம் செய்திருந்தால் அவரை கல்லால் அடித்துத் கொல்லுவதாகும். இதை அவரது பாவத்திற்காக நிறைவேற்றிய நபி (ஸ) அவர்கள் அவருக்காக ஜனாஸாத் தொழுகை நடத்தியுள்ளார்கள் என்றால் இது ஈமான் இல்லை என்ற நிலையைச் சொல்லுமா? சிந்திக்க வேண்டும்.**

**இவ்வுலகில் ஆடு, மாடு, ஒட்டகைகள் ஆகிய கால்நடைகளை ஸகாத் கொடுக்காதவர்கள் மறுமையில் அவற்றால் மிதித்து, வேதனை செய்யப்படுவதாகச் சொன்ன நபி (ஸ) அவர்கள், இந்த தண்டையின் பின்** إما إلى الجنة وإما إلى النار **அவருக்கு ஒன்று சுவர்க்கம், அல்லது நரகம் (புகாரி) என்றுதான் கூறினார்களே அன்றி நேரடியான நரகம் என்று கூறவில்லை.**

**அந்த ஹதீஸில் இவர்களுக்கு மாத்திரமல்ல ஈமானுடன் பாவம் செய்வது எவ்வித பாதிப்பையும் உண்டுபண்ணாது எனவாதிடும் மற்றொரு பிரிவினரான 'முர்ஜியா' என்ற குழுவுக்கும் மறுப்பு இருக்கிறது என்பதை அறியவும். (பார்க்க: இமாம் மர்வஸியின் தஃழீமு கத்ரிஸ்ஸலாஹ்.)**

நபிகள் நாயகம் (ஸ) அவர்கள் தனது தோழர்கள் இஸ்லாத்தில் இணையும் போது சில உறுதிமொழிகள் பெறுவார்கள். இறுதியில் நன்மையான ஒன்றில் மாறு செய்யாதீர்கள் எனக்கூறிவிட்டு இதனை நிறைவேற்றி நடப்பவருக்குரிய கூலி அல்லாஹ்விடம் கிடைக்கும், இதற்கு யார் மாறு செய்து, அதற்காக தண்டிக்கப்படுகின்றாரோ அது அவருக்கு (இவ்வுலகில்) பரிகாரமாகும். எவரை அல்லாஹ் மறைத்து விடுகின்றாரோ அவரை (மறுமையில்) அவன் நாடினால் மன்னிப்பான், நாடினால் தண்டிப்பான் எனக் கூறுவார்கள் (புகாரி, முஸ்லிம்).

பாவம் செய்யும் ஒருவர் அல்லாஹ்வின் நாட்டத்தின் அடிப்படையில் நடத்தப்படுவார், அவர் மன்னிக்கப்படலாம், அல்லது தண்டனை பெற்று பின்னர் சுவனம்

செல்லலாம் என்ற கருத்தை அல்லாஹ்வின் தூதர் போதனை செய்திருக்கு அதற்கு மாற்றமான சித்தாந்தத்தை முன்வைக்கும் மு.:.தஸிலாக்கள், ஹவாரிஜ்களின் வாரிசுகளாக இலங்கையில் புதிதாக முளைத்த 'ஜமாத்துல் முஸ்லிமீன்' என்ற அமைப்பும் காணப்படுகின்றது என்ற உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும்.

**ஈமானுடன் இணைத்து நரகம் பற்றி எச்சரிக்கப்படும் 'நஞ்சருந்தி மரணிப்பவன்' மோசடி செய்து மரணிப்பவன்' தற்கொலை செய்து மரணிப்பவன் போன்ற நிரந்தமான நரகம் பற்றி எச்சரிக்கும் அனைத்து நபிமொழிகளையும் இந்த அடிப்படையிலே உபயோகிக்கப்படும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.**

**நம்பிக்கையார்கள் விஷயத்தில் 'நிரந்தர நகரம்' பற்றி என இடம் பெறும் வாசகத்தை அதிக கலாம் என்ற விளக்கத்தைத் தருவதுதான் பல நபிமொழிகளுக்குப் பொருத்தமான விளக்கமாகும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுவது போல**

لِأَنَّ الرِّوَايَات قَدْ صَحَّتْ أَنَّ أَهْل التَّوْحِيد يُعَذَّبُونَ ثُمَّ يُخْرَجُونَ مِنْهَا وَلَا يَخْلُدُونَ (فتح الباري لابن حجر – (ج 4 / ص 438)

இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுவது போன்று 'ஓரிறைக் கொள்கையுடன் (மரணித்த பாவிகளான) தவ்ஹீத்வாதிகள் நரகில் தண்டனை பெற்று, பின்னர் அதிலிருந்து வெளியேறுவார்கள், அதில் நிரந்தமாக இருக்கமாட்டார்கள்.

'விசம் அருந்தியன் நிரந்தரமாக நரகில் இருப்பான்' என்ற ஹதீஸில் இடம் பெறும் 'நிரந்தரம்' என்ற வாசகத்தை ஏற்றுக் கொள்ள முடியாது எனவாதிடும் ஹதீஸ்கலை அறிஞர்களை ஆதாரமாகக் கொள்ளும் அஹ்லுஸ்ஸு ன்னாக்கள் இந்த விஷயத்தில் ஆதாரபூர்வமான பல அறிவிப்புக்களுக்கு 'நிரந்தரம்' என்ற அறிவிப்பு மாற்றமாக இருப்பதற்காகவும் இவ்வாறு கூறுகின்றனர். (பார்க்க: பத்ஹு ல்பாரி)

## ∃ மண்ணறை வேதனை என்பது இல்லை.

ஒருவர் மரணித்த பின்னால் அவரது நல்ல, தீய செயல்களுக்குரிய கூலி வழங்கப்படும் நிரந்நதர நன்மை (சுவர்க்கம்), நிரந்தர, அல்லது தற்காலிக தண்டனை (நரகம்) மறு உலகில்தான் என்பதில் எப்படி சந்தேகப்பட முடியாதோ அதே போன்று மண்ணறையிலும் தற்காலிகமான ஒரு நிகழ்வு இருக்கின்றது என்பதை சந்தேகிப்பது குப்ராகும்.

தவ்ஹீத் என்ற ஓரிறைக் கொள்கையை உரக்கச் செல்லி, அந்தக் கொள்கையில் தடம் புரளாத ஒவ்வொரு தவ்ஹீதவாதியும் இதில் உறுதியாக இருப்பான். அப்படியான ஒரு நிகழ்வு கிடையாது என்று வாதிடுவோராக ஆரம்ப காலத்தில் மு.:.தஸிலாக்கள் காணப்பட்டனர், இப்போது அவர்களின் வாரிசுகளான நவீன மு.:.தஸிலாக்கள் உருவாகுவதாக தகவல்கள் வெளியாகிக் கொண்டிருக்கின்றன.

النَّارُ يُعْرَضُونَ عَلَيْهَا غُدُوًّا وَعَشِيًّا وَيَوْمَ تَقُومُ السَّاعَةُ أَدْخِلُوا آلَ فِرْعَوْنَ أَشَدَّ الْعَذَابِ [المؤمن : 46]

**(பிர்அவ்னுடைய சமூகத்தவரான) அவர்கள் மீது நரகம் காலையிலும், மாலையிலும் எடுத்துக் காண்பிக்கப்படுகின்றது. மறுமைநாள் நிகழும்போது பிர்அவ்னின் சந்ததியினரை மிக்கடுமையான வேதனையில் தள்ளுங்கள் (என்று கூறப்படும்). (அத்: மு.:.மின். வச: 46)**

**இந்த வசனம் பற்றி விளக்குகின்ற அறிஞர் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள்**

هذه الآية أصل كبير في استدلال أهل السنة على عذاب البرزخ في القبور، (تفسير القرآن العظيم لابن كثير - 7 / 146)

மண்ணறையில் வேதனை இருப்பதை நிலைப்படுத்திட அஹ்லுஸ்ஸுன்னாக்கள் இந்த வசனத்தை அடிப்படையான ஒரு ஆதாரமாகக் கொள்கிறார்கள் எனக் குறிப்பிடுகிறார்கள். (பாரக்க: இப்னு கஸீர்).
இப்ராஹீம் அத்தியாயத்தின் 27-வது வசனம் மண்ணறை வேதனை விஷயத்தில் இறங்கியதாக இமாம் புகாரியின் அறிவிப்பில் அறிய முடிகின்றது.

**கப்ருடைய வேதனையை உறுதிப்படுத்தும் பல நபிமொழிகள் வந்துள்ளன. இதன் விபரம் புகாரி, முஸ்லிம் போன்ற கிரந்தங்களிலும், அவற்றின் விளக்க உரைகளிலும் காண்க!**

**அவை பொதுவாக மண்ணறையில் நடைபெறும் வேதனை பற்றிப் பேசுகின்றன. ஹதீஸில் அறிவிக்கப்டும் வேதனைகள் போக ஏனெய எதற்கும் வேதனை இல்லை என்ற முடிவுக்கு வர நமக்கு அதிகாரம் கிடையாது.**

## ∃ பெரும்பாவம் செய்தவருக்காக நபிமார்கள், நம்பிக்கையாளர்கள் போன்றோரால் மறுமையில் செய்யப்படும் ஷிபாரிசை மறுத்தல்.

மண்ணறைகளில் அடங்கப்பட்டிருக்கும் பெரியார்கள் அல்லாஹ்விடம் ஷிபாரிசு செய்வார்கள், தேவைகளை வேண்டித்தருவார்கள் என நம்புவது இணைவைப்பு என்பதில் எள்முளையளவும் சந்தேகமில்லை. **அந்த மன்றாட்டத்தை நாம் இங்கு குறிப்பிடவில்லை.**

**மாற்றமாக மறுமையில் நபிமார்கள், இறைநம்பிக்கையாளர்கள் ஷிர்க் அல்லாத பெரும்வாவங்கள் செய்தநிலையில் மரணித்த, ஓரிறைக் கொள்கையில் உறுதியாக இருந்த, நரகத்தில் நுழைந்துவிட்ட முஸ்லிம் மக்களுக்காகவும், நரகம் செல்லாத மற்றும் சிலரது அந்தஸ்துகள் உயர்த்தப்படவும், இன்னும் சிலர் நரகில் நுழையாதிருக்கவும் செய்யப்படும் ஷிபாரிசையே குறிப்பிடுகின்றோம்.**

ஹவாரிஜ்கள், மு∴தஸிலாக்கள் இறை நம்பிக்கையாளர்களுக்காக செய்யப்படும் இது போன்ற ஷபாஅத்தை மறுக்கின்றனர். குறிப்பாக நரகத்தில் இருந்து காப்பதற்காக செய்யப்படும் பரிந்துரையை குர்ஆன் வசனங்களுக்கு மாற்றமானதாக இருக்கின்றது என்ற காரணத்தின் அடிப்படையில் மறுக்கின்றனர்.

இது ஹவாரிஜ்களின் ஒட்டுமொத்த முடிவு அல்ல. அவர்களில் பெரும்பகுதியினர் அதை முழுமையாக மறுக்கின்றனர். அவர்களில் ஒரு சாரார் ஷ∴பாஅத்தை ஏற்றுக் கொள்கின்றனர், தவ்ஹீத் என்ற பெயரில் உருவாகியுள்ள நவீன மு∴தஸிலாக்கள் இவர்களின் வழியை இன்னும் சில நாட்களில் பின்பற்றினாலும் ஆச்சரியமில்லை.

## ∃அல்லாஹ்வை மறுமையிலும் காண முடியாது என்றவாதம்.

அகிலங்கின் அதிபதியாகி அல்லாஹ்வை இவ்வுலகில் யாராலும் காண முடியாது என்பதுதான் முடி செய்யப்பட்ட முடிவும், உண்மையும். நபிமார்களில் மூஸா (ϑ) அவர்கள் இதற்காக முயற்சி செய்தார்கள், ஆனால் அந்தப்பாக்கியம் கிடைக்கவில்லை. மி∴ராஜின் போதும் நபி (ε) அவர்கள் திரைமறைவில் இருந்தே அல்லாஹ் அவர்களுடன் பேசினார்கள்.

மறுமையில் அந்த இரட்சகனை அடியார்கள் நிச்சயம் காணுவார்கள் என்று அல்குர்ஆனும், நபிகள் நாயகத்தின் நூற்றுக்கணக்கான பொன்மொழிகளும் உறுதி செய்கின்றன. முப்பதிற்கும் மேற்பட்ட நபித்தோழர்கள் மறுமையில் அல்லாஹ்வை

நேரடியாகக் காணுவது பற்றி அறிவிப்பதாக ஹதீஸ்கலை ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

மூஸா நபி (ப) அவர்கள் அல்லாஹ்வைக் காணவேண்டும் என்ற கோரிக்கைவைத்த போது ' நீ என்னைக்காணமுடியாது' என அல்லாஹ் பதில் அளித்த வாசகத்தில் 'லன்' என்ற இடைச்சொல் இடம் பெற்றுள்ளதாகவும், அது என்றுமே காணமுடியாது என்ற கருத்தைத்தான் தரும் என்றும் வாதிடும் இந்தக்கூட்டம், ஈருலகிலும் காணமுடியாது என்ற பொருளைத்தான் தரும் என்றும் கூறுகின்றனர். இது அல்குர்ஆன், மற்றும் அஸ்ஸுன்னாவின் நூற்றுக்கணக்கான ஆதாரங்களுக்கு மாற்றமான விளக்கம் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

## ∃ அல்லாஹ் ஒவ்வொரு இரவிலும் அடிவானத்திற்கு இறங்குவதை மறுத்தல்.

ஆரம்ப காலாத்தில் மு:தஸிலாக்கள்தான் இந்தச் செய்தியை மறுத்தனர், ஆனால் தற்போது இதை மறுக்கும் மு:தஸிலா குஞ்சுகளை பரவலாக இருப்பதாகக் கேள்விப்படுகின்றோம். அவர்கள் எகிப்தைச் சேர்ந்த ரஷீத் ரிழா, முஹம்மத் அப்துஹு போன்றவர்களின் கொள்கைத் தாக்கம் பெற்றவர்களாலும், தமிழ்நாட்டின் பகுத்தறிவுவாதிகள் சிலராலும் இந்தக்கருத்து இப்போது முன்வைக்கப்படுகின்றது.

அல்லாஹ் அர்ஷின் மீது நிலைபெற்றிருக்கின்றான் என் ஒரு வசனம் சொல்ல இந்த ஹதீஸ் இவ்வாறு எப்படி வரலாம். உலகில் ஏதோ ஒரு பகுதி இரவாக இருந்துகொண்டே இருக்குமல்லவா இன்னொரு சந்தேகம் இந்த அறிவாளிகளுக்கு.

இது புகாரி, முஸ்லிம் உள்பட பல நபிமொழிகளில் அறிவிக்கப்பட்டுள்ள ஆதாரபூர்வமான செய்தியாகும். அல்லாஹ்வின் அறிவுக்கும், ஆற்றலுக்கும் தகுதியான அடிப்படையில் அவன் அதைச் செய்வான் என நம்பியவர்களே ஸஹாபாக்கள். ஏழாவது வானம் எம்மாத்திரம் தொலைவில் உள்ளது. நபிகள் நாயகம் (ஸ) அவர்கள் இரவில் ஒரு பகுதியில் கோடான கோடி மைல்களுக்கும் அப்பால் மி:ராஜ் சென்று வந்திருக்கின்றார்களே அது எப்படி சாத்தியாமாயிற்று. சிந்திக்க வேண்டும்.
நபிகள் நாயகத்தின் தோழர்கள் இதை மறுக்காததும், ஹதீஸ்கலை இமாம்கள் இதை தமது நூல்களில் பதிவு செய்த்ததும் இது ஆதாரபூர்வமான செய்திதான் என்பதற்கு மற்றொரு சான்றாகும்.

## ∃ சூனியத்தை முழுமையாக மறுத்தல்.

**சூனியம் என்பது மாயை, வித்தை என்று விளக்கம் சொல்லும்** நவீன மு:தஸிலாக்களை அறிஞர்களாக ஒரு சமுதாயம் ஏற்று, அவர்களை கண்மூடித்தனமாகப் பின்பற்றிக் கொண்டிருக்கிப்பதை நாம் அறிவோம்.

எவர் காலையில் ஏழு அல்அஜ்வா' (வகை பேரீத்தம் பழங்களை ) உண்டுவருகிறாரோ அந்த தினம் அவருக்கு விசமோஜ் சூனியமோ எவ்வித தீங்கையும் ஏற்படுத்தாது என கூறியுள்ளார்கள் (புகாரி) இது சூனியம் இருக்கின்றது என்பதையும், அதனால் தீங்குகள் நடக்கலாம் என்பதையும் உணர்த்தவில்லையா?

**'ஏழு பெரும்பாவங்களில் 'சூனியம் செய்தல்' என்பதும்** ஒன்று என நபிகள் நாயகம் (ஸ) அவர்கள் மொழிந்த வார்த்தை அரபு வார்த்தையா, அல்லது சுத்த சூனியம் என்ற தமிழ்' வார்த்தையா ? என்பதை சூனியத்தை மறுப்போர் சிந்திக்க வேண்டும்.

சூனியம் என்றால் 'வித்தை' 'பிராடு' 'மாயாஜாலம்' 'கற்பனை' 'சுத்த சூனியம்' (ஒன்றுமில்லை) போன்ற வாதங்கள் 'குப்ர்' இறைமறுப்புக்கு இட்டுச் செல்லும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

மனிதனில் தாக்கத்தை ஏற்படுத்தாத, பிராடு வார்த்தையைக் கூறி, அதைப் பெரும்பாவங்களில் ஒன்றாகவும் அல்லாஹ்வின் தூதர் கூறி இருப்பார்களா?

அல்லாஹ்வின் நாட்டத்தின் படி கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் பிரிவினையை (ஷைய்தான்களாகிய) அவர்கள் உண்டுபண்ணலாம் என்ற குர்ஆனின் நிலைப்பாடு பொய்யானதா? **(இஸ்லாத்தின் பார்வையில் சூனியம் என்ற நமது சிறிய ஆய்வை வாசிக்கவும்)**

## ∃ கண்திருஷ்டியை மறுத்தல்.

ஒரு மனிதது மனக்கிடக்கையில் காணப்படும் தீய எண்ணங்களின் பிரதிபலிப்பதாக வெளிப்படுகின்ற, பொறாமை கலந்த ஒரு விசமியின் பார்வை மற்றவன்மீது பட்டு அவனைப் பாதிப்புக்கு உள்ளாக்கும் என்பதை அல்லாஹ்வின் தூதர் வஹியின் அடிப்படையில்தான் உறுதி செய்தார்கள். அரபுக்கள் நம்பிவந்த ஒரு மௌட்டீகத்தைக் கூறி, அதிலிந்து பாதுகாப்பு வேண்டுமாறு போதிக்கவில்லை என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

'கண்ணேறு (கண்திருஷ்டி) உண்மையானது (முஸ்லிமி) என்றும், கழாகத்ர் (முன்னளப்பு) இற்கும், கண்திருஷ்டிக்கும் இடையில் போட்டி நடத்தினால் கண்திருஷ்டிதான் அதனை முந்தும் (முஸ்லிம்). என்றெல்லாம் அல்லாஹ்வின் தூதர் (ε) அவர்கள் கூறியதை முஸ்லிம்களாகிய நாம், மௌட்டீகமான முறையில் அதற்கு மாந்தரீகம் செய்வதை விட்டுவிட்டு, நபி (ε) அவர்கள் காட்டித்தந்த அடிப்படையில் மருந்து செய்ய வேண்டும்.

## ∃ ஹவ்ளுல் கவ்ஸர் நீர் தடாகத்தை நிராகரித்தல்.

மஹ்ஷர் முற்ற வெளியில் முஹம்மத் (ε) அவர்களின் சமுதாயத்திற்காக அல்லாஹ் தயாரித்து வைத்திருக்கும் நீர்த்தடாகமே இது. அப்படி ஒன்றும் இருக்க முடியாது, பகுத்தறிவு அதனை ஏற்றுக் கொள்ளவில்லை எனக்காரணம் கூறி முஃதஸிலாக்கள் மறுத்தாலும் இப்படியான ஒரு நீர்த்தடாகம் இருப்பதாகவும், அதில் இருந்து தனது உம்மத் நீர் பருகும் என்றும் குறிப்பிட்ட நபி (ε) அவர்கள் மார்க்கத்தின் பெயரால் புதியவைகளை தோற்றுவித்தோர் அதை நெருங்கும் போது மலக்குகளால் அங்கிருந்து விரட்டி அடிக்கப்படுவர் என்றும் எச்சரித்துள்ளார்கள். (புகாரி, முஸ்லிம்).

மறுமையில் சூரியன் ஒரு மைல் தொலைவில் நிறுத்தப்படுகின்ற போது கடுமையான தாயகத்தை மக்கள் உணர்வார்கள். அதற்காக தண்ணீரைத் தேடி அலைவார்கள் என்பதையும் பகுத்தறிவுதான் கூறுகின்றது. அதற்குப்பதில்தான் 'அந்த தண்ணீர் தடாகம்'.

## ∃ சுன்னாவை நிராகரித்தல்.

அல்குர்ஆனுக்கும், பகுத்தறிவிற்கும் எதிராக அமைவதாக இவர்களாக முடிவுசெய்கின்ற ஆதாரபூர்வமான சுன்னாக்களை உடனே உதறித் தள்ளிவிடுவர். ஹவாரிஜ்களும் இவ்வாறே செய்தனர். நவீன பகுத்தறிவுவாதிகள் நபிகள் நயாகம் (ε) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது பற்றி முஸ்லிம் அல்லாதவர்கள் குறுக்கு விசாரணை செய்கிறார்கள் என்பதற்காக மறுத்துவிடுகின்றனர். இது போன்ற இன்னும் பல ஆதாரபூர்மான ஹதீஸ்களையும் மறுக்கின்றனர். இதுவே பிற்காலத்தில் **'குர்ஆன் மட்டும் போதும்' என்ற வழிகெட்ட பிரிவை தோற்றுவிக்க காரணமாக அமைந்தது. நமது இரண்டெழுத்து தாயி அவர்களும் இந்த சித்தாந்தத்தை தோற்றுவித்துள்ளார் அதன் விளைவை மக்கள் கூடிகதியில் அனுபவிப்பார்கள்.**

## ∃ ஸஹாபாக்களை குறை காணுதல்.

ஸஹாபாக்களை குறை காணும் தீய வழிமுறையை முதல்முதலில் தோற்றுவித்தவர்கள் ஹவாரிஜ்களே! அதன் பின்னர் ஷீஆக்கள் இந்த வழியைத் தொடர்ந்தார்கள். இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய மிகக் கெட்ட பிரிவு ஷீஆப்பிரிவினர் என்பது வரலாற்று உண்மை.

முஃதஸிலாக்கள் அலி (τ) அவர்களை காபிர், தீயவர் என்றெல்லாம் வாதிடுகின்றனர். ஹவாரிஜ்கள், மற்றும் முஃதஸிலா சிந்தனைத்தாக்கம் பெற்ற பலர் இவ்வாறே கூறி வந்தனர். **'அந்த எழுபத்தி இரண்டு கூட்டங்கள்'** என்ற தலைப்பில் உரை நிகழ்த்திய இரண்டெழுத்து பகுத்தறிவுவாதி 'உஸ்மான்' (τ) அவர்களுக்கு ஆட்சி நடத்தத் தெரியாது, மாமன், மச்சான், குடும்பத்தினருக்கு பொறுப்புக்களைக் கொடுத்து வெறுப்புக்களைத் தேடிக் கொண்டார், அபூபக்கர் (τ) அவர்களின் மகன் முஹம்மத் என்பவர் ஒரு ரவ்டி என்றெல்லாம் பேசி இருப்பதும் இவர்களின் சிந்தனைத்தாக்கமே!

## நவீன காலத்தில்.

இந்த நூற்றாண்டிலும் சரி, சென்ற நூற்றாண்டிலும் சரி இந்த சிந்தனைத்தாக்கத்திற்கு பல அறிஞர்கள் ஆளாகி இருக்கிறார்கள். உதாராணமாக எகிப்து நாட்டைச் சேர்ந்த ரஷீத் ரிழா, முஹம்மத் அப்துஹு , முஹம்மத் அல்கஸ்ஸாலி போன்றவர்களைக் குறிப்பிட முடியும்.

இவர்களின் நூல்களில் இருந்து காப்பியடிக்கும் தமிழக அறிஞர்கள் பலர் அதன் தாக்கத்தால் இந்த சிந்தனையில் உருவாகிக் கொண்டிருக்கின்றார்கள். குர்ஆன் மட்டும் போதும் என்ற சமுதாயத்திற்கு உறுப்பினர் சேர்க்கும் வேலையை இவர்களே செய்து கொண்டிருக்கின்றார்கள்.

## ∃ வழிகெட்ட சிந்தனைப் பிரிவுகளை முதலில் முறியடித்தோர் நபித்தோழர்களே!

நபிகள் நாயகம் (ε) அவர்களின் மரணத்தின் பின்னர் பொய்யன் முஸைலமாவிற்கும், அவனைப்பின் பற்றிய வழிகேடர்களுக்கும், பொய்யன் துலைஹாவிற்கும், மதம் மாறியவர்களுக்கும், தொழுவோம், ஸகாத் தரமாட்டோம் என வாதிட்டவர்களுக்கும் எதிரான கலீபா அபூபக்கர் (τ) அவர்களின் நிலைப்பாட்டையும், துணிச்சலான அவர்களின் போரையும், இந்தக்கும்பலை அடியோடு அவர்கள் கிள்ளி எறிந்ததையும் கவனத்தில் கொள்ளும் முஸ்லிம் வழிகெட்ட பிரிவினர்கள் விஷயத்தில் நபித்தோழர்கள் அனைவரின் நிலைப்பாடு என்னவாக இருந்துள்ளது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்வார்.

நபி (ε) அவர்களின் முன்னறிவிப்பின் படி அலி (τ) அவர்களின் ஆட்சியில் தோற்றம் பெற்ற வழிகெட்ட கவாரிஜ்களோடு அலி (τ) அவர்கள், இப்னு அப்பாஸ் (τ) அவர்கள் போன்ற நபித்தோழர்கள் விவாதம் செய்த வரலாற்றைப் பார்க்கின்றோம்.

ஹவாரிஜ்களின் சிந்தனைத்தாக்கம் பெற்ற பலர் ஜாபிர் (τ) அவர்களை மதீனாவில் சந்தித்து, தமது சந்தேகங்களுக்கான திருப்திகரமான பதிலைப் பெற்றுச் சென்ற செய்தியையும் பார்த்தால் வழிகெட்ட பிரிவுகளின் தோற்றத்திற்கான காரணிகளைக்கண்டறிந்து ஸஹாபாக்கள் செயல்பட்டுள்ளனர் என்பதை அறியலாம்.

அதே போன்று, அப்துல்லாஹ் பின் உமர் (τ) அவர்களிடம் 'கத்ரை' மறுக்கும் 'கத்ரிய்யாக்கள்' பற்றிக் முறைப்பாடு செய்யப்பட்ட போது அதற்கான தக்க சான்றை எடுத்துக்காட்டிய இப்னு உமர் (τ) அவர்கள் 'அவர்களைவிட்டும் நான் ஒதுங்கிக் கொண்டேன், அவர்களும் நம்மை விட்டும் ஒதுங்கியவர்கள்' என்ற பொது அறிவித்தலை வழங்கி இப்பிரிவினைரை அடையாளம் காட்டியதுடன், அவர்களுடனான ஒரு முஸ்லிமின் நிலைப்பாடு எப்படி இருக்க வேண்டும் என்றும் தெளிவுபடுத்தியதைப் பார்க்கின்றோம்.

**இதில் தாபீயீன்களான உமர் பின் அப்தில் அஸீஸ், ஸைத் பின் அலி பின் ஸைனுல் ஆபிதீன், ஹஸனுல் பஸரி, ஷஅபி(ரஹ்), மற்றும் இவர்களின் காலத்து அறிஞர்களான ஸு ஹ்ரி, மற்றும் பல இமாம்கள் களம் இறங்கியுள்ளனர் என்பதைப் பார்க்கின்றோம் (பார்க்க: அல்பிரக்: பைனல் பிரக்) வழிகெட்ட பிரிவினரை அடையாளம் காட்ட அக்கால அறிஞர்கள் கூட்டாக களம் இறங்கியுள்ளனர் என்பதை நாம் இங்கே கவனித்தில் கொள்ள வேண்டும்.**

## ∃ வழிகெட்ட பிரிவுகள் பற்றிய முக்கிய நூல்கள் சில:

**மௌலவிகள், அரபுமொழியில் புலமைமையுள்ள சகோதரர்கள் பலரும் பயன்பெறும் நோக்கில் வழிகெட்ட பிரிவினர் பற்றி இமாம்களால் எழுதப்பட்ட தனியான நூல்களின் விபரம் தரப்படுகின்றது. அதன் பின்னர் அவர்களத நூல்கள், தொகுப்புக்களில் இப்பரிவினர் பற்றி எழுதப்பட்ட முக்கிய சில கருத்துக்கள் பற்றி தரப்படும்.**

(1) خلق أفعال العباد للبخاري **'கல்கு அஃப்ஆலில் இபாத்'** அடியார்களின் செயற்பாடுகள் படைக்கப்பட்டவை என்ற பொருளை உள்ளடக்கிய இந்த நூல் இமாம் புகாரி (ரஹ்) அவர்களால் ஜஹ்மிய்யாக்கள், மற்றும் கத்ரிய்யாக்கள் போன்ற பிரிவினர்களுக்கு எதிராக எழுதப்பட்டது.

( إذا قال لك الجهمي : أنا أكفر برب يزول عن مكانه فقل أنت : أنا أؤمن برب يفعل ما يشاء )

**தனது இடத்தைவிட்டும் இறங்குகின்ற ரப்பை (இரட்சகனை) நான் ஒருபோதும் நம்பத்தயார் இல்லை என ஜஹ்மி ஒருவன் உன்னிடம் கூறினால் 'விரும்பியதை செய்யும் ஆற்றல் உடைய ரப்பை (இரட்சகனை) நான் நம்பிக்கை கொள்கின்றேன். எனக் கூறிவிடு என இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் புழைல் பின் இயாழ் என்ற அறிஞரின் கூற்றை இந்த நூலில்தான் பதிவு செய்துள்ளார்கள்.**

(2) **تأويل مختلف الحديث** للإمام عبدالله بن مسلم بن قتيبة الدِّينوري (213 – 276هـ)

**'தஃவீலு முக்தலஃபில் ஹதீஸ்'** இது இமாம் அபூகுதைபா (ரஹ்) அவர்களால் எழுதப்பட்டது. இதிலும் வழிகெட்ட பிரிவினர்களுக்கான மறுப்பு, குறிப்பாக முஃதஸிலாக்களுக்கான மறுப்பு இருக்கிறது. இவர் ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த அறிஞர்களில் ஒருவர்.

(5) الرد على الجهمية لعثمان بن سعيد الدارمي 'அர்ரத்து அலல்ஜஹ்மிய்யா' ஜஹ்மிய்யாக்களுக்கு எதிரான மறுப்பு என்ற இதன் பொருளின் ஊடாக இதன் உள்ளடக்கத்தை விளங்க முடியும்.

(3) **الرد على الجهمية للإمام** عبد الرحمن ابن **مندة** (383-470 هـ، 993-1078م) 'அர்ரத்து அலல்ஜஹ்மிய்யா' இமாம் தாரமியின் நூலைப் போன்று இதுவும் ஜஹ்மிய்யாக்களுக்கு எதிராக எழுதப்பட்டதாகும்.

**இதே தலைப்பில் இன்னும் பல அறிஞர்களும் எழுதியுள்ளனர் என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.**

(4) **الصفات للدَّارقُطْنِيّ (306 – 385هـ، 918 – 995م) 'அஸ்ஸிபாத்' இது இமாம் தராகுத்னி (ரஹ்) அவர்களால் அல்லாஹ்வின் ஸிபாத்துகளை மறுப்போருக்க எதிராக எழுதப்பட்டது.**

(6) **الإبانة عن أصول الديانة** للإمام أبو الحسن علي بن إسماعيل الأشعري البصري

**'அல்இபானா அன் உஸு லித்தியானா'** அபுல்ஹஸன் அல்அஷ்அரியி என்ற இமாமவர்களால் எழுதப்பட்டது. அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் கொளகைளை விளக்கும் பல நூல்களை முஸ்லிம் உலகுக்கு தந்துள்ளார்கள்.

ஷா∴பி மத்ஹபைப் பின்பற்றும் ஆலிம்கள் அகீதா விஷயத்தில் ஷா∴பி (ரஹ்) அவர்களை விட்டுவிட்டு, இந்த அறிஞரை எடுத்துக் கொண்டாலும் அவரும் இவர்களின் கொள்கைக்கு மாற்றமாகவே பேசியுள்ளார்கள் என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

**(7)** (1066 – 994م ، 458 – 384هـ) / ) **الأسماء والصفات** لأبي بكر البيهقي **'அல்அஸ்மா, வஸ்ஸிபாத்'** **இது இமாம் பைஹகி (ரஹ்) அவர்களால் எழுதப்பட்ட நூலாகும். இவர் ஷாபி (ரஹ்) அவர்களின் பத்வாக்களைப் பாதுகாத்தவர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற அறிஞர் என்பது குறிப்பிடத்தக்கது.**

**(8)'அஸ்ஸு ன்னா' என்ற பெயரில் அகீதாவை உலகுக்கு அறிமுகம் செய்த பல அறிஞர்கள் இருக்கின்றனர். அவர்களில் இமாம்களான அல்கல்லால், இப்னு அபீஆஸிம், அப்துல்லாஹ் பின் அஹ்மத், முஹம்மத் பின் நஸ்ர் அல்மர்வஸி போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.**

**(9)** الشريعة للآجري **'அஷ்ஷரீஆ' இதனை இமாம் அல்-ஆஜு ர்ரி (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள்.**

(**10**) شرح اعتقاد أهل السنة والجماعة للإمام اللالكائي **'இ∴திகாது அஹ்லிஸ்ஸு ன்னா, வல்ஜமாஆ'** இந்நூல் அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் கொள்கை, கோட்பாடுகள் பற்றி மிகத்தெளிவாக பல பாகங்களைக் கொண்டதாகும். இதன் ஆசிரியர் அல்லாலகாயி (ரஹ்) அவர்கள் ஷாபி மத்ஹப் சார்ந்தவர் என்பதைக் குறிப்பிடத்தக்கதாகும்.

**(11)** "الفرق بين الفرق وبيان الفرقة الناجية منهم" للإمام أبي منصور عبد القادر بن طاهر البغدادي (المتوفى سنة 429هـ ) **இமாம் அபூதாஹிர் அல்பக்தாதியின் 'அல்பிரக் பைனல் பிரக்' என்ற நூல் இஸ்லாமிய வரலாற்றில் தோற்றம் பெற்ற வழிகெட்ட சகல பிரிவுகளையும் அடையாளம் காட்டும் நூலாகும். இது ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கிறது.**

∃ **'அல்அஸ்மா, வஸ்ஸிபாத்' விஷயத்தில் வழிகெட்ட பிரிவுகள் பற்றி தமது நூற்களில் ஹதீஸ்கலை அறிஞர்கள் பலரும் பேசியுள்ளனர். இமாம் அபூதாஹிர் அல்பக்தாதி குறிப்பிடுவது போன்று,**

وأما أئمة الحديث، و الإسناد فهم سائرون على هذا المهيع الرشيد، ولا يوصف أحد منهم ببدعة (الفرق بين الفرق ص: 305)

**'ஹதீஸ்கலை அறிஞர்கள் அனைவரும் இந்த தெளிவான வழியில் செல்பவர்கள்தான். அவர்களில் ஒருவர்கூட 'பித்ஆ' என்ற பண்பைக் கொண்டு வர்ணிக்கப்படவில்லை என்ற இமாம் அபூதாஹிர் அல்பக்தாதியின் முத்தான வரி களம் இறங்கிய தாயிகளுக்கு கவன ஈர்ப்பைத் தரும் என்பதை மறுக்க முடியாது. அப்படியான பண்புகளையுடைய சில அறிஞர்களது விபரமே இங்கு தரப்படுகின்றது.**

**(1) இமாம் புகாரி (ரஹ்) அவர்கள்.** இவர்கள் ஜஹ்மிய்யாக்களுக்கு எதிராக தனியான மறுப்பு நூலை எழுதியது மட்டுமின்றி தனது **'அல்ஜாமிவுஸ்ஸஹீஹ்'** எனப்படும் புகாரியில் **'கிதாபுத்தவ்ஹீத்'** என்ற தனியானதொரு அத்தியாயத்தையும் பதிவு செய்து 'அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் அகீதாக் கோட்பாடு பற்றிய சுருக்கமான செய்திகளை தொகுத்து வழங்கி இருக்கிறார்கள்.

**(2)இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள்.** அஹ்லுஸ்ஸு ன்னாக்களின் நம்பிக்கையைப் பிரதிபலிக்கும் வகையிலான நூற்றுக்கணக்கான ஹதீஸ்களை தனது கிரந்தத்தில் பல இடங்களில் பதிவு செய்துள்ளார்கள்.

**(3) இமாம் திர்மிதி (ரஹ்) அவர்கள்.** ஜாமிவுத்திர்மிதி எனும் இவர்களது நூலில் ஸஹாபாக்களின் வழிவந்த அஹ்லுஸ்ஸு ன்னாக்கள் அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகள் விஷயத்தில் கடைப்பிடிக்கும் ஒழுங்கு, விதிகளைச் சுட்டகாட்டுவதோடு, அதனை தானும் ஏற்று, தனது நூலிலும் பதிவு செய்து வைத்துள்ளார்கள்.

இமாமவர்கள் மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த இமாம் புகாரி (ரஹ்) அவர்களின் முக்கியமான மாணவர்களில் ஒருவர் என்பதைக் கவனத்தில் கொள்ளவும். அவர்கள் தனது நூலில் குறிப்பிடுவதைக்கவனியுங்கள்.

(3 / 71) 598 – حَدَّثَنَا أَبُو كُرَيْبٍ مُحَمَّدُ بْنُ الْعَلَاءِ حَدَّثَنَا وَكِيعٌ حَدَّثَنَا عَبَّادُ بْنُ مَنْصُورٍ حَدَّثَنَا الْقَاسِمُ بْنُ مُحَمَّدٍ قَال سَمِعْتُ أَبَا هُرَيْرَةَ يَقُولُ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ اللَّهَ يَقْبَلُ الصَّدَقَةَ وَيَأْخُذُهَا بِيَمِينِهِ فَيُرَبِّيهَا لِأَحَدِكُمْ كَمَا يُرَبِّي أَحَدُكُمْ مُهْرَهُ حَتَّى إِنَّ اللُّقْمَةَ لَتَصِيرُ مِثْلَ أُحُدٍ وَتَصْدِيقُ ذَلِكَ فِي كِتَابِ اللَّهِ عَزَّ وَجَلَّ { أَلَمْ يَعْلَمُوا أَنَّ اللَّهَ هُوَ يَقْبَلُ التَّوْبَةَ عَنْ عِبَادِهِ وَيَأْخُذُ الصَّدَقَاتِ } وَ { يَمْحَقُ اللَّهُ الرِّبَا وَيُرْبِي الصَّدَقَاتِ } قَالَ أَبُو عِيسَى هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ وَقَدْ رُوِيَ عَنْ عَائِشَةَ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ نَحْوَ هَذَا وَقَدْ قَالَ غَيْرُ وَاحِدٍ مِنْ أَهْلِ الْعِلْمِ فِي هَذَا الْحَدِيثِ وَمَا يُشْبِهُ هَذَا مِنْ الرِّوَايَاتِ مِنْ الصِّفَاتِ وَنُزُولِ الرَّبِّ تَبَارَكَ وَتَعَالَى كُلَّ لَيْلَةٍ إِلَى السَّمَاءِ الدُّنْيَا قَالُوا قَدْ تَثْبُتُ الرِّوَايَاتُ فِي هَذَا وَيُؤْمَنُ بِهَا وَلَا يُتَوَهَّمُ وَلَا يُقَالُ كَيْفَ هَكَذَا رُوِيَ عَنْ مَالِكٍ وَسُفْيَانَ بْنِ عُيَيْنَةَ وَعَبْدِ اللَّهِ بْنِ الْمُبَارَكِ أَنَّهُمْ قَالُوا فِي هَذِهِ الْأَحَادِيثِ أَمِرُّوهَا بِلَا كَيْفٍ وَهَكَذَا قَوْلُ أَهْلِ الْعِلْمِ مِنْ أَهْلِ السُّنَّةِ وَالْجَمَاعَةِ وَأَمَّا الْجَهْمِيَّةُ فَأَنْكَرَتْ هَذِهِ الرِّوَايَاتِ وَقَالُوا هَذَا تَشْبِيهٌ وَقَدْ ذَكَرَ اللَّهُ عَزَّ وَجَلَّ فِي غَيْرِ مَوْضِعٍ مِنْ كِتَابِهِ الْيَدَ وَالسَّمْعَ وَالْبَصَرَ فَتَأَوَّلَتْ الْجَهْمِيَّةُ هَذِهِ الْآيَاتِ فَفَسَّرُوهَا عَلَى غَيْرِ مَا فَسَّرَ أَهْلُ الْعِلْمِ وَقَالُوا إِنَّ اللَّهَ لَمْ يَخْلُقْ آدَمَ بِيَدِهِ وَقَالُوا إِنَّ مَعْنَى الْيَدِ هَاهُنَا الْقُوَّةُ و قَالَ إِسْحَقُ بْنُ إِبْرَاهِيمَ إِنَّمَا يَكُونُ التَّشْبِيهُ إِذَا قَالَ يَدٌ كَيَدٍ أَوْ مِثْلُ يَدٍ أَوْ سَمْعٌ كَسَمْعٍ أَوْ مِثْلُ سَمْعٍ فَإِذَا قَالَ سَمْعٌ كَسَمْعٍ أَوْ مِثْلُ سَمْعٍ فَهَذَا التَّشْبِيهُ وَأَمَّا إِذَا قَالَ كَمَا قَالَ اللَّهُ تَعَالَى يَدٌ وَسَمْعٌ وَبَصَرٌ وَلَا يَقُولُ كَيْفَ وَلَا يَقُولُ مِثْلُ سَمْعٍ وَلَا كَسَمْعٍ فَهَذَا لَا يَكُونُ تَشْبِيهًا وَهُوَ كَمَا قَالَ اللَّهُ تَعَالَى فِي كِتَابِهِ { لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ }

நிச்சயமாக அல்லாஹ் தர்மத்தை ஒப்புக்கொள்கின்றான். அதனை தனது வலக்கரத்தினால் எடுத்து, உங்களில் ஒருவர் தனது ஒட்டகக்குட்டியை வளர்ப்பது போன்று அதை அவன் உஹது மலை அளவு மாறும் வரைஅதை வளர்க்கின்றான். அதன் உண்மை நிலை அல்லாஹ்வின் பின்வரும் வசனத்தில் உள்ளது. நிச்சயமாக அல்லாஹ் தனது அடியார்களிடம் இருந்து (அவர்களின்) பாவமன்னிப்பபை ஏற்றுக் கொள்கின்றான். ஸதகாக்களையும் எடுத்துக் கொள்கின்றான். (அத்தவ்பா. வச:103) ) வட்டியை அல்லாஹ் அழிக்கின்றான், தர்மங்களை அவன் வளர்க்கின்றான். (அல்பகரா. வச :276) எனக்குறிப்பிட்ட பின் மேற்படி ஹதீஸ் ஹஸன் எனும் தரத்தில் அமைந்தது என அபூ ஈஸாவாகிய திர்மிதி கூறுகிறார் எனக் குறிப்பிட்ட பின்னர், அன்னை ஆயிஷா (ட) அவர்களின் வழியாகவும் இந்தச் செய்தி அறிவிக்கப்பட்டுள்ளது எனக் குறிப்பிடும் இமாமவர்கள், இந்த ஹதீஸிலும், ஸிபாத்துக்களுடன் தொடர்புடைய இது போன்ற அறிவிப்புக்களிலும், அல்லாஹ் ஒவ்வொரு இரவிலும் அடிவானத்திற்கு இறங்குகிறான் என்பதிலும் அறிஞர்கள் அதை சந்தேகம் கொள்ளாது, நம்பிக்கை கொண்டு, அவற்றை நிலைப்படுத்துவதாகக் குறிப்பிட்டுள்ளனர் என்றும், இப்படி, அப்படி என்ற எந்த தவறான வியக்கமும் இது விஷயத்தில் பேசக் கூடாது என்றும் கூறுகிறார்கள்.

இமாம்களான மாலிக், சுப்யான் பின் உயைனா, அப்துல்லாஹ் பின் அல்முபாரக் போன்றோரின் நிலைப்பாடும் இவ்வாறுதான். இவ்வாறான செய்திகளில் முறைமை கற்பிக்காது அவற்றை அனுகுங்கள் என்றே அவர்கள் கூறுகின்றனர். **'அஹ்லுஸ்ஸு ன்னாவல்ஜமாஆ' எனப்படுவோரின் நிலைப்பாடும் இவ்வாறே.**

அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளைப் பாழடிக்கும் 'ஜஹ்மிய்யாக்கள்' அவற்றை நிலைப்படுத்துவது அல்லாஹ்வுக்கு உருவம் கற்பித்தாகும் என்ற காரணம் கூறி

இந்த அறிவிப்புக்களை மறுப்பர். அல்லாஹ் தனது திருமறையில் கரம், கேள்வி, பார்வை போன்றதைக் கூறி இருக்கின்றான். ஜஹ்மிய்யாக்கள்தான் அவற்றிற்கு அறிஞர் பெருமக்கள் தராத தவறான வியாக்கியானம் தந்து, ஆதமை அல்லாஹ் தனது கரத்தினால் படைத்தான் என இடம் பெறும் வசனத்தில் வரும் 'கரம்' என்பதை வல்லமை என்ற பொருள் தந்தனர். ஒருவர் கை என்பதை, அல்லது கேள்விப்புலன் என்பதை தனது கரம், அல்லது தனது கேள்விப்புலன் எனவரையறு செய்து கூறினால்தான் அந்தப் பொருள் வரும், (பொதுவாகக் கூறுவதால் வராது) எனக்கூறி இஸ்ஹாக் என்பவர் இவர்களின் கூற்றை மறுத்துரைக்கின்றார் என்றும் விளக்கியுள்ளார்கள்.

**(4) இமாம் அபூதாவூத் (ரஹ்) அவர்கள். சுனன் அபீதாவூத் எனும் தனது நூலில்** بَاب فِي الْجَهْمِيَّةِ **'ஜஹ்மிய்யாக்கள்'** பற்றிய பாடம் எனத்தலைப்பிட்டு இந்தப் பிரிவினர்களுக்கு எதிராக மறுப்புக் கூறியுள்ளதைப் பார்க்கிறோம்.

**5) இமாம் இப்னுமாஜா (ரஹ்) அவர்கள் . 'சுனன் இப்னுமாஜா'** எனும் தனது நூலில் بَاب فِيمَاأنكرت الْجَهْمِيَّةِ **'ஜஹ்மிய்யாக்கள் மறுத்தவை'** என்ற பாடத் தலைப்பிட்டுள்ளதைப் பார்க்கலாம்.

**(6) இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்கள்.** தனது முஸ்னத் எனும் கிரந்தத்தில் ஸஃத் பின் உப்பாதா (ر) அவர்களுடன் ரோஷத்துடன் தொடர்பான ஒரு ஹதீஸிற்கு விளக்கம் அளிக்கின்ற போது لَيْسَ حَدِيثٌ أَشَدَّ عَلَى الْجَهْمِيَّةِ مِنْ هَذَا الْحَدِيثِ **'ஜஹ்மிய்யாக்களுக்கு மிகக்கடுமையான (எரிச்சலூட்டும்) செய்தியாக இந்த ஹதீஸை விட வேறு எதுவும் இல்லை எனக்குறிப்பிட்டுள்ளார்கள். (பார்க்க: அஹ்மத். ஹதீஸ் எண்:16474. அல்மக்தபா அஷ்ஷாமிலா நூலகம்).**

**(7) இமாம் முஹம்மத் பின் நஸ்ர் அல்மர்வஸி (ரஹ்) அவர்கள்.**

**تعظيم قدر الصلاة لمحمد بن نصر المروزي 'தஃழீமு கத்ரிஸ்ஸலாஹ்'** என்ற தனது நூலில் **கவாரிஜ்கள், மு**ஃதஸிலாக்கள், ராபிழாக்கள் போன்ற வழிகெட்ட பிரிவினர் முன்னுக்குப்பின் முரண்பாடுபோல தெரியும் ஹதீஸ்களில் ஏறுக்குமாறான விளக்கம் கூறி, வழிகெட்ட பிரிவுகளின் தவறான போக்கை மிகத் தெளிவாக மறுத்துள்ளதைப்பார்க்கலாம். அதே நூலில்

**غلو الخوارج، والمعتزلة، والرافضة في تأويل الأحاديث التي وردت في نفي الإيمان عمن ارتكب الكبيرة . 'பெரும்பாவம் செய்தவரிடம் ஈமான் இல்லாது போகும் எனக் கூறி ஹதீஸ்களுக்கு தவறான விளக்கம் தரும் ஹவாரிஜ்கள், முஃதஸிலாக்கள், ராபிழாக்கள் (ஷீஆக்கள்) ஆகியோரின் எல்லை மீறல்'** எனத் தலைப்பிட்டுள்ளதன் மூலம் இதை அறிந்து கொள்ளலாம்.

**(8) இமாம் தபரானி (ரஹ்) அவர்கள். 'அல்முஃஜமுல் கபீர் ' என்ற தனது நூலில்** بابُ بَيَانِ كُفْرِ الْجَهْمِيَّةِ الضُّلالِ بِرُؤْيَةِ الرَّبِّ عَزَّ وَجَلَّ فِي الْقِيَامَةِ **'மறுமையில் கண்ணியமிக்க அல்லாஹ்வைப் மறுமையில் பார்ப்பதை நிராகரிக்கும் வழிகெட்ட ஜஹ்மியாக்களின் நிராகரிப்பு'** எனத் தலைப்பிட்டு, அதை உறுதி செய்யும் பல நபிமொழிகளை பதிவு செய்துள்ளதைப் பார்க்கின்றோம்.

**(9) இமாம் பகவி (ரஹ்) அவர்கள். ஷரஹுஸ் ஸுன்னா என்ற தனது நூலில்:** **باب الرد على الجهمية 'ஜஹ்மிய்யாக்களுக்கு எதிரான மறுப்பு' என்ற தலைப்பிட்டு 'நிச்சயமாக அல்லாஹ் உறங்குவதும் இல்லை, உறக்கம்**

**அவனுக்கு அவசியமும் இல்லை' என்ற நபிமொழியைக் கொண்டும், மற்றும் பல நபிமொழிகளையும் முன்வைத்து, இப்பிரிவினர்களின் தவறான சிந்தனைக்கு மறுப்புக் கூறுவதைப் பார்க்கின்றோம்.**

**(10)** அஹ்லுஸ்ஸு ன்னாவின் கொள்கைத்தாக்கம் பெற்ற அறிஞர்கள், இவர்களை தப்ஸீர், பிக்ஹ், அரபு இலக்கண, இலக்கியத்துறைகள் என வரையறை செய்து கூற முடியாது. பலர் இதில் பங்கேற்றுள்ளார்கள். அதே போன்று அறிஞர்களான தபரி, இப்னு கஸீர், அல்காஸிமீ, அல்பகவி, அமீன் ஷின்கீதி (ரஹ்) போன்ற தப்ஸீர் கலை அறிஞர்கள் தவறான சிந்தனைப்பிரிவுகளுக்கு மறுப்புக்கூறுவதில் முன்னோடிகளாகக் கொள்ளப்படுகின்றனர்.

## துணை நின்றவை


1) அஹ்மத் அரபாத் அல்காளி. அல்பிக்ருஸ்ஸியாஸி இன்தல் பாதிய்யா, வமவ்கிபுல் கஸ்ஸாலி மின்ஹு

2) அப்துல் காதிர் அல்பக்தாதி (ரஹ்) அல்பிரக் பைனல் பிரக்

3) ஷஹ்ருஸ்தானி. அல்மிலல் வன்னி ஹல்

4) இப்னு ஹஜர் (ரஹ்) அல்அஸ்கலானி. பத்ஹு ல்பாரி.

5) இப்னு ஹஸ்ம் அள்ளாஹிரி. அல்ஃபஸ் ஃபில் மிலல் வந்நஹ்ல்.

6) இப்னு கஸீர் (ரஹ்) அல்பிதாயா வன்னிஹாயா,

7) ஷம்ஸு த்தீன் அத்தஹபி (ரஹ்) ஸியர் அஃலாமின்னுபலா.

8) இப்னு தைமிய்யா. மின்ஹாஜு ஸ்ஸு ன்னா.

9) இப்னுல் கைய்யிம் அல் ஜவ்ஸிய்யா. இஜ்திமாவுல் ஜஜயூஷில் இஸ்லாமிய்யா.

10) அபூஜஃபர் அத்தஹாவி. ஷரஹு ல் அகீததித்தஹாவிய்யா.

11) புகாரி. முஸ்லிம். அபூதாவூத் போன்ற நபிமொழிப் பேழைகள்.

12) அப்துர்ரஹ்மான் அஸ்ஸு த்ரி. அகாயிதுஷ்ஷீஆ அல்இஸ்னை அஷரிய்யா.

13) மதீனா இஸ்லாமியப் பல்கலைக்கழகம் மஜல்லதுல் ஜாமிஅத்தில் இஸ்லாமிய்யா.

14) ஷு ப்ஹாதுல் குர்ஆனிய்யீன் ஹவ்லஸ் ஸு ன்னா அந்நபவிய்யா.

15) ஸயீத் பின் அலி அல்கஹ்தானி பிக்ஹு த்தஃவா பீ ஸஹீஹில் இமாம் அல்புகாரி

16) உஸ்மான் முஹம்மத் அல்ஹமீஸ். சவூதி அரேபியா ஹு க்பதும் மினத்தாரீஹ்.

17) ஸயீத் பின் மிஸ்பர் அல்கஹ்தானி. அல்ஹிக்மத்து பித்தஃவத்தி இலல்லாஹ்.

18) அப்துல் முஹ்ஸின் அல்முதைரி குவைத் பல்கல்கலைக்கழகம்.

19) கலாநிதி. அக்ரம் ஸியாவுல் உமரி மதீனாப் பல்கலைக்கழகம். ஃபித்னனுத்து மக்தலி உஸ்மான் (ரழி)

20) **ஷம்சுத்தீன் அத்தஹபி. அல்முக்னி ஃபிள்ளஅஃபா**

21) இணையம்: றுறுறு. னுநுயெயெ. ஊழஅ)

22) **இணையம்.** (றுறுறு. யடடிரசாயடு. ஊழஅ.

23) அல்பயான் மாதாந்த அரபி சஞ்சிகை. லண்டன்.

24) இமாம் நவவி. ஷரஹு ன்னவவி அலாமுஸ்லிம்.

25) அப்துலர்காதிர் பக்தாதி அல்பிரக் பைனல் பிரக். அல்மிலல் வந்நிஹல். 26) ஷரஹு ல் அகீததித்தஹாவிய்யா.

26) மதீனா இஸ்லாமியப் பல்கலைக்கழகம் அல்மஜல்லத்துல் இஸ்லாமிய்யா.

27) உஸ்மான் பின் முஹம்மத் அல்ஹமீஸ். ஹு க்பதுன் மினத்தாரீஹ்.

28) ஷு ப்ஹாதுல் குர்ஆனிய்யீன் ஹவ்லஸ் ஸு ன்னா அந்நபவிய்யா.

29) ஸாலிஹ் ஆலுஷ்ஷய்க். ஷரஹ்அல்அகீதா அத்தஹாவிய்யா.

30) இப்னு நஸ்ர் அல்மர்வஸி த:ழீமு கத்ரிஸ்ஸலாஹ்

**ஷாமிலா நூலகத்தில் இருந்து.**

## مراجع من مكتبة الشاملة

1) مفاهيم إسلامية – الأوقاف المصرية – (1 /7)

2) القاديانية والبهائية: محمد الخضر حسين ، دار الكتاب العربى بمصر

3) تاريخ المذاهب الإسلامية: محمد أبو زهرة ، دار الفكر العربى بمصر .

4) القاديانية ، نشأتها وتطورها: حسين عيسى عبد الظاهر ، الهيئة العامة لشئون المطابع الأميرية 1973م .

5) أثر البينة فى ظهور القاديانية: د/محمد شامة ، مكتبة وهبة القاهرة 1980م (17-11-2008 )

6) القاديانية، دراسات وتحليل للعلامة إحسان إلهي ظهير ، والعلامة أبو الأعلى المودودي .

**பூரண அறிவுடைய அல்லாஹ்வே என் குறைகளை மறைத்து எனக்கும், எனது பெற்றோருக்கும், அனைத்துலக முஸ்லிம்களுக்கும் மன்னிப்பளிப்பளித்து, எம்மைப் பொருந்திக் கொள்வாயாக!**

**இவண்: எம். ஜே. எம். ரிஸ்வான்**

**மொபைல்:- 0094773730852**

**நு. அயடை: சணைறயெஅெயனயெ71ளூலயாழழ. உழஅ**

**2009-05-09**